டாக்டர் பா. சிவந்தி ஆதித்தனார் அறக்கட்டளைச் சொற்பொழிவு
(அறக்கட்டளை நிறுவியவர் : டாக்டர் பா.சிவந்தி ஆதித்தனார்)
வரிசை எண் : 25

## BIBLIOGRAPHICAL DATA



| | | |
|---|---|---|
| Title of the book | : | Tiṇai varalāṟu |
| Author | : | Dr. V.M.Shajahan Gani<br>Reader (Retired),<br>Tamil Advanced Research Centre,<br>Yadava College, Madurai-625014 |
| General editor | : | Dr. G. Vijayaragavan<br>Director<br>International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus, Tharamani<br>Chennai - 600 113 |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus, Tharamani<br>Chennai - 600 113<br>Ph: 22542992 |
| Publication No. | : | 738 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Year of publication | : | 2012 |
| Paper used | : | 18.6 Kg TNPL Maplitho |
| Size of the book | : | 1/8 Demy |
| Printing type used | : | 10 Point |
| No. of pages | : | x+150 |
| No. of copies | : | 1200 |
| Price | : | Rs. 70/- (Rupees Seventy only) |
| Printed by | : | Lakshmi Agencies<br>23/11, Perumal Mudali Street, Royapettah<br>Chennai -600 014 |
| Subject | : | History of Tamil Landscape civilization |

முனைவர் கோ. விசயராகவன்
எம்.ஏ., எம்.ஃபில்., பி.எட்., பிஎச்.டி.
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - 600 113

## அணிந்துரை

தொன்மைமிக்க மாந்தர்களில் தமிழர் ஓர் இனத்தார் ஆவர். மலைகளில் வாழ்ந்து, உடைமைகளைப் பேணிக்காக்கக் காடுசார் பகுதிகளில் வாழ்ந்து, மேலும் நாகரிகம் அடைந்ததால் நிலமும் நீரும் வளமும் உள்ள மருத நிலத்தில் வாழ்ந்து, வணிகம் பொருட்டு நெய்தல் நிலத்தில் குடியேறிய ஒப்பற்ற, உயர்தனி இனத்தாரே தமிழர். வறட்சிக் காலங்களில் மலைச்சாரல் பகுதிகளும் காடுசார் பகுதிகளும் பாலை நிலங்களாக மாறிய நிலைகளும் தமிழகத்தில் உள்ளன.

நிலங்கள் சார்ந்த வாழ்க்கையைத் தமிழர் இன்றல்ல, நேற்றல்ல பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்தே, கடல்கொண்ட குமரிக் கண்டத்திற்கும் தெற்கேயிருந்தே மேற்கொண்டு வந்தவர்களாக ஆராய்ச்சி அறிஞர்கள் சான்றுகளுடன் நிறுவி வருகின்றனர். உலகில் வேறெங்கும் வேறெந்த இனத்தாரும் மொழியாரும் நானிலங்கள் சார்ந்த நாகரிக வாழ்க்கையை மேற்கொள்ளவில்லை என்ற ஆய்வுப் பொருண்மையை அறிவியல் சார்ந்தும், தமிழிலக்கியம், சிற்பங்கள், ஓவியங்கள், கல்வெட்டுகள் போன்ற ஆவணங்களிலிருந்தும் சான்றுகள் காட்டி இத் **திணை வரலாறு** என்ற சொற்பொழிவு நூல் அமைந்துள்ளது.

தமிழர் வரலாறு பற்றி மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் போன்ற பல அறிஞர்கள் எழுதியுள்ளராயினும், தொல்காப்பியருக்கு வெகுகாலத்திற்கு முன்பே ஏற்பட்டு வந்திருந்த தமிழர்களின் திணைகள் சார்ந்த நாகரிக வரலாற்றைக் கூறும் நூல்கள் தமிழில் எழவில்லை. இந்நிலையில் பேராசிரியர் முனைவர் வெ.மு. ஷாஜகான் கனி அவர்கள் எழுதியுள்ள இந்நூல் பாராட்டுக்குரியதாகும்.

சார்லசு டார்வினின் பரிணாமக் கொள்கையின் அடிப்படையில் மாந்தர்களின் உருவாக்கத்தை ஆராய்ந்து, அம்மாந்தர்களில் முதலாவதாக நாகரிகம் பெற்றவரே தமிழினத்தார் என்றும், தமிழர்களே பலநாடுகளில் தொன்மைக் காலத்தே பரவினர் என்றும், அவர்களின் மொழியாகிய தமிழே அவற்றுள் பரவிற்று என்றும் வரலாற்று முறையிலும், தொல்காப்பியக் கொள்கைகளை அடியொற்றியும், சங்க இலக்கியங்களிலிருந்து சான்றுகள் காட்டியும் இந்நூல் எழு

தலைப்புகளில் எழுதப் பெற்றுள்ளது. குறிப்புகளுடனும், படவிளக்கங்களுடனும், துணைநூல் பட்டியலுடனும் முறையாக இது அமைந்துள்ளது.

> ஆதியில் குறிஞ்சி நிலத்தில் வாழ்க்கையைத் தொடங்கிய மனிதன் அந்த நிலத்திலேயே பரம்பரை பரம்பரையாகப் பல்லாயிரம் ஆண்டுகள் வாழ்ந்து வந்திருக்க வேண்டும். ஆநிரைகளை அவன் சேகரித்து அவற்றைத் தன் உடைமையாகக் கொண்டு வளர்க்கத் தொடங்கிய காலத்திற்குப் பின்னரே புதிய மேய்ச்சல் நிலம் தேடி, முல்லை நிலத்திற்குக் குடிபெயர்ந்திருக்க முடியும். முல்லை நிலத்தில் வேளாண்மைத் தொழிலை அவன் அறிந்து, சிறுகச் சிறுகக் காடுகளை, வயல்களாக அவன் செய்த பின்னரே மருதம் என்ற புதிய நிலம் உருவாகியிருக்க முடியும். ஆழ்கடல் பற்றிய அச்சம் பையப் பைய நீங்கிய ஒரு பிந்திய காலத்திலேயே அவன் கடலை நெருங்கி வாழும் சூழல் உருவாகியிருக்க வேண்டும் . . .

என இந்நூலில் (பக்.4) கூறப்பட்டுள்ளது, தமிழர் நாகரிக வாழ்க்கையை அறிந்து கொள்ளச் செய்கிறது.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருவதோடு தம் தனிப்பட்ட அக்கறையைக் காட்டிவரும் மாண்புமிகு **பள்ளிக்கல்வி, தொல்லியல், விளையாட்டு(ம)இளைஞர் நலம், தமிழ் ஆட்சிமொழி, சட்ட அமைச்சர் என்.ஆர். சிவபதி** அவர்களுக்கு எமது இதயங்கனிந்த நன்றி.

நிறுவனச் செயல்பாட்டுக்கு உறுதுணையாக இருந்துவரும் தமிழக அரசின் **தமிழ் வளர்ச்சி, அறநிலையங்கள் மற்றும் செய்தித் துறைச் செயலாளர் முனைவர் மூ.இராசாராம் இ.ஆ.ப.** அவர்களுக்கும் எமது மனமுவந்த நன்றி.

இவ்வறக்கட்டளையின் எழுத்துருவை மெய்ப்புத் திருத்தம் செய்த முனைவர் ஆ. தசரதன் அவர்களுக்கும் மற்றும் நூல் வெளியீடு தொடர்பான அனைத்து ஏற்பாடுகளையும் செய்த நிறுவனப் பணியாளர்கள், இளநிலை உதவியாளர் மற்றும் தட்டச்சர் திருமதி பா. கௌசல்யா ஆகியோருக்கும் எம் பாராட்டுகள். இந்நூலை அழகுற அச்சிட்டுத் தந்த இலட்சுமி ஏஜென்ஸீஸ் அச்சகத்தாருக்கு எம் பாராட்டுகள்.

**இயக்குநர்**

# முன்னுரை

திணை என்றால் 'ஒழுக்கம்' என்பார்கள். ஒழுக்கம் என்றால்?... ஆங்கில மொழியில் 'டிசிப்ளின்' என்று கூறுகிறார்களே, அதுவா?... நம்மில் பலர் திணை என்றால் என்ன என்று புரியாமலேயே புரிந்ததுபோல நடித்துக் கொண்டிருக்கிறோம். 'திணை' என்று வருமிடங்களை எல்லாம் முதலில் தொகுத்து, அதைப் புரியும்படி எளிமையாக விளக்கியாக வேண்டும்.

இன்னொன்று... உரையாசிரியர்கள் யாரும் சொல்லாத, சுட்டத்தக்க ஓர் உண்மையை இங்கே சொல்ல வேண்டும். வரிசைப்படுத்தப்பட்ட ஏழேழு திணைகளும் ஒரே காலத்தில் தோன்றியவை அல்ல. புறத்திணைகளில் முதலாவதாக உள்ள வெட்சி - ஆதியில் தோன்றிய திணை ஆகும். அப்போது வஞ்சி, உழிஞை முதலான பிற புறத்திணைகள் எதுவும் தோன்றவில்லை. வெட்சி தோன்றிப் பல்லாயிரம் ஆண்டுகளுக்குப் பிறகே வஞ்சி தோன்றியது. இப்படியே வரும் ஏழு திணைகளும் கால இடைவெளியில் தோன்றின. வெட்சி, வஞ்சி என்ற ஏழின் வரிசை வெறும் வைப்பு முறையன்று; அது வரலாற்றுக் கால வரிசையைக் குறிக்கும் நிரல்! தொல்காப்பியர் முதலில் சொன்னது முதலில் நடந்தது; அடுத்துச் சொன்னது (ஒரு கால இடைவெளியில்) அடுத்து நடந்தது. ஏழு திணைகளும் ஒன்றன்பின் ஒன்றாகத் தோன்றியவை. இக்கருத்தை அண்மையில் ஒரு நேர்காணலில் நான் கூறியபோது, அங்கு இருந்த மூத்த தமிழ்ப் பேராசிரியர் ஒருவர் ஆவேசமாக அதை மறுத்தார்.

"எந்த உரையாசிரியராவது அப்படிச் சொல்லியிருக்கிறாரா?" என்று அவர் கேட்டார். சிலருக்கு உரையாசிரியர் சொன்னால், அது தொல்காப்பியரே சொன்ன மாதிரி. "அப்படி உரையாசிரியர்கள் யாரும் சொல்லவில்லை. உரையாசிரியர்கள் பிழையாகக் கூறிய உரைகளும் உண்டு; அவர்கள் சொல்லாமல் விட்டுப்போன உண்மைகளும் உண்டு!" என்று நான் கூறியதைப் பழமையிலூறிய அப்பேராசிரியர் வன்மையாகக் கண்டித்தார். அத்தகைய பேராசான்களுக்கு இந்த நூல் உதவாமல் போகலாம்; இனிவரும் இளைய தலைமுறையினர்க்கு நிச்சயம் உதவும்.

இந்நூலின் கருத்துகள் பலவற்றில் தமிழறிஞர்க்கு உடன்பாடு இருக்காது என்றே எனக்குத் தோன்றுகிறது. குறிப்பாக, ஒவ்வொரு திணையும் ஒவ்வொரு காலத்தில் தோன்றியது, இன்ன திணை இன்ன ஆண்டில் தோன்றியது என்பன உங்களில் பலர்க்கு வேடிக்கையாகவே தோன்றும். வெட்சித்திணைக் காலம் கி.மு.30,000 என்ற எனது கருத்தைப் பலரும் கேலிசெய்வார்கள். இதில் தவறு இருக்கலாம். புதிய கருத்தை முதலில் முன்மொழிய விடுங்கள்; அதில் தவறு இது எனச் சுட்டிக்காட்டுங்கள்; பிறகு உங்கள் அறிவால் அதைச் சரிசெய்யுங்கள்!

வெட்சித்திணைக் காலம் கி.மு.30,000 என்பதை ஏற்றுக்கொள்ளவே முடியாது என்று நீங்கள் கருதினால், வெட்சிப்போர் தோன்றியது எந்த ஆண்டு என்பதை நீங்கள்தான் சரியாகச் சொல்லுங்களேன்...

இப்படி என்னை ஒரு பேராசிரியர் கேட்டதன் விளைவுதான் இந்த நூல்.

'தொல்காப்பியப் புலி' என்று பேரெடுத்த ஒரு பேராசிரியர் மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் இருந்தார். அவரிடம் ஒருநாள் போனேன். தொல்காப்பியப் புறத்திணையியல் இல் என் ஐயத்தினைக் கேட்டேன்.

"வெட்சி தானே குறிஞ்சியது புறனே" (தொல். புறத்.1)

இதற்கு இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் கூறும் உரை சரியா ஐயா? இரண்டும் களவிற்கோடல் என்ற ஒப்புமையால் அதற்கு இது புறமாம். விடுகதையில் வருவது போன்ற ஒப்புமையைத்தான் தொல்காப்பியர் இதில் சொன்னாரா? இது இலக்கணப் பொருளா? என்று கேட்டேன்.

சின்ன வயதில் எங்கள் பாட்டி எனக்கு 'அழிகதை' போடுவாள். எனக்கு அழிக்கத் தெரியாத கதையாகப் போடுவதில் அவளுக்கு ஆனந்தமாக இருக்கும். "கிணத்தைச் சுத்தி அகத்தி மரம். அதென்ன?" என்பாள். எனக்குத் தெரியாது. கடைசியில் அழிகதையை அவளே அழிப்பாள். கண்ணைச் சுற்றி இருக்கும் இமைமுடிகளாம். கிணறு போலக் கண்; அகத்திமரம் போல முடி! ஒத்து இருக்குல்ல?... "வெட்சி குறிஞ்சிக்குப் புறனாயது எவ்வாறெனின், நிரைகோடல் குறிஞ்சிக்குரிய மலைசார்ந்த நிலத்தின்கண் நிகழ்தலானும், அந்நிலத்தின் மக்களாயின் பிறநாட்டு ஆனிரைகளைக் களவிற்கோடல் ஒருபுடை குறிஞ்சிக்கு உரித்தாகிய களவோடு ஒத்தலானும், அதற்கு அது புறனாயிற்று என்க" என்ற உரையும் எனக்கு என் பாட்டியின் விடுகதையை நினைவூட்டியது.

'தொல்காப்பியப்புலி' ஐயாவை மேலும் கேட்டேன். இதற்குப் பின்வரும்,

"வஞ்சி தானே முல்லையது புறனே" (தொல். புறத்.6)

"உழிஞை தானே மருதத்துப் புறனே" (தொல். புறத்.9)

"தும்பை தானே நெய்தலது புறனே" (தொல். புறத்.14)

"வாகை தானே பாலையது புறனே" (தொல். புறத்.18)

"காஞ்சி தானே பெருந்திணைப் புறனே" (தொல். புறத்.22)

"பாடாண் பகுதி கைக்கிளைப் புறனே" (தொல். புறத்.25)

என்ற மாட்டேறு பெறும் நூற்பாக்களுக்கும் உரையாசிரியர்கள் கூறும் உரையை என் அறிவு ஏற்க மறுக்கிறதே... அவர்கள் உரை உங்களுக்குச் சரியாகத் தோன்றுகிறதா, ஐயா?... என்று அவரைக் கேட்டேன்.

அவர் என்னைச் சில வினாடிகள் உற்றுப் பார்த்தார். பிறகு சொன்னார். "சரியாகத் தோன்றவில்லைதான். அதற்கு வேறு எப்படித்தான் உரை சொல்வது? உனக்குத் தெரிந்தால் நீ சொல். சரியான உரை உனக்குச் சொல்லத் தெரியாவிட்டால், அதைத் தவறு என்று சொல்லும் அருகதை உனக்கு இல்லை!" என்று சொல்லிவிட்டு, நகர்ந்து போய்விட்டார்.

அன்றுமுதல் தலையைப் பிய்த்துக்கொண்டு யோசித்தேன். ஒன்றும் புலப்படவில்லை. இடதுசாரிச் சிந்தனையுள்ள என் நண்பர் அருணந்தி என்பவர் பழனியாண்டவர் கலைக்கல்லூரியில் வேதியியல் பேராசிரியர்; தமிழாசிரியர் அல்லர். அவர் எனக்கு 'வரலாற்றியல் பொருள்முதல்வாதம்' பற்றி ஒருநாள் பாடம் எடுத்தார். அப்போது ஒரு பொறிதட்டித் துள்ளிக் குதித்தேன். எங்கெல்ஸ் விளக்கிய இந்த மனிதகுல வரலாற்றைத்தான் தொல்காப்பியர் இவ் வரிகளில் பதிவுசெய்துள்ளார் என்று உணர்ந்தேன்!

அந்த உண்மையை 'மனிதகுல வரலாறும் தொல்காப்பியமும்' என்ற ஒரு கட்டுரையாக, 2006இல் இந்தியப் பல்கலைக்கழகத் தமிழ்ச்சிரியர் மன்றத்தின் (மதுரை காமராசர் பல்கலைக்கழகம்) ஆய்வுக் கோவையில் வெளியிட்டேன். தமிழாசிரியர்களிடையே எந்த ஓர் அசைவும் இல்லை.

அதை வாய்ப்புள்ள மேடைகளிலெல்லாம் சொல்லிவந்தேன். பயனில்லை. இப்போது அது சிறிய நூலாக வெளிவந்துள்ளது. இனியாவது தமிழுலகம் ஆர அமர யோசித்து இதன்மேல் கருத்துச் சொல்லட்டும். இது பெரிய நூலாக வெளிவரும் பொருண்மை கொண்டது. நமது தமிழறிஞர்களின் பொறுமையை மனத்துட் கொண்டு சுருக்கமாகவும் சில படங்களுடனும் தந்துள்ளேன். எதிர்காலத் தமிழகம் தேவையானால் இதனை விரித்து விளக்கிப் பெரிய நூலாக வெளிக்கொண்டுவரட்டும். இந்நூற் கருத்து தவறென்றால் இதைத் திட்டியாவது ஒரு கட்டுரை வரட்டும்; அல்லது தொலைபேசியிலாவது என்னோடு வாதப்போர்க்கு வரட்டும். மகிழ்வேன். இந்த நூல் கூறும் கருத்தில் அக்கறையில்லாதவர்கள் நஷ்டவாளிகள்.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் 2010இல் டாக்டர் மு.வரதராசனார் அறக்கட்டளைச் சொற்பொழிவாகத் 'தமிழ் நாடக வகையும் வரலாறும்' என்ற தலைப்பில் நான் உரையாற்றியபோது, 'திணை வரலாறு' பற்றித் தொடக்கத்தில் சுருக்கமாகக் கூறினேன். அப்போதே இந்த அரங்கில், அது விரிவாக விளக்க வேண்டிய ஒன்று என்ற கருத்து உருவானது. 'தமிழ் நாடக வகையும் வரலாறும்' என்ற நூல் வெளிவந்தபோது அதன் தொடக்கத்தில் சில பக்கங்களில் இடம்பெற்ற செய்திகளின் விரிவான விளக்கமாக இந்த நூல் அமைகிறது.

'திணை வரலாறு' நூல் வெளிவரத் துணைநின்ற உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் மரியாதைக்குரிய இயக்குநர் அவர்களுக்கும் அறிவார்ந்த பேராசிரியப் பெருமக்களுக்கும், குறிப்பாகப் பேராசிரியர் முனைவர் ஆ.தசரதன் அவர்களுக்கும் என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். என் தலைமாணாக்கர் முனைவர் ஆ.மணி, முனைவர் வி.கிளாட்சன், முனைவர் நா.மகாராசன் ஆகியோர்க்கும் என் நன்றி.

- வெ.மு.ஷாஜகான் கனி

## ஆசிரியர் குறிப்பு



1948இல் பிறந்த இவர், மதுரை அமெரிக்கன் கல்லூரியில் வேதியியலில் பட்டம் பெற்றார். பிறகு, தியாகராசர் கல்லூரியில் தமிழில் எம்.ஏ. பட்டமும் மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் இதழியல் மற்றும் மக்கள் தகவலியலில் எம்.ஏ. பட்டமும் முடித்துத் தமிழ் மேடை நாடகங்களை ஆராய்ந்து முனைவர் பட்டமும் பெற்றார்.

1971இல் ஆசிரியர் பணியைத் தொடங்கிய இவர், மதுரை யாதவர் கல்லூரியில் தமிழ் இணைப்பேராசிரியராகப் பணியாற்றி 2005இல் பணிநிறைவு பெற்றார். நாடகமும் திரைப்படமும் இவரது விருப்பமான துறைகள். முறைசாராக் கல்வித்துறைக்கு வீதிநாடகங்கள் பல எழுதிய சிறப்பிற்காக 'டாக்டர் மால்கம் எஸ்.ஆதிசேஷையா விருது' பெற்றார்.

தமிழ் நாடகத் துறையில் இவரது ஆய்வுகள் புதிய அலைகளைத் தோற்றுவித்துள்ளன. 'அரங்கேற்றுகாதை ஆராய்ச்சி' என்ற இவரது நூல் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் வெளியீடாக 2009இல் வெளிவந்தது. தமிழ் இசை, நாடகம் பற்றிய எளிய விளக்கமாக அது விளங்குகிறது. 2010இல் இவர் வெளியிட்ட 'தமிழ் நாடகக் (குறுங்) கலைக்களஞ்சியம்' அந்த ஆண்டின் சிறந்த கலைக்களஞ்சிய நூல் என்ற தமிழக அரசின் விருதினைப் பெற்றது; 13.04.2012 அன்று விருது வழங்கப்பட்டது. 2010இல் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் வெளியீடாக வந்த 'தமிழ் நாடக வகையும் வரலாறும்' என்ற நூல், தமிழ் நாடகத் தோற்றத்தில் இருந்த ஐயங்களைக் களைவதாகவும் 'விழவு' என்றால் நாடகம், 'குறுங்கூளியர்' என்பவர் குறளுரு நாடகக் கலைஞர் (சித்திரக் குள்ளர்) என மெய்ப்பொருள் கூறி விளக்குவதாகவும் அமைந்து புதிய பல செய்திகளை நாடக உலகுக்கு அளித்தது.

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகத். | - | அகத்திணையியல் |
| அகம். | - | அகநானூறு |
| இளம். | - | இளம்பூரணர் |
| உரை ஆ. | - | உரையாசிரியர் |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| கலித். | - | கலித்தொகை |
| கற். | - | கற்பியல் |
| குறள். | - | திருக்குறள் |
| குறிஞ். | - | குறிஞ்சிப்பாட்டு |
| குறுந். | - | குறுந்தொகை |
| சிலப். | - | சிலப்பதிகாரம் |
| சிறுபாண். | - | சிறுபாணாற்றுப்படை |
| செய்யு. | - | செய்யுளியல் |
| சேனா. | - | சேனாவரையர் |
| சோம. | - | சோமசுந்தர பாரதியார் |
| திருமுருகு. | - | திருமுருகாற்றுப்படை |
| திவா. | - | திவாகரம் (நிகண்டு) |
| தொல். | - | தொல்காப்பியம் |
| நச்சி. | - | நச்சினார்க்கினியர் |
| நற். | - | நற்றிணை |
| நெடுநல். | - | நெடுநல்வாடை |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| பட்டினப். | - | பட்டினப்பாலை |
| பதி.ஆ. | - | பதிப்பாசிரியர் |
| பதிற். | - | பதிற்றுப்பத்து |
| பரி. | - | பரிபாடல் |
| பிங். | - | பிங்கலந்தை (நிகண்டு) |
| புறத். | - | புறத்திணையியல் |
| புறம். | - | புறநானூறு |
| பெரும்பாண். | - | பெரும்பாணாற்றுப்படை |
| பேரா. | - | பேராசிரியர் |
| பொருந. | - | பொருநராற்றுப்படை |
| மணி | - | மணிமேகலை |
| மதுரைக். | - | மதுரைக்காஞ்சி |
| மரபு. | - | மரபியல் |
| மலை. | - | மலைபடுகடாம் |
| முல்லைப். | - | முல்லைப்பாட்டு |
| மேலது | - | மேலே காட்டிய நூல் |
| P. | - | Page |
| Pp. | - | Pages |
| Vol. | - | Volume |

# பொருளடக்கம்

# 1. திணை - விளக்கம்



'திணை' என்ற சொல்லுக்குப் பழைய நிகண்டுகள் கூறியுள்ள பொருள், இலக்கண இலக்கியங்களில் வரும் அச்சொல்லுக்கு உரையாசிரியர் தரும் பொருள்கள் ஆகியவற்றை மனத்துட்கொண்டு இன்றைய தமிழறிஞர்கள் திணையைப் புரிந்து அதுபற்றிக் கருத்துரைத்து வருகின்றனர். திணை என்ற சொல்லுக்கு நிகண்டுகளும் பழைய உரைகளும் கூறும் பொருள் சரிதானா?... இதனை இங்குத் தெளிவுறுத்துதல் வேண்டும்.

ஒவ்வொரு நிலத்திலும் வாழ்ந்த சூழலில் பழந்தமிழர் பெற்ற நாகரிக வாழ்க்கையையே புலவர்கள் பாடல்களில் பதிவுசெய்தனர். தொல்காப்பியர் கூறும் 'திணை இலக்கியங்கள்' பற்றி ஆராய்ந்த தமிழண்ணல்,

> தமிழகம் முன்பு இயற்கைச் சூழலில் மலை, காடு, ஆற்றுப் பாசன வயல், கடற்கரை நிலம் என நான்கு சமனிலைப் பகுப்புடன், தனித்தனியான வட்டார வழக்குகளுடன் திகழ்ந்தது. இவற்றில் தோன்றிய மக்கள் வாழ்வியல், நாட்டுப்புறப் பாடல்கள், கலைகள் போல்வனவும் தனித்தனி இயல்புடையனவாய் வளர்ந்தன. இதனால் தமிழிலக்கியம் இந்நில அடிப்படைக் கூறுகளுடனும் இயல்பு களுடனும் 'திணை இலக்கியம்' என, நிலவழிப்பட்ட இலக்கியமாகத் தோன்றி வளரலாயிற்று. இந்நான்கு நிலம் தவிர, மலையும் காடும் சார்ந்த பகுதிகள் கோடை காலத்தில் வறட்சியுற்று, மக்கள் போக்கு வரத்துக்கேற்ற நிலமாயின. இவற்றைச் சுரம் என்றும் பாலை என்றும் அழைத்து, பிரிவு பற்றிய இலக்கியத்தை இப்பின்னணியில் பாடலாயினர். இதனால் திணை இலக்கியம் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என ஐவகைப் பிரிவுகளை உடைய தாயிற்று. **திணை என்ற சொல் முதலில் நிலத்தைக் குறித்துப் பின்னர் அந்நில மக்களின் வாழ்க்கை ஒழுகலாற்றையும் அவ் வொழுகலாற்றைப் பற்றிப் பாடப்பட்ட இலக்கியத்தையும் குறித்தது**[1]

என்று விளக்கினார். அவரே 'மெய்ப்பாடு' பற்றிக் குறிப்பிடும்போது,

> நாடகத்திலிருந்து பெறப்பட்டவற்றுள் இக்கோட்பாடு தலைமையானது. தமிழ்த் திணை இலக்கியமே நாடகத்தினின்றும் பெறப்பட்டதுதான் என்பது வெளிப்படை. திணை என்ற சொல் நிலத்தைக் குறிப்பது போலவே, நாடக 'மேடை'யையும் குறிக்கும் (திண்ணை)[2]

என்று கூறியுள்ளது சிந்திக்கத்தக்கது. திணை என்ற சொல்லுக்குத் 'திண்ணை' என்றும் (பட்டினப்.263, அகம்.167) உரையாசிரியர் கூறியுள்ள பொருள், தமிழண்ணலின் இக்கருத்திற்கு அரண் சேர்க்கலாம்.

'திணைக்கோட்பாட்டின் சமூக அடிப்படைகள்' பற்றி ஆராய்ந்த கார்த்திகேசு சிவத்தம்பி, 'திணை' என்ற சொல் ஒவ்வொரு நிலப்பகுதி யையும் ஒரு குறிப்பிட்ட ஒழுக்க முறையுடன் தொடர்புபடுத்தும் மரபைக் குறிப்பிடும் குறியீடாக விளங்குகிறது என்று கூறுகிறார்.

> ஒவ்வொரு நிலப்பகுதியையும் ஒரு குறிப்பிட்ட ஒழுக்க முறையுடன் தொடர்புபடுத்தும் மரபானது சங்க இலக்கியங்களிலும் காணப்படுகிறது. இந்தக் கருத்தினைக் கூறும் குறியீடாய்த் திணை என்ற சொல் விளங்குகின்றது. தொல்காப்பியர் இந்தச் சொல் குறித்து வரையறை எதனையும் செய்யவில்லை. மிக முந்திய உரையாசிரியரான இளம்பூரணர், இந்தச் சொல்லுக்குப் பொதுக்கருத்து அல்லது உள்ளடக்கம் என்று விளக்கம் கூற முற்படுகிறார். மற்றொரு உரையாசிரியராகிய நச்சினார்க்கினியர் திணை என்னும் சொல்லை ஒழுக்கம் அல்லது நடத்தை என்று வகைப்படுத்திக் கூறுகின்றார்[3]

என்று குறிப்பிடுகின்றாரே தவிர, திணை என்ற சொல் இன்ன பொருளைத் தரும் என்று தம் கருத்தாக எதையும் கூறவில்லை. **"திணை என்ற சொல் ஒவ்வொரு நிலப்பகுதியையும் ஒரு குறிப்பிட்ட ஒழுக்க முறையுடன் தொடர்புபடுத்தும் மரபைக் குறிப்பிடும் குறியீடு"** என்பதைத் திணை பற்றி அவர் தரும் கருத்தாகக் கொள்ளலாம். அதனை 'மரபு' என்பதைவிட 'வரலாறு' என்று கூறுவதே சரியாக இருக்கும் என்பது என் தாழ்மையான கருத்து.

## ஐந்திணை வாழ்க்கை - ஒரே காலமா?

இங்கே ஒரு கேள்வி எழுகிறது. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற வரிசையில் கூறப்படும் ஐந்திணை வாழ்க்கையும் ஆதியில் ஒரே காலத்தில் நடந்ததா? அதாவது, தமிழர் குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்த அதே காலத்திலேயே ஒருசாரார் முல்லை நிலத்திலும் இன்னொரு சாரார் மருத நிலத்திலும் மற்றொரு சாரார் நெய்தல் நிலத்திலும் வறட்சியுற்ற பாலை நிலத்தில் பிறிதொரு சாராரும் ஏக காலத்தில் வாழ்ந்து வந்தனர் என்று கருதினால், அது சரியா?... ஆமாம்; சரிதான் என்றே தமிழறிஞர் பலரும் நம்புகின்றனர். சங்க காலத்தில் அது சரிதான். ஆனால் ஆதியில் படிப்படியாக வளர்ந்து வந்ததுதான் ஐந்திணை வாழ்க்கை!

யானை, குரங்குகளைப் போலவே மனிதனும் மந்தையாக வாழும் இயல்பு உடையவன். ஆதியில் மனிதன் ஒரு குறிப்பிட்ட நிலத்திலேயே வாழ்ந்து வந்த பழக்கத்தை மேற்கொண்டிருந்தான். போகப் போகத் தேவை கருதி அவன் அடுத்த நிலப்பகுதிக்கு நகர்ந்து போயிருக்க வேண்டும். அவ்வாறெனில் மனிதன் முதலில் வாழ்ந்த நிலம் எது?



தமிழர் வரலாறு பற்றி ந.சி.கந்தையா பிள்ளை,

> தமிழரின் தொடக்கம் யாதோ ஒரு மலையிடம் எனத் தெரிகின்றது. தமிழர் பெரிய வெள்ளப் பெருக்குத் தொடர்பாகவும் மலையையே கொண்டனர் [4]

என்று கூறுவர். அவரே பிறிதொரு நூலில்,

> மனிதன் ஆரம்பத்தில் குறிஞ்சி நிலத்திலேயே தனது வாழ்க்கையைத் தொடங்கினான். கொடிய விலங்கினங்களினின்றும் அவனைக் காப்பதற்கேற்ற குகைகள் அங்குத் தானுண்டு [5]

என்பர்.



மாந்தன் தோன்றி வாழ்ந்து படிப்படியாக நாகரிக வளர்ச்சியடைந்த பாதையைப் பாவாணர் விளக்கி வரும் வரிசையில் முதலில் சுட்டும் நிலம் மலைநிலம் ஆகும்.

இயற்கை அல்லது அநாகரிக மாந்தன், இயற்கையாக விளையும் காய்கனி கிழங்குகளையும் வேட்டையாடிப் பெறும் விலங்கு பறவை யிறைச்சியையும்

உண்டு வாழ்வதற்கேற்ற இடம் குறிஞ்சி என்னும் மலைநிலம்; அதற்கடுத்தபடியாக, ஆடுமாடுகளைச் சிறப்பாக வளர்த்தும் வானவாரிப் பயிர்களை விளைத்தும் வாழ்வதற்கு ஏற்ற இடம், புல்வெளியும் குறுங்காடுமுள்ள முல்லை நிலம்; அதற்கடுத்த படியாக, நன்செய்ப் பயிர்களையும் புன்செய்ப் பயிர்களையும் நன்றாக விளைவித்து, நிலையாக வாழ்ந்து, நாளடைவிற் சிற்றூர் பேரூரும் பேரூர் மூதூரும் ஆகி, கைத்தொழிலும் வாணிகமும் வளர்ந்து, கல்வியும் அரசும் நகரும் நகரமும் தோன்றி, மக்கள் நாகரிகம் அடைதற்கேற்ற இடம், நிலவளமும் நீர்வளமும் மிக்க மருத நிலம்; அதற்கடுத்த படியாக, பலவகை மரக்கலங்கள் புனைந்து கடல் கடந்து நீர்வாணிகஞ் செய்து பல்வகைப் பண்டங் கொணர்ந்து நாட்டை வளம் படுத்துவதற்கு ஏற்ற இடம் கடல்சார்ந்த நெய்தல் நிலம்... பாலை யென்பது, முல்லையும் சிறுமலைக் குறிஞ்சியும் முதுவேனில் காலத்தில் நீர்நிலைகளெல்லாம் வற்றி வறண்டு நிலமுஞ் சுடும் நிலை. பின்னர் மழைக் காலத்தில் பாலை நிலம் தளிர்த்தும் நீர் நிரம்பியும் மீண்டும் முல்லையும் குறிஞ்சியுமாக மாறிவிடும். ஆதலால் ஐந்திணைகளுட் பாலைக்கு நிலையான நிலமில்லை. அதனால், ஞாலத்தை நானிலம் என்றனர்[6]

என்று குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் நான்கு நிலங்களின் வாழ்க்கையை அடுத்தடுத்த படிநிலையாக வரிசைப்படுத்தித் தமிழர் வரலாற்றைச் சுருக்கமாக உணர்த்தியிருப்பது மனங்கொள்ளத்தக்கது.

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் நில வாழ்க்கை வழக்கமும் திணை வளர்ச்சியும் காலங்காலமாக ஒன்றையடுத்து மற்றொன்றாக வளர்ந்து வந்ததே ஒழிய, தொடக்கத்தில் எல்லாமும் ஒரே காலத்தில் உருவானவையல்ல என்ற உண்மையை உணர்தல் வேண்டும்.

ஆதியில் குறிஞ்சி நிலத்தில் வாழ்க்கையைத் தொடங்கிய மனிதன் அந்த நிலத்திலேயே பரம்பரை பரம்பரையாகப் பல்லாயிரம் ஆண்டுகள் வாழ்ந்து வந்திருக்க வேண்டும். ஆநிரைகளை அவன் சேகரித்து அவற்றைத் தன் உடைமையாகக் கொண்டு வளர்க்கத்தொடங்கிய காலத்திற்குப் பின்னரே புதிய மேய்ச்சல் நிலம் தேடி, முல்லை நிலத்திற்குக் குடிபெயர்ந்திருக்க முடியும். முல்லை நிலத்தில் வேளாண்மைத் தொழிலை அவன் அறிந்து, சிறுகச் சிறுகக் காடுகளை வயல்களாக அவன் செய்தபின்னரே மருதம் என்ற புதிய நிலம் உருவாகியிருக்க முடியும். ஆழ்கடல் பற்றிய அச்சம் பையப் பைய நீங்கிய ஒரு பிந்திய காலத்திலேயே அவன் கடலை நெருங்கி வாழும் சூழல் உருவாகியிருக்க வேண்டும். தொடக்கத்தில் அவன் வாழ்ந்து பழகிய குறிஞ்சியும் முல்லையும் வறட்சியுற்ற சூழலில் பழகிய இடத்தைப் பிரிய மனமின்றியே அவன் பாலை நிலத்தில் வாழும் வாழ்க்கையில் ஒன்றியிருக்க வேண்டும். இவ்வாறே வாழ்க்கைத் தேவை காரணமாக மனிதன் ஒவ்வொரு நில வாழ்க்கையையும் அடுத்தடுத்துப் பெற்றான் எனத் தெரிகிறது. **அவன் குறிஞ்சி நிலத்திலிருந்து பற்பல ஆயிரம் ஆண்டு இடைவெளியில் முல்லை, மருதம் என ஒவ்வொரு நில வாழ்க்கைக்கும் மாறி மாறி வாழ்ந்து வந்திருக்கிறான்! இந்த**

**உண்மையை ஐயமின்றி உணரும் அறிவே, தமிழரின் திணை வரலாற்றைச் சரியாகப் புரிந்துகொள்ளத் துணைசெய்யும் அடிப்படை அறிவாகும்.**

## திணை - வேர்ச்சொல் ஆய்வு

'திணை' என்ற சொல்லின் வேர்ச்சொல் 'திண்' என்பதாகும். 'திண்' என்ற சொல் பலம், வலிமை, நெருக்கம், செறிவு என்று பொருள்படும்.

"திண்மையென்பது வலியெனலாகும்" (அகராதி நிகண்டு 1820)

'திண்ணியர்' என்றால் வலியவர், உறுதியுடையவர் என்று பொருள்படும்.

எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின் (குறள்.666)

என்ற திருக்குறள் இதற்குச் சான்று. 'திண்' என்ற சொல் வலிமை என்ற பொருளில் சங்கப் பாடல்களில் 28 இடங்களில் வந்துள்ளது.

"நுண்பூ ணாகம் திளைப்பத் திண்காழ்" (திருமுருகு.32)
"கூடத் திண்ணிசை வெரீஇ மாடத்து" (பெரும்பாண்.438)
"இரவுபகல் செய்யும் திண்பிடி ஒள்வாள்" (முல்லைப்.46)
"திருமணி விளக்கங் காட்டித் திண்ஞாண்" (முல்லைப்.63)
"திண்காழ் ஏற்ற வியலிரு விலோதம்" (மதுரைக்.449)
"திருத்துஞ்சும் திண்காப்பில்" (பட்டினப்.41)
"செறிவுடைத் திண்காப் பேறி வாள்கழித்து" (பட்டினப்.226)
"திண்திமில் எண்ணும் தண்கடல் சேர்ப்ப" (நற்,331)
"திண்திமில் விளக்கம் எண்ணும்" (நற்.372)
"திண்திமில் பரதவர் ஒண்சுடர்க் கொளீஇ" (நற்.388)
"திண்பிணி அம்பியில் தோன்றும் ஊர" (ஐங்.98)
"திண்பிணி எஃகம் புலியுறை கழிப்ப" (பதிற்.19)
"பொன்செய் கணிச்சித் திண்பிணி யுடைத்து" (பதிற்.22)
"உத்தி ஒருகாழ் நூலுத்தரியத் திண்பிடி" (கலித்.96: 13)
"தண்துறை ஊரன் திண்தார் அகலம்" (அகம்.56)
"மடையமை திண்கரை மாக்காழ் வேலொடு" (அகம்.119)
"திண்ணிலை எயிற்ற செந்நாய் எடுத்தலின்" (அகம்.199)
"திரைச்சுரம் உழந்த திண்திமில் விளக்கில்" (அகம்.240)
"திண்கால் உறியன் பானையன் அதளன்" (அகம்.274)
"கண்பொருது இமைக்கும் திண்மணி கிளர்ப்ப" (அகம்.282)

*"விண்பொரக் கழித்த திண்பிடி ஒள்வாள்" (அகம்.338)*

*"வண்டிமிர் நறுஞ்சாந்து அணிகுவம் திண்திமில்" (அகம்.340)*

*"திண்திமில் வன்பரதவர்" (புறம்.24)*

*"நிலைதிரிபு எறியத் திண்மடை கலங்கி" (புறம்.25)*

*"திறவாது அடைத்த திண்ணிலைக் கதவின்" (புறம்.44)*

*"திண்கதிர்த் திகிரி திரிதரக் குறைத்த" (புறம்.175)*

*"திறவோர் புகழ்ந்த திண்அன் பினனே" (புறம்.221)*

*"எழுவிட் டமைத்த திண்ணிலைக் கதவின்" (புறம்.341)*

என்ற அனைத்து இடங்களிலும் 'திண்' என்ற சொல் உறுதியான, வலிமையான என்ற பொருளில் வந்துள்ளது.

உறுதியானதாகத் திட்பமாக நிலைபெற்ற நிலம் 'திணை' எனப்பட்டது. சமூக வழக்கில் நல்லது கெட்டது அறிந்து திட்பமாகப் பேணப்பட்ட ஒழுக்கமும் (பண்பும்) 'திணை' என்று சுட்டப்பட்டது எனத் தெரிகிறது.

தொல்காப்பியத்தின் மூன்று அதிகாரங்களிலும் 'திணை' என்ற சொல் பயின்று வந்துள்ள இடங்கள் மொத்தம் (2+35+25=62) 62 ஆகும். அவற்றைத் தொகுத்து உரை காணின், இதில் தெளிவு கிடைக்கலாம்.

"உயர்திணைப் பெயரே அஃறிணைப் பெயரென்று
ஆயிரண்டு என்ப பெயர்நிலைச் சுட்டே" (தொல்.I - 117)

இந் நூற்பாவினுக்கு இளம்பூரணர், "

உயர்திணைப் பெயரும் அஃறிணைப் பெயருமாகிய அவ்விரண்டுமென்று சொல்லும், பெயராகிய நிலைமையது கருத்தினை [7]

என்று உயர்திணை, அஃறிணை என்பவற்றை அவ்வாறே குறிப்பிட்டுள்ளார். 'திணை' என்று தொல்காப்பியத்தில் முதன்முதலில் வரும் இடமான இந்த நூற்பாவிற்கு உரையெழுதும் இளம்பூரணர் திணை என்பதற்குப் பொருள்விளக்கம் கூறினாரிலர். இதற்கு நச்சினார்க்கினியர்,

உயர்திணைப் பொருளை ஒருவர் கருதுதற்குக் காரணமான பெயரும் அஃறிணைப் பொருளை ஒருவன் கருதுதற்குக் காரணமான பெயரும் என்னும் அவ்விரண்டென்று கூறுவர் ஆசிரியர் (எ-று) [8]

என்றே உரை எழுதியுள்ளார். இவரும் 'திணை' என்ற சொல்லுக்குப் பொருள்விளக்கம் தரவில்லை. (அது யாவரும் அறிந்த சொல் என விடுத்தனர் போலும்.)

"உயர்திணை அஃறிணை ஆயிரு மருங்கின்
ஐம்பா லறியும் பண்புதொகு மொழியும்" (தொல்.I - 482)

'திணை' என்ற சொல் இரண்டாவதாக இடம்பெறும் இந்நூற்பாவுக்கு இளம்பூரணர்,

உயர்திணை அஃறிணையாகிய அவ்விரண்டு திணை யிடத்தும் உளவாய ஐந்து பாலினையும் அறியவரும் பண்புத்தொகை மொழிகளும் [9]

என்று உரைகூறினர்; திணைக்கு விளக்கம் கூறவில்லை. நச்சினார்க்கினியர்,

உயர்திணை அஃறிணை யென்னும் அவ்விரண்டிடத் தும் உளவாகிய, ஐம்பாலறியும் பண்புதொகு மொழியும் [10]

என்று இதற்கு உரைகூறினார்; இங்கும் திணைக்குப் பொருள்விளக்கம் கூறவில்லை.

எழுத்ததிகாரத்தில் இரண்டு இடங்களில் மட்டுமே 'திணை' என்ற சொல் வந்துள்ளது. அது சொல்லதிகாரத்தில் 35 நூற்பாக்களில் வந்துள்ளது.

"உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே
அஃறிணை என்மனார் அவரல பிறவே
ஆயிரு திணையின் இசைக்குமன் சொல்லே" (தொல்.II - 1)

சொல்லதிகாரத்தில் 'திணை' என்ற சொல் முதலில் வரும் இடமான இந்நூற்பாவிற்குச் சேனாவரையர்,

மக்களென்று கருதப்படும் பொருளை ஆசிரியர் உயர்திணையென்று சொல்லுவர். மக்களென்று கருதப்படாத பிறபொருளை அஃறிணையென்று சொல்லுவர். அவ்விரு திணைமேலும் சொற்கள் நிகழும் என்றவாறு. எனவே உயர்திணைச் சொல்லும் அஃறிணைச் சொல்லும் எனச் சொல் இரண்டு என்றவாறாம். மக்கட்சாதி சிறந்தமையான், 'உயர்திணை' என்றார் [11]

என்று கூறுவதால், திணை என்ற சொல் 'சாதி' என்ற பொருளைத் தரும் என்று உணரமுடிகிறது. நச்சினார்க்கினியர் இதற்கு எழுதிய உரையில்

உயர்திணை என்பது உயர்ந்த ஒழுக்கம். ... அஃறிணை அவ்வொழுக்கம் அல்லவாகிய ஒழுக்கம் [12]

என்று கூறுவதால், திணை என்ற சொல் 'ஒழுக்கம்' என்று பொருள்படும் என்று அவர் கருதுவது புலனாகின்றது. பின்வரும் நூற்பாக்களில் வரும் திணை என்பதற்கும் இதே பொருள் கொள்ளலாம்.

"ஆடூஉ அறிசொல் மகடூஉ அறிசொல்
பல்லோர் அறியும் சொல்லொடு சிவணி
அம்முப் பால்சொல் உயர்திணை யவ்வே" (தொல்.II - 2)

"ஒன்று அறிசொல்லே பலஅறி சொல்லென்று
ஆயிரு பால்சொல் அஃறிணை யவ்வே" (தொல்.II - 3)

"பெண்மை சுட்டிய உயர்திணை மருங்கின்
ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவியும்
தெய்வம் சுட்டிய பெயர்நிலைக் கிளவியும்

இவ்வென அறியும் அந்தம் தமக்கிலவே
உயர்திணை மருங்கின் பால்பிரிந் திசைக்கும்" (தொல்.II - 4)

"இருதிணை மருங்கின் ஐம்பால் அறிய" (தொல்.II - 10)

"உருவென மொழியினும் அஃறிணைப் பிரிப்பினும்
இருவீற்றும் உரித்தே சுட்டுங் காலை" (தொல்.II - 24)

"தன்மைச் சொல்லே அஃறிணைக் கிளவிஎன்று
எண்ணுவழி மருங்கின் விரவுதல் வரையார்" (தொல்.II - 43)

"வியங்கோள் எண்ணுப்பெயர் திணைவிரவு வரையார்" (தொல்.II - 45)

"உயர்திணை மருங்கினும் அஃறிணை மருங்கினும்" (தொல்.II - 49)

"பலவயினானும் எண்ணுத்திணை விரவுப் பெயர்
அஃறிணை முடிபின செய்யு ளுள்ளே" (தொல்.II - 51)

"முன்னத்தின் உணரும் கிளவி எல்லாம்
உயர்திணை மருங்கின் நிலையின ஆயினும்
அஃறிணை மருங்கின் கிளந்தாங்கு இயலும் (தொல்.II - 57)

"பால்பிரிந்து இசையா உயர்திணை மேன" (தொல்.II - 58)

"அதுஎன் வேற்றுமை உயர்திணைத் தொகைவயின்
அதுஎன் உருபுகெடக் குகரம் வருமே" (தொல்.II - 95)

"அஎனப் பிறத்தல் அஃறிணை மருங்கின்
குவ்வும் ஐயும் இல்லென மொழிப" (தொல்.II - 110)

"இஉ ஐஓ என்னும் இறுதி
அப்பால் நான்கே உயர்திணை மருங்கில்
மெய்ப்பொருள் சுட்டிய விளிகொள் பெயரே" (தொல்.II - 112)

"ஏனை உயிரே உயர்திணை மருங்கில்
தாம்விளி கொள்ளா என்மனார் புலவர்" (தொல்.II - 126)

"பெயரெனப் படுபவை தெரியுங் காலை
உயர்திணைக் குரிமையும் அஃறிணைக் குரிமையும்
ஆயிரு திணைக்கும் ஓரன்ன உரிமையும்
அம்மூ உருவின தோன்ற லாறே" (தொல்.II - 162)

"இருதிணைப் பிரிந்த ஐம்பால் கிளவிக்கும்" (தொல்.II - 163)

"பாலறி வந்த உயர்திணைப் பெயரே" (தொல்.II - 164)

"அன்ன பிறவும் உயர்திணை மருங்கில்
பன்மையும் ஒருமையும் பாலறி வந்த
என்ன பெயரும் அத்திணை அவ்வே" (தொல்.II - 168)

"அன்ன பிறவும் அஃறிணை மருங்கில்
பன்மையும் ஒருமையும் பாலறி வந்த
என்ன பெயரும் அத்திணை அவ்வே" (தொல்.II - 172)

"தெரிநிலை யுடைய அஃறிணை இயற்பெயர்
ஒருமையும் பன்மையும் வினையொடு வரினே" (தொல்.I - 173)

"இருதிணைச் சொற்கும் ஓரன்ன உரிமையின்" (தொல்.II - 174)

"நிகழூஉ நின்ற பால்வரை கிளவியின்
உயர்திணை ஒருமை தோன்றலும் உரித்தே" (தொல்.II - 175)

"தன்உள் ளுறுத்த பன்மைக் கல்லது
உயர்திணை மருங்கின் ஆக்கம் இல்லை" (தொல்.II - 189)

"இயற்பெயர்க் கிளவி உயர்திணை சுட்டா" (தொல்.II - 198)

"திணையொடு பழகிய பெயரலங் கடையே" (தொல்.II - 199)

"உயர்திணைக் குரிமையும் அஃறிணைக் குரிமையும்
ஆயிரு திணைக்கும் ஓரன்ன உரிமையும்" (தொல்.II - 103)

"யாஅர் என்னும் வினாவின் கிளவி
அத்திணை மருங்கின் முப்பாற்கும் உரித்தே " (தொல்.II-212)

"காலக் கிளவி உயர்திணை மருங்கில்" (தொல்.II - 217)

"அம்மூ விரண்டும் அஃறிணை யவ்வே" (தொல்.II - 220)

"அத்திணை மருங்கின் இருபாற் கிளவிக்கும்" (தொல்.II- 221)

"காலக் கிளவி அஃறிணை மருங்கில்" (தொல்.II - 223)

"இருதிணைச் சொற்கும் ஓரன்ன உரிமைய" (தொல்.II - 224)

"உயர்திணை மருங்கின் உம்மைத் தொகையே" (தொல்.II-421)

இருதிணைச் சொற்கள் என்பன 1.உயர்திணைச் சொல், 2.அஃறிணைச் சொல் ஆகும். உயர்வான 'பாடறிந்து ஒழுகும் பண்பு' அறிந்த மக்கள் உயர்திணை ஆவர்; மக்களைத் தவிர்த்த ஏனைய உயிர்களும் உயிரற்ற பிறவும் அஃறிணை என்று கூறப்பட்டன. இது,

"உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே
அஃறிணை என்மனார் அவரல பிறவே" (தொல்.II - 1)

என்ற அடிகளால் அறியப்படும். 'திணை' என்ற சொல் 'சாதி', 'ஒழுக்கம்' என்ற பொருளைத் தருவதாக உரையாசிரியர்கள் கூறினர்.

*இனி, தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் 'திணை' என்ற சொல்லாட்சி வந்துள்ள இடங்களைத் தொகுத்துக் காணலாம்.*

*"கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்*
*முற்படக் கிளந்த எழுதிணை என்ப" (தொல்.III-1)*

*"நடுவண் ஐந்திணை நடுவணது ஒழிய" (தொல்.III-2)*

*"நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலொடு" (தொல்.III-9)*

*"திணைமயக் குறுதல் கடிநிலை இலவே" (தொல்.III-12)*

*"தேருங் காலைத் திணைக்குரிப் பொருளே" (தொல்.III-14)*

*"பெயரும் வினையுமென் றாயிரு வகைய"*

*"திணைதொறு மரீஇய திணைநிலைப் பெயரே" (தொல்.III-20)*

*"ஆயர் வேட்டுவர் ஆடூஉத் திணைப்பெயர் (தொல்.III-21)*

*"ஆனா வகைய திணைநிலைப் பெயரே" (தொல்.III-22)*

*"எத்திணை மருங்கினும் மகடூஉ மடல்மேல்*
*பொற்புடை நெறிமை இன்மை யான" (தொல்.III-35)*

*"நிகழ்ந்தது கூறி நிலையலும் திணையே" (தொல்.III-44)*

*"உள்ளுறை உவமம் ஏனை உவமம்எனத்*
*தள்ளா தாகும் திணைஉணர் வகையே" (தொல்.III-46)*

*"செப்பிய நான்கும் பெருந்திணைக் குறிப்பே" (தொல்.III-51)*

*"மக்கள் நுதலிய அகன்ஐந் திணையும்*
*சுட்டி ஒருவர் பெயர்கொளப் பெறாஅர்" (தொல்.III-54)*

*"புறத்திணை மருங்கின் பொருந்தின் அல்லது*
*அகத்திணை மருங்கின் அளவுதல் இலவே" (தொல்.III-55)*

*"அகத்திணை மருங்கின் அரில்தப உணர்ந்தோர்*
*புறத்திணை இலக்கணம் திறப்படக் கிளப்பின்" (தொல்.III-56)*

*"கொற்றவை நிலையும் அத்திணைப் புறனே" (தொல்.III-59)*

*"காஞ்சி தானே பெருந்திணைப் புறனே" (தொல்.III-77)*

*"அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கில்" (தொல்.III-92)*

*"பின்னர் நான்கும் பெருந்திணை பெறுமே" (தொல்.III-105)*

*"காமத் திணையில் கண்ணின்று வரூஉம்" (தொல்.III-108)*

"திணையே கைகோள் கூற்றுவகை எனாஅ" (தொல்.III-313)

"கைக்கிளை முதலா எழுபெருந் திணையும்" (தொல்.III-497)

"இதுவாகித் திணைக்கு உரிப்பொருள் எனாது
பொதுவாய் நிற்றல் பொருள்வகை என்ப" (தொல்.III-520)

"பரிசில் பாடாண் திணைத்துறைக் கிழமைப் பெயர்" (தொல்.III-628)

"இருதிணை ஐம்பால் இயல்நெறி வழாஅமை" (தொல்.III-644)

## 'திணை' என்பதற்கு உரையாசிரியர்கள் தரும் பொருள்

தொல்காப்பிய எழுத்ததிகாரம், சொல்லதிகாரம் இரண்டிலும் 'திணை' என்பதற்கு இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் ஆகிய உரையாசிரியர்கள் கூறிய பொருளினை மேலே கண்டோம். இனி, பொருளதிகாரத்தில் வந்துள்ள திணை என்ற சொல்லுக்குப் பொருளை உரையாசிரியர்கள் வழிக் காண்போம்.

"கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்
முற்படக் கிளந்த எழுதிணை என்ப" (தொல். அகத். 1)

இதில் வந்துள்ள 'திணை' என்ற சொல்லுக்கு இளம்பூரணர் 'பொருள்' என்று பொருள் கூறினார். அகத்திணையியல் என்பதற்கு, அகப்பொருள் இலக்கணம் நுதலிற்று [13] என்று இளம்பூரணர் கூறியதால் இதனை அறிகின்றோம். நச்சினார்க்கினியர், "திணையாவது ஒழுக்கம்" [14] என்று பொருள் கூறியுள்ளார். சோமசுந்தர பாரதியார் நச்சினார்க்கினியரை வழிமொழிந்து, "திணையாவது ஒழுக்கம். ஆகவே, அகத்திணை என்பது காதல் கண்ணிய ஒழுகலாறாம்" [15] என்பர். பொருளதிகாரம் முழுமையும் மேற்சுட்டிய மூன்று உரையாசிரியர்களும் இதே பொருளையே கொண்டு உரையெழுதியுள்ளனர்.

பேராசிரியர் உரையெழுதிய பொருளதிகாரப் பகுதியில் 'திணை' என்ற சொல் முதலில் வரும் இடம் செய்யுளியலின் முதல் நூற்பாவாகும்.

"திணையே கைகோள் கூற்றுவகை எனாஅ" (தொல். செய்யு. 1)

இதில் வந்துள்ள 'திணை' என்ற சொல்லுக்குப் பேராசிரியர், "திணையென்பது, அகம் புறம் என்று அறியச் செய்தல்" [16] என்று உரை கூறியுள்ளார். திணை என்ற சொல்லுக்குப் 'பகுதி' என்று ஓரிடத்தில் உரை கூறியுள்ளார். "கைக்கிளை முதலா எழுபெருந் திணையும்" (தொல். செய்யு. 185) என்ற நூற்பாவிற்குப் பேராசிரியர், "இது, பதின்மூன்றாம் முறைமைக்கணின்ற திணையுறுப்புணர்த்துகின்றது. இ - ள்: கைக்கிளை முதல் பெருந்திணையிறுவாய் ஏழும் முன்னர்க் கிளக்கப்பட்டன என்றவாறு. 'முறைநெறி வகையின்' என்பது, அவற்றுக்கு முறைமையாற் புறமெனப்பட்ட வெட்சி முதல் பாடாண் பகுதியீறாகிய ஏழு பகுதியோடு மென்றவாறு" என்றதால், 'திணை' என்பதற்குப் பேராசிரியர் 'பகுதி' எனப் பொருள் கொண்டமை புலனாகின்றது.

பிற இடங்களில் 'திணை' என்றே கூறிச் செல்கிறார். 'ஒழுக்கம்' என்றோ 'பொருள்' என்றோ பேராசிரியர் திணையைச் சுட்டவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

'திணை' என்ற சொல்லின் பொருள் யாவரும் அறிந்தது என்ற கருத்திலிருந்த பேராசிரியர், சிறப்பாக அதனை விளக்க அக்கறை எடுத்துக்கொண்டதாகத் தெரியவில்லை.

## உயர்ந்த ஒழுக்கம், தீய ஒழுக்கம் - இரண்டும் 'திணை' என்றே சுட்டப்படும்

தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் மட்டும் 25 நூற்பாக்களில் 'திணை' என்ற சொல்லாட்சி வந்துள்ளது. அதோடு, அகத்திணையியல், புறத்திணையியல் என்று இரண்டு இயல்களின் தலைப்பிலும் 'திணை' என்ற சொல் வந்துள்ளது. இதனால் அகம், புறம் என்று 'திணை' இருபெரும் பகுப்பாகப் பிரிக்கப்படும் என்பது தெரிகிறது.

எழுதிணை, எழுபெருந்திணை என எண்ணிட்டுச் சுட்டும் இடங்களில் அகம், புறம் என்ற திணைப் பகுப்பு ஒவ்வொன்றும் ஏழு உட்பிரிவாக உடையது என்ற உண்மை விளங்குகின்றது.

ஐந்திணை என்று எண்ணிட்டுச் சுட்டும் இடத்தில் அகத்திணை ஏழனுள் ஐந்து திணைகள் மட்டும் சிறப்பான உயர் பிரிவு என்பதும் பெறப்படும். குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற ஐந்திணையில் மட்டுமே நாகரிகம் படைத்த மக்கள் பேசப்பட்டனர்.

"மக்கள் நுதலிய அகன்ஐந் திணையும்" (தொல்.III-54)

என்றது இதனை உணர்த்தும். நாகரிகம் படைத்த மக்களிடமே அன்பு காணப்படும். உண்மையில் 'காமப் புணர்ச்சி' (அன்பு கலந்த உண்மைக் காதல்) என்பது, மக்களைப் பேசும் ஐந்திணையில் மட்டுமே உண்டு.

"அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கில்" (தொல்.III-92)

என்றது இதனை உணர்த்துகின்றது. ஏனைய கைக்கிளை, பெருந்திணை என்ற இரண்டு திணைகள் மக்களை நுதலும் திணைகள் ஆகா; நாகரிகம் (ஒழுக்கம்) சிதைந்த மனிதர்களைப் பற்றிய திணைகள் அவை என்பது ஆசிரியர் காலக் கருத்தாகத் தோன்றுகின்றது. எனினும், திணை வரிசையில் மக்கள் நுதலிய ஐந்திணைகளோடு அவை இரண்டையும் கூட்டியே, "கைக்கிளை முதலா எழுபெருந் திணையும்" (தொல்.III-497) என்றனர். இவற்றால், 'திணை' என்ற சொல் உயர்ந்த நாகரிகத்தை மட்டும் குறித்த சொல்லன்று; கீழான வழக்கினையும் (பேணா ஒழுக்கம்) குறித்த சொல் என்பதை உணரலாம்.

தமிழரின் திணை வாழ்க்கையைக் கூறும் தொல்காப்பியர் பரத்தைமை 'ஒழுக்கம்' பற்றியும் கூறத் தவறவில்லை. பழந்தமிழரின் வாழ்க்கை வரலாற்றில் நல்லதைக் கூறிவரும் வரிசையில் தீயதையும் பதிவுசெய்வதே வரலாற்றாசிரியர் கடன் என்ற நேர்மையை ஆசிரியர் உணர்ந்திருந்தார். ஆனாலும் அவ்வொழுக்கத்தில் தமக்கு உடன்பாடு இல்லை என்பதை வெளிப்படுத்தும் நோக்கிலேயே,

"கொடுமை ஒழுக்கம்" (தொல். கற்.6)

"கொடுமை ஒழுக்கத்து" (தொல். கற்.6)

"அடங்கா ஒழுக்கத்து அவன்வயின்" (தொல். கற்.9)

"பேணா ஒழுக்கம் நாணிய பொருளினும்" (தொல். கற்.9)

என்று அடைமொழி அமைத்துக் கூறியதைக் காண முடிகிறது.

பரத்தைமையைப் போலவே கைக்கிளை, பெருந்திணை ஆகிய இரு திணைகளும் 'கொடுமைத் திணை', 'பேணாத் திணை' என்பது தொல்காப்பியர் கருத்து என்றால் அது மிகையாகாது. இக்கருத்தானே அகத்திணையியலில் ஐந்திணைகட்கும் விரித்து எழுதிய தொல்காப்பியர் இறுதியில் கைக்கிளைக்கு ஒரு நூற்பாவும் பெருந்திணைக்கு ஒரு நூற்பாவும் எழுதியதோடு விட்டொழித்தார்.

இதனைப் பிறழ உணர்ந்த வ.சுப.மாணிக்கனார்,

> கைக்கிளை பெருந்திணைகளின் உண்மைப் பொருளை அறிய முயலுங்காலை, அவை அன்புசான்ற அகத்திணையின் உட்பிரிவுகள் என்பதனை மறந்துவிடலாகாது [17]

என்பர். அவர் மேலும்,

> பெருந்திணைக்கண் எவ்வகையானும் வலிந்த காமத்துக்கு இடனில்லை என்பதும், உள்ளப் புணர்ச்சி என்னும் அகத்திணைப் பண்பிற்கு ஒத்ததுவே பெருந்திணை என்பதும், தொல்காப்பியரும் சங்கப் புலவர்களும் பெருந்திணையை அன்புக் காமமாகவே வகுத்துப் பாடியுள்ளனர் என்பதும் என் அதிராத் துணிபு [18]

என்று கூறுவர். இது ஆதாரமற்ற கருத்து.

> கைக்கிளை பெருந்திணைகளின் இலக்கணம் பலவகையான கருத்து வேற்றுமைக்கு உரியது [19]

என்றும் அவரே கூறுவர்.

ஏறிய மடல்திறம் இளமை தீர்திறம்
தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம்
மிக்க காமத்து மிடலொடு தொகைஇச்
செப்பிய நான்கும் பெருந்திணைக் குறிப்பே (தொல். அகத்.51)

இந்நூற்பாவிற்கு வ.சுப.மாணிக்கம் கொள்ளும் பொருள் பின்வருமாறு:

1.ஏறிய மடல்திறம் - காதலியைப் பெறாத நிலையில், காதலன் மடலேறச் செல்லுதல்

2.இளமைதீர் திறம் - கட்டிளமைக் காலத்து இன்பம் துய்க்காது கணவன் நெடுங்காலம் பிரிந்திருத்தல்

3.தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம் - எவ்வகையானும் தேறுதல் அடையாமல் மனைவி காமம் முற்றுதல்

4.மிக்க காமத்து மிடல் - காமம்கொண்ட மனைவியின் துணிவுச் செயல்.[20]

இந்நூற்பாவிற்குக் காதலி, காதலன், கணவன், மனைவி என்று வ.சுப.மாணிக்கம் பொருள்குறித்தவை பொருந்தாச் சொற்கள் ஆகும். இந்நூற்பாவில் வரும் ஆணும் பெண்ணும் தலைவன் தலைவி அல்லர். இது களவு, கற்பு பற்றிய நூற்பா அன்று. பெருந்திணையின் நான்கு குறிப்புக்களில் முன்னிரண்டு தலைவனின் செயலாகவும் பின்னிரண்டு தலைவியின் செயலாகவும் பொருள்கூறினர். வ.சுப.மாணிக்கம் கருதியது ஆசிரியர் கருத்தாயின், அவை குறித்த பாடல்கள் சங்க இலக்கியங்களில் நூற்றுக் கணக்கில் இடம்பெற்றிருக்க வேண்டும்.

தொல்காப்பியர் காலத்திற்கு முன்னரே வாழ்ந்த புலவர்களும் கைக்கிளை, பெருந்திணை இரண்டையும் பண்பற்ற திணைகள் என்று ஒதுக்கி வைத்ததாலேயே தொல்காப்பியர் அகத்திணையியலில் இறுதியாக ஓரிரு நூற்பாக்களில் சுருங்கச் சொல்லி முடித்தார் என்பது தெரிகிறது. அகத்திணை ஏழு என்பது முன்னைத் தமிழ் வழக்கு. தொல்காப்பியர் அதை மாற்றி அமைக்க முடியாது. அகத்திணை ஏழனுள் கைக்கிளை, பெருந்திணைகளைச் சொல்லாமல் விட்டுவிடவும் முடியாது. 'கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்' என்று அகத்திணையியலைத் தொடங்கிய தொல்காப்பியர், முதலாவது கைக்கிளைத் திணையின் விளக்கம் பற்றி - வரிசை முறையில், முதலில் இலக்கணம் கூறாதது ஏன்? கைக்கிளை, பெருந்திணை இரண்டும் கடைநிலைத் திணைகள் என்பதாலேயே, அகத்திணையியலின் கடைசியில் கைக்கிளை, பெருந்திணை இரண்டையும் சுருக்கமாகக் கூறி முடித்தார் என்பதை எண்ணிப் பார்க்க வேண்டும்.

தொல்காப்பியரின் கருத்தை உணர்ந்த நாற்கவிராசநம்பி தம் நூலில், கைக்கிளையையும் பெருந்திணையையும் ஏற்புடைய காதலாகக் குறிக்கவில்லை என்பதை இங்கு மனங்கொள்ள வேண்டும்.

"கைக்கிளை யுடையது ஒருதலைக் காமம்" (நம்பி.3)

"ஐந்திணை யுடையது அன்புடைக் காமம்" (நம்பி.4)

"பெருந்திணை என்பது பொருந்தாக் காமம்" (நம்பி.5)

என்று கைக்கிளை, பெருந்திணை இரண்டும், தலைவன் தலைவி என இருவர் பக்கமும் அன்பின் உள்ளப் புணர்ச்சி உடைய காதல் அல்ல என்ற உண்மையைத் தெளிவுபடுத்தியிருப்பதை உணர்தல் தக்கதாம்.

> அகத்திணையாவது உள்ளப் புணர்ச்சி; ஆண் பெண் இருவர் உள்ளமும் காதலுக்கு ஒத்திருத்தல்[21]

என்று கூறும் வ.சுப.மாணிக்கம் இக்கருத்திற்கு எந்த ஆதாரத்தையும் காட்டவில்லை. இது அவரது தனிப்பட்ட கருத்தாகும். இக்கருத்து அகத்திணை ஏழனுக்கும் பொருந்தாது; நாகரிகம் வாய்க்கப்பெற்ற மக்களுக்கு உரிய அன்பின் ஐந்திணைக்கு மட்டுமே பொருந்தும். தொல்காப்பியர் ஐந்திணையை மட்டும் தனியே சிறப்பாகப் பிரித்து, 'மக்கள் நுதலிய', 'அன்பொடு புணர்ந்த' என்று அடைமொழி கூறியதை வ.சுப.மாணிக்கம் எண்ணிப் பார்க்க மறந்தனர்.

அகத்திணை, புறத்திணை என்பதற்கு உரிய விளக்கத்தினைத் தொல்காப்பியர் வரையறுத்துக் கூறவில்லை. அதனை நாமே உய்த்துணர விட்டுவிட்டார். அகத்திணையின் பொதுஇலக்கணத்தைத் தெளிந்து கொண்டால் எல்லாச் சிக்கலுக்கும் தீர்வு கிடைத்து விடும் என்பர் வ.சுப.மாணிக்கம்.[22]

ஒன்று தெளிவாகத் தெரிகிறது. ஆதியில் பாலியல் தொடர்பான நல்லது, கெட்டதான அனைத்தையுமே 'அகம்' என்றனர் ஆன்றோர். ஒத்த அன்பில்லாத காமத்தையும் அதாவது வன்முறை, வக்கிரமான பாலியல் உணர்வுகளையும் அகத்திணைக்குள் சேர்த்தனர். நாகரிகம் அடைந்த காலத்திலேயே, பண்பட்ட மக்களைப் பற்றிப் பேசும் அகன் ஐந்திணை, பிற இரு திணை என்ற தெளிவு பிறந்தது. **அகத்திணை ஏழின் இந்தப் பொதுஇலக்கணம் அறியாதவர்கள், தொல்காப்பிய நூற்பாக்களுக்குப் பொருள்காண இடர்ப்படுவது இயல்பே ஆகும்.**

"தமிழ் நாட்டில் சிறுமிகளை விரும்பிவந்த வழக்கம் முன்பு இருந்தது போலும்"[23] என்று மு.இராகவையங்கார் கைக்கிளையை மணங்கொண்டே கூறினார். அதுபோலவே, விருப்பமில்லாத பெண்ணை வலிந்து கொள்ளும் பாலியல் வழக்கமும் பண்டு இருந்தது. அதுவே பெருந்திணை. (இவ்விரு இழிகாமமும் இன்றும் உலகியலில் உண்டு.)

ஒன்று நினைந்து பெருமைப்பட வேண்டும். இழிவான ஒன்று உலகியலில் உண்டு என்பதற்காக அதைப் பாடுதல் தமிழ் இலக்கியக் கொள்கையாக இருக்கவில்லை. கைக்கிளை, பெருந்திணை பற்றிய பாடல்கள் சங்க இலக்கியங்களில் இல்லை என்று சொல்லுமளவில் மிகமிகக் குறைவு. உள்ளதைச் சொல்லும் உலகியல் வழக்கைப் பாடுவதினும், 'இல்லது இனியது நல்லது எனப் புலவர்களால் நாட்டிக் கொள்ளப்பட்டதொரு வழக்கான' நாடக வழக்கில் பாடுவதே முறை என்ற நம் பழந்தமிழ் இலக்கியக் கொள்கையையே தொல்காப்பியர்,

"நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
பாடல் சான்ற புலனெறி வழக்கம்" (தொல். அகத்.53)

என்று வரையறுத்துக் கூறியுள்ளார். அதனாலேயே கைக்கிளை, பெருந்திணைப் பாடல்களை நெறியறிந்த புலவர்கள் பாடாதொழிந்தனர்.

ஐயமே இல்லை. பெருந்திணை என்பது நாகரிகச் சமுதாயம் ஏற்றுக்கொள்ள முடியாத இணைச்சேர்க்கை - அது பொருந்தாக் காமம். ஆணும் பெண்ணும் ஒத்த காதலில் கூடுவதே அழகு; பெருமையது. வலிந்து கூடுவது அருவருக்கத்தக்கது; சிறுமையது. பெருந்திணை என்பதில் உள்ள 'பெரும்' என்ற அடை எதிர்மறைப் பொருளில் வந்தது. சிறுமையோரைப் 'பெரிய ஆளு' என்று சுட்டுவதைப் போல, இங்குப் 'பெரும்' என்ற அடை 'சிறுமை', 'இழிவு' என்ற பொருளைத் தந்தது. சோமசுந்தர பாரதியார் இதே கருத்தினைக் கூறியுள்ளார்.

> அறிவுடை மக்கட்டன்மைக்கு அமையாத இப்புரையொழுக்கத்தைப் பெரிய ஒழுக்கம் என்றது, அது ஒழுக்கத்தோடு படாதென்பது குறிக்கும் அவையல் கிளவியாகும். மங்கலமற்றதையும் இடக்கரையும் மறைத்து எதிர்மறைப் பெயரால் வழங்குவது அடிப்பட்ட தமிழ் மரபு. தாலி பெருகிற்று, விளக்கைப் பெருக்கு என்பவற்றுள் பெருமைச் சொல் மறுதலைப் பொருளில் வருவது போலவே,

> பொருந்தாக் காமத்தைப் பெருந்திணை என்பதிலும் பெருந்திணை என்பது அவையில் உரைக்கவொண்ணா இழிவொழுக்கத்தை மறைத்துக்கூறும் செய்யுள் வழக்குச் சொல்லாகும்[24]

என்று உரைகூறியிருப்பது சாலப் பொருத்தம் ஆகும்.

இழிந்த ஒழுக்கமான பெருந்திணை நான்கு வகைக் குறிப்பில் வரும் என்பர் தொல்காப்பியர். அதன் உண்மைப் பொருளை இனித் தெளியலாம்.

1.ஏறிய மடல்திறம் - (ஒருத்தியின் இணக்கமின்றி ஒருவன்) ஊரறிய மடலேறி அவளுக்குப் பழி ஏற்படுத்தி வலிந்து அவளை இணங்க வைக்கும் சூழ்ச்சித் திறம் (black mail)

2.இளமைதீர் திறம் - ஒருவன் தனக்கு இளமை உணர்வு தீர்ந்துபோன மலட்டு நிலையிலும் ஒருத்தியைப் பாலியலாகத் துன்புறுத்துதல்

3.தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம் - உரிமையற்ற ஒருத்தி மீது (பிறர் மனைவிமீது) தேற்ற முடியாத மிக்க காமம் கொள்ளுதல்

4.மிக்க காமத்து மிடல் - (கண்ட பெண்களிடத்தும்) மிகுந்த காமத்தில் வன்புணர்ச்சியை நாடுதல்.

ஒருத்தியின் காதலைப் பெறாத ஒருவன் ஊரறிய மடலேறி அவளுக்குப் பழி ஏற்படுத்தி வலிந்து அவளை இணங்க வைக்கும் சூழ்ச்சித் திறம், தனக்கு இளமைப் பாலியலுணர்வு தீர்ந்துபோய்விட்ட மலட்டு நிலையிலும் ஒருத்தியைப் பாலியலாகத் துன்புறுத்துதல், பிறன்மனைமீது தேற்ற முடியாத காமத்தில் வேட்கை யுறுதல், மிக்ககாமத்தில் காணும் பெண்களிடமெல்லாம் வன்புணர்ச்சியை நாடுதல் ஆகிய நான்கும் பெருந்திணையின் அடையாளம் ஆகும் என்பது இந்நூற்பாவின் உண்மைப் பொருளாகும்.

இந்நான்கு வகைப் பெருந்திணையும் பாலியல் வன்முறை (sexual violence) எனத் தோன்றுகிறது.

அகத்திணை ஏழனுள் பெருந்திணை போலவே கைக்கிளையும் இடம்பெற்றது. கைக்கிளை என்றால் என்ன என்பதைத் தொல்காப்பியர் அகத்திணையியலின் இறுதியில் ஒரு நூற்பாவில் விளக்கியுள்ளார்.

> "காமஞ் சாலா இளமையோள் வயின்
> ஏமஞ் சாலா இடும்பை எய்தி
> நன்மையும் தீமையும் என்றிரு திறத்தால்
> தன்னொடும் அவளொடும் தருக்கிய புணர்த்துச்
> சொல்லெதிர் பெறாஅன் சொல்லி இன்புறல்
> புல்லித் தோன்றும் கைக்கிளைக் குறிப்பே" (தொல். அகத்.50)

இந்நூற்பாவுக்கு வ.சுப.மாணிக்கம்,

> பருவம் எய்தாப் பெண்ணை (பருவம் எய்தியவளாக மயங்கி) ஒருவன் காதல் கொள்கின்றான்; காதற்றுன்பமும் படுகின்றான்; நன்மை எனவும் தீமை எனவும்

அவளைத் தன்னோடு உறவு படுத்திச் செருக்குக் கொள்கின்றான்; அவளிடமிருந்து மறுமொழியாக ஒரு சொல்லும் பெற்றானில்லை; எனினும் தானே சொல்லி இன்புறுகின்றான்[25]

என்று பொருள்கூறுவர்.

அகத்திணை ஏழனுள் கைக்கிளை, பெருந்திணை இரண்டும் குற்றேவல் செய்வார் கொள்ளும் காதல் என இளம்பூரணர் இழிவுறக் கூறியுள்ளார்.

"அடியோர் பாங்கினும் வினைவலர் பாங்கினும்
கடிவரை இலபுறத்து என்மனார் புலவர்" (தொல். அகத்.25)

என்ற நூற்பாவிற்கு உரையெழுதும் இடத்தில் இளம்பூரணர் இக்கருத்தை வெளியிட்டுள்ளார். ஆனால் உண்மையில் இந்நூற்பா கைக்கிளை பெருந்திணை பற்றியதா என்பதே மறுஆய்வுக்கு உரியது. ('அடியவர், தொழில்செய்வோர் முதலிய எளிய மக்களும் அகத்திணைச் செய்யுள்களில் தலைவராகப் பாடப்படுதற்கு விலக்கல்லர் எனக் கூறுவர் புலவர்' என்று பொருள்கூறலே இதற்குப் பொருந்தும்.) கைக்கிளையும் பெருந்திணையும் இழிதிணைகள் ஆதலின், 'குற்றேவல் செய்வாருடைய காதல் இது' என்று கருதினர் போலும்.

வினைசெய்வார் என்பதனால் அடியரல்லாதார் என்பது கொள்க. இவர் அகத்திணைக்கு உரியரல்லரோ வெனின், அகத்திணையாவன அறத்தின் வழாமலும் பொருளின் வழாமலும் இன்பத்தின் வழாமலும் இயலல் வேண்டும்; அவையெல்லாம் பிறர்க்குக் குற்றேவல் செய்வார்க்குச் செய்தல் அரிதாகலானும், அவர் நாணுக் குறைபாடுடைய ராகலானும், குறிப்பறியாது வேட்கை வழியே சாரக் கருதுவராகலானும், இன்பம் இனிது நடத்துவார் பிறரேவல் செய்யாதார் என்பதனானும், இவர் புறப்பொருட் குரியராயினார் என்க[26]

என்று இளம்பூரணர் குற்றவேல் செய்வாரைத் தாழ்வாகவும் பிறரை உயர்வாகவும் கருதி உரைகூறினார். இது ஏற்புடைய உரையன்று. கைக்கிளையும் பெருந்திணையும் அரசர் முதலான பெருந்தனத் தலைவர்க்கே உரிய செயல்கள் என்று கருதலாம்.

(கைக்கிளை, பெருந்திணை தவிர்த்த) **மக்களைப் பாடும் அன்பின் ஐந்திணைப் பாடல்களில் மட்டும் தலைவன் - தலைவியர் பெயரைச் சுட்டி யாரும் பாடிவிடக் கூடாது என்று ஒரு விதி அமைத்தனர்.**

"மக்கள் நுதலிய அகன்ஐந் திணையும்
சுட்டி ஒருவர் பெயர்கொளப் பெறாஅர்" (தொல். அகத்.54)

எனில், ஐந்திணை தவிர்த்த கைக்கிளை, பெருந்திணைப் பாடல்களில் தலைவன் தலைவியர் சுட்டிப் பெயர்கொளப் பெறல் வழக்கம் உண்டா? என்று ஆராய்ந்தால், அவ்வாறு வழக்கம் இருந்ததாகத் தெரியவில்லை. ஒருவேளை பண்டு அவ்வாறான வழக்கம் இருந்திருக்கலாம். அதன் இழிவினை உணர்ந்த நெறியறிந்த புலவர் பெருமக்கள் அத்தகைய பாடல்களைப் பாடுவதையே தவிர்த்தனர் என்பதை அறிய முடிகிறது.

இணக்கமில்லாத பெண்ணிடத்தில் காமம் கொண்டு அவளை அடைய முயலும் பெருந்திணை ஒழுக்கத்தை ஒரு வழக்கமாகக் கொண்ட தமிழரசர், காம உணர்வே இல்லாத சிறுமியர் மீதும் காமம் கொள்ளும் பாலியல் வக்கிரத்தை

மேற்கொள்ளத் தொடங்கினர். சிறுமியர்மீது பாலியல் வேட்கையுறும் ஒரு மனப்பாங்கு மன அழுக்காகப் பழந்தமிழ் அரசரிடையே வழக்கிற்கு வந்தது போலும்.

முதியோரின் பள்ளியறையில் இளஞ்சிறுமியர் உடனுறைவதால் முதியோரது ஆயுள் நீளும் என்றொரு (மூட)நம்பிக்கை இக்காலத்துப் பெரியதனக்காரர்களிடம் உண்டு. இதுபோல் பண்டும் இருந்திருக்கலாம்.

பிற்கால உலா இலக்கியங்களில் பேதை, பெதும்பைப் பருவத்து மகளிரும் தம்மீது பாலியல் மோகம் கொண்டு புலம்புவதான கற்பனையில் மகிழ்ந்த அரசர்கள், தம் அரசவைப் புலவர்களைக் கொண்டு அவ்வாறே பாடல் புனையவைத்து அதைக் கேட்டு மகிழ்ந்த வழக்காறு இத்தகைய பாலியல் வக்கிரம் (sexual perversion) பண்டும் இருந்தது என்பதற்கு அழுத்தமான ஒரு சான்றாகும். தொல்காப்பியக் கைக்கிளை நூற்பாவுக்கு அடிவரியாகப் பின்வருமாறு பொருள் கூறலாம்.

1. காமஞ் சாலா இளமையோள் வயின் - காமம் சாலாத இளைய சிறுமியரிடத்தில்

2. ஏமஞ் சாலா இடும்பை எய்தி - இன்பம் கனியாத துன்பம் எய்தி

3. நன்மையும் தீமையும் என்றிரு திறத்தால் - (சாம பேத தான தண்ட உத்திகளில்) நன்மையான வழி, தீமையான வழி என இருதிறத்தாலும் தந்திரமாக முயன்று

4. தன்னொடும் அவளொடும் தருக்கிய புணர்த்து - தன்னைப் பற்றியும் அவளைப் பற்றியும் பெருமையாகப் பலவாறு புனைந்து பேசியும்

5. சொல்லெதிர் பெறாஅன் சொல்லி இன்புறல் - மறுமொழியாக அவளிடமிருந்து எதிர்ச்சொல் ஏதும் பெறானாகியும் தனக்குத்தானே பேசி இன்பம் அடைவதில்

6. புல்லித் தோன்றும் கைக்கிளைக் குறிப்பே - பொருந்தித் தோன்றும் பாலியலே கைக்கிளைக் குறிப்பு என்பர்.

என்ற நூற்பாவின் பொருள் இதுவாகும்.

கைக்கிளை, பெருந்திணைகளுக்குப் பாடல்கள் கலித்தொகை தவிர்த்த ஏனைய சங்கப் பாடல்களில் இல்லை. ஐங்குறுநூறு போலவே கலித்தொகையும் ஐந்து திணைகளுக்கு ஐந்து புலவர்கள் பாடிய தொகை நூலாக அமைந்துள்ளது. அதில் கைக்கிளை, பெருந்திணை என்னும் திணைப்பாடல்கள் எப்படி வந்தன? கலித்தொகையைத் தொகுத்தவர் அதற்குத் துறை வகுக்கவில்லை. உரையெழுத வந்த நச்சினார்க்கினியரே அதற்குத் துறையும் எழுதினார் என்பர். இதனை வ.சுப.மாணிக்கம்,

> தொல்காப்பியத்தில் தாம் வலிந்து எழுதிய இலக்கணங்களுக்கு இலக்கியம் காட்ட வேண்டிக் கலித்தொகைத் துறைகளைத் திரித்து எழுத நேர்ந்தது. முற்கூறியாங்கு அகநானூறு முதலிய தொகைகளின் துறைகளை உள்ளபடி உடன்பட்ட யான், நச்சினார்க்கினியர் எழுதிய கலித்தொகைத் துறைகளை மட்டும் திறனாய்ந்து மேற்கொண்டுள்ளேன். எட்டுத்தொகையுள் கலித்தொகையிற்றான் கைக்கிளை பெருந்திணைப் பாடல்கள் இருத்தலின், இத்திறனாய்வு இத்தொகையளவில் இன்றியமை யாததாயிற்று [27]

என்று நச்சினார்க்கினியர் திரித்து எழுதிய துறைகளை விமர்சித்த அவர், கைக்கிளைக்கும் பெருந்திணைக்கும் கலித்தொகைப் பாடல்களையே உதாரணமாகத் தம் நூலில் (தமிழ்க் காதல், ப.185,197) எடுத்தாள்வது முன்னுக்குப்பின் முரணாகத் தோன்றுகிறது.

ஆண்பாற் கைக்கிளை, பெண்பாற் கைக்கிளை, ஆண்பாற் பெருந்திணை, பெண்பாற் பெருந்திணை என்று பார்க்கும் பார்வை இழிவானது; ஆசிரியர் கருத்திற்கு முரணானது. அகத்திணை ஏழனுள் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் ஐந்திணைகளின் உரிப்பொருள்களை உன்னுக. அவை ஐந்தும் தலைவியை வைத்தே கூறப்பட்டன. தலைவி (தலைவனுடன்) கூடுதல், தலைவி (தலைவன் நினைவில்) கற்புடன் இருத்தல், தலைவி (தலைவனுடன்) ஊடுதல், தலைவி (தலைவன் நினைவில்) இரங்குதல், தலைவி (தலைவனை / உடன்போக்கில் மட்டும் பெற்றோரைப்) பிரிதல் எனத் தலைவியின் செயல்களாகவே உள்ளன. **கைக்கிளையும் பெருந்திணையும் தலைவன் செயல்களாகும்** என்பது வெளிப்படை. இவ்வேறுபாட்டினை உணர்ந்து தெளிவது அகத்திணையை ஐயமறத் தெளிய உதவும்.

இதுகாறுங் கண்டவற்றால், கைக்கிளை பெருந்திணை ஆகிய இரண்டும் நாகரிகம் வழுவிய ஒரு காலத்தில் தோன்றிய இழி திணைகள் என்பதையும் 'திணை' என்ற சொல் நாகரிகம், அநாகரிகம் இரண்டையும் உள்ளடக்கியது என்பதையும் அறிய முடிகிறது.

## திணை பற்றித் தொல்காப்பியர் கருத்து?...

'திணை' என்றால் என்ன என்பதைத் தொல்காப்பியர் எந்த இடத்திலும் விளக்கவில்லை. அவரது காலத்தில் இச்சொல் வெளிப்படப் பொருள் கிளக்கும் ஒரு சொல்லாகத் திகழ்ந்திருக்க வேண்டும். அதற்குப் பொருள் இது என்பதைத் தொல்காப்பியர் காலத்திற்குச் சுமார் 2,000 ஆண்டுகளுக்குப் பின்வந்த உரையாசிரியர்கள் கூறுவதை வைத்தே நாம் தெளிவடையும் நிலையில் உள்ளோம். அல்லது நம் அறிவு கொண்டு நாமே ஆராய்ந்து தெளிவடைதல் தக்கதாம்.

தொல்காப்பியர் காலத்தை,

> பாணினிக்கு முற்பட்டவர் என்று கொள்ளக் கிடப்பதால், தொல்காப்பியர் கி.மு. 5ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டவர் என்பதில் தடையில்லை[28]

என்று தமிழண்ணல் கூறுவர்.

தொல்காப்பியர் காலம் கி.மு. ஆறாம் நூற்றாண்டுக்கு முற்பட்டதேயன்றிப் பிற்பட்டதாகாது என்று சி.இலக்குவனார் கூறுவர்.[29] இதே கருத்தை க.வெள்ளைவாரணன் வழிமொழிவார்.[30] ஞா.தேவநேயப் பாவாணர் தொல்காப்பியர் காலத்தை கி.மு. ஆறாம் அல்லது ஏழாம் நூற்றாண்டு என்று கணிப்பர்.[31] இவற்றால் தொல்காப்பியரது காலம் கி.மு.700 என்று ஒருவாறு கணிக்க முடிகின்றது.

தொல்காப்பிய உரையாசிரியர்களுள் முதல்வரான இளம்பூரணர் காலம் கி.பி. 12ஆம் நூற்றாண்டின் தொடக்கம் ஆகும். பேராசிரியர் 12ஆம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டவர் எனவும், சேனாவரையரும் தெய்வச்சிலையாரும் 13ஆம் நூற்றாண்டினர் எனவும், நச்சினார்க்கினியர் 14ஆம் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்தவர் எனவும் உரையாசிரியர் பற்றி ஆராய்ந்த மு.வை.அரவிந்தன் கணித்துக் கூறியுள்ளார்.[32]

தொல்காப்பியத்திற்கு முதன்முதலில் உரையெழுதியவரான இளம்பூரணருக்குத் தொல்காப்பியர் 1900 ஆண்டுகளுக்கு முற்பட்டவர்; நச்சினார்க்கினியருக்கு 2100 ஆண்டுகளுக்கு முந்தியவர் என்ற உண்மையை மனத்துட் கொண்டு உரையாசிரியர்களின் உரையை அளத்தல் வேண்டும். உரையாசிரியர்கள் கூறும் கருத்தே தொல்காப்பியர் கருதிய கருத்து என்று முழுமையாக நம்பிவிட வழியில்லை. எப்பொருள் யார்யார் வாய்க் கேட்பினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவு என்னும் மூதுரையை மறந்துவிடாமல் விழிப்புடன் இருப்பதே ஆராய்ச்சி நெறிமுறை. **முன்னையோர் கருத்தைப் பின்வருவோர் மறுஆய்வுக்கு உட்படுத்துதல் இயற்கையே. 'தம்மில் தம் மக்கள் அறிவுடையராதல்' போல்வது அது; முன்னையோரை அவமதிப்பதாகாது என்று இதுபற்றிக் கூறுவார் தமிழண்ணல்.**[33]

'திணை' என்ற சொல்லுக்குத் தொல்காப்பியர் கருதிய பொருள் ஆழமாகவும் பொறுமையாகவும் ஆராய்ந்து காண்பதற்கு உரியது.

## சங்க இலக்கியத்தில் 'திணை'யும் உரையும்

சங்கப் பாடல்களில் மொத்தம் பதினாறு இடங்களில் 'திணை' என்ற சொல் வந்துள்ளது. அவ்விடங்களில் உரையாசிரியர்கள் கருதிய பொருளோடு அவை இங்கே ஆராயப்படுகின்றன.

"கானவர் மருதம் பாட, அகவர்
நீனிற முல்லைப் பல்**திணை** நுவல" (பொருந.220-221)

இவ்வடிகளுக்கு நச்சினார்க்கினியர்,

*நீல நிறத்தையுடைய முல்லைக்கொடி படர்ந்த பல காட்டு நிலத்தே சென்று அந்நிலத்தைக் கொண்டாடவும்*[34]

என்று உரை கூறியுள்ளார். 'திணை' என்பதற்குக் 'காட்டு நிலம்' என்ற பொருளைக் கொண்டார் நச்சினார்க்கினியர்.

பொ.வே.சோமசுந்தரனார், "கானவர் மருதம் பாட - முல்லை நிலத்து மக்கள் மருதப் பண்ணைப் பாடவும், அகவர் நீல்நிற முல்லைப் பல்திணை நுவல - உழவர்கள் நீல நிறமுடைய முல்லைக்கொடி படர்ந்த பலவாகிய காட்டு நிலத்தைக் கொண்டாடவும்"[35] என்று உரை எழுதியுள்ளார். இதனால், 'திணை' என்ற சொல் 'காட்டுநிலம்' என்ற பொருளைத் தருவதாக அவர் கருதியது தெரிகிறது. இக்கருத்திற்கு,

"குலமும் நிலமும் ஒழுக்கமும் திணையே" (பிங்.3641)

என்ற பிங்கலந்தை நிகண்டு கூறும் பொருளே அடிப்படையாகும்.

"நெய்தல் சான்ற வளம்பல பயின்றாங்கு
ஐம்பால் **திணை**யும் கவினி அமைவர" (மதுரைக்.325-326)

நச்சினார்க்கினியர் இதற்கு,

அம்மண்டலத்தின் கண்ணே ஐந்து கூற்றினையுடைய நிலங்களும் அழகு பெற்று [36]

என்று இங்கும் 'திணை' என்பதற்கு 'நிலம்' என்றே பொருள் கொண்டார்.

பொ.வே.சோமசுந்தரனார் இவ்வடிகளுக்கு

இரங்கலாகிய உரிப்பொருள் அமைந்த நெய்தனிலத்தே அமைந்த இன்னோரன்ன வளம் பலவும் நெருங்கப்பட்டு, அம்மண்டலத்தின் கண்ணே இங்ஙனம் ஐந்து கூற்றினையுமுடைய நிலங்களும் அழகுபெற்றுப் பொருந்துதல் தோன்ற [37]

என்று உரைகூறினார். நச்சினார்க்கினியரை வழிமொழிந்து அவர் 'திணை' என்பதற்கு 'நிலம்' என்றே பொருள் கொண்டார்.

"வசையில் வான்**திணை**ப் புரையோர் கடும்பொடு" (குறிஞ்.205)

நச்சினார்க்கினியர் இதற்கு,

குற்றம் இல்லாத உயர்ந்த குலத்திற் பிறந்த உயர்ந்தோர் தமது சுற்றத்தோடே விருந்துண்டு மிக்க அடிசிலை [38]

என்று உரைகூறினார்.

திணையைக் 'குலம்' என்ற நச்சினார்க்கினியரை வழிமொழிந்து பொ.வே.சோமசுந்தரனார், "குற்றமில்லாத உயர்குடிப் பிறந்த உயர்ந்தோர் தம் சுற்றத்தோடே" [39] என்று 'திணை' என்பதற்குக் 'குடி' என்று பொருள் கொண்டார்.

"ஒண்சுவர் நல்லில் உயர்**திணை** யிருந்து
பைங்கிளி மிழற்றும் பாலார் செழுநகர்" (பட்டினப்.263-264)

இதற்கு நச்சினார்க்கினியர்,

சாந்திட்ட சுவர்களையுடைய நன்றாகிய அகங்களின் உயர்ந்த திண்ணைகளிலேயிருந்து பசிய கிளி வார்த்தை சொல்லுதற்குக் காரணமாகிய பால் நிறைந்த வளவிய ஊர். திண்ணை: விகாரம். இனி, உயர் திணை - உயர்ந்த மேனிலம் என்றுமாம் [40]

என்று 'திணை' என்ற சொல்லிற்குத் 'திண்ணை' என்று பொருள்கொண்டார்.

அவரைப் பின்பற்றி, பொ.வே.சோமசுந்தரனார், "சாந்திட்ட சுவரையுடைய நன்றாகிய இல்லங்களின் உயர்ந்த திண்ணைகளின் மேலிருந்து" [41] என்று 'திணை'யைத் 'திண்ணை' என்றே கொண்டார்.

"மேம்பட வெறுத்தஅவன் தொல்திணை மூதூர்" (மலை.401)

இதில் வந்துள்ள 'தொல்திணை மூதூர்' என்ற தொடருக்கு நச்சினார்க்கினியர், "பழையதாகிய உயர்ந்த ஒழுக்கத்தினை உடைய பழைய ஊர்களை" [42] என்று உரைகூறினார். பொ.வே.சோமசுந்தரனாரும் அவ்வாறே, 'உயர்ந்த ஒழுக்கத்தினையுடைய பழைய ஊர்கள்' [43] என்று பொருள் கூறினார். இரு உரையாசிரியர்களும் 'தொல்திணை' என்பதற்கு 'உயர்ந்த ஒழுக்கம்' என்று பொருள் கொண்டனர்.

"தெறுவது அம்மஇத் திணைப்பிறத் தல்லே" (குறுந்.45)

'திணைப் பிறத்தல்லே' என்பதற்கு உ.வே.சாமிநாதையர், "இக் குடியிற் பிறத்தல்" [44] என்று உரைகூறினார். 'திணை' என்ற சொல்லுக்குக் 'குடி' என்று பொருள் கொண்டார்.

"குராலான் படுதுயர் இரவிற் கண்ட
உயர்திணை ஊமன் போல" (குறுந்.224)

ஊமன் என்பது அஃறிணையாகிய கோட்டானுக்கும் வருதலின் அதனை விலக்க, 'உயர்திணை யூமன்' என்றாள் [45]

என்று உ.வே.சாமிநாதையர் உரைகூறினார். இங்கு 'உயர்திணை' என்றது உயர்திணையையே குறித்தது.

"துளங்குகுடி விழுத்திணை திருத்தி" (பதிற்.31)

உரையாசிரியர் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை இவ்வடிக்கு,

"வருத்தமுற்ற குடிமக்களின் நல்லொழுக்கம் இனிது நிலவப் பண்ணி" [46]

என்று உரைகூறியுள்ளார். 'விழுத்திணை' என்பதற்கு 'நல்லொழுக்கம்' என்பது அவர் கண்ட பொருள் ஆகும்.

"முன்திணை முதல்வர் போல நின்று" (பதிற்.85)

இவ்வடிக்கு ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, "நின் குலத்து முன்னோர்களைப் போல நன்னெறிக்கண்ணே நிலைபெற நின்று" [47] என்று உரைகூறினார். 'திணை' என்ற சொல்லுக்கு 'நன்னெறி' என்று அவர் பொருள் கொண்டார்.

"வலஞ்சுழி உந்திய திணைபுரி புதல்வர்" (பரி.16: 7)

பொ.வே.சோமசுந்தரனார் இவ்வடிக்கு,

வலம் சுழித்துப் பாயும் கலங்கலையுடைய அழகிய அந்நீர் ஆண்டாண்டு நீராடுவாரது. திணைபிரி புதல்வர் - தம் இல்லிடத்தினின்றும் பிரிந்து தமியராய் நீராடிய சிறுவர்களுடைய [48]

என்று 'திணை' என்பதற்கு 'இல்' என்று பொருள் கூறினார். மேலும் அவர், "இல்வாயில் போந்து நீராடும் புதல்வர்: திணைபிரிதல் - இல்லினின்று சேறல்" [49] என்றும் விளக்குவர். அதே உரைநூலின் இறுதியில் உள்ள அருஞ்சொற்பொருள் அகரவரிசை என்ற பகுதியில் "திணை - இருப்பிடம்" [50] என்றும் பொருள் கூறியுள்ளார்.

"ஒழுகுபலி மறந்த மெழுகாப் புன்**திணைப்**
பானாய் துள்ளிய பறைக்கட் சிற்றில்" (அகம்.167)

நாவலர் ந.மு.வேங்கடசாமி நாட்டார் மற்றும் கரந்தைக் கவியரசு ஆர்.வேங்கடாசலம் பிள்ளை ஆகிய உரையாசிரியர்கள் இதில் வந்துள்ள 'மெழுகாப் புன்திணை' என்ற தொடருக்கு, "மெழுகப்படாத புல்லிய திண்ணையில்" [51] என்று பதவுரை எழுதியுள்ளனர். 'திணை' என்பதைத் 'திண்ணை' என்று பொருள் கொண்டனர்.

"ஆடுகுடி மூத்த விழுத்**திணைச்** சிறந்த" (புறம்.24)

இதற்குப் பழைய உரைகாரர், "நினது வெற்றிக் குடியோடு மூத்த சீரிய குடியின்கட் சிறந்த" [52] என்று உரைகூறியுள்ளார். 'விழுத்திணை' என்ற தொடருக்குச் 'சீரிய குடி' என்று பொருள் கூறினார்.

"வேற்றுமை இல்லா விழுத்**திணைப்** பிறந்து" (புறம்.27)

பழைய உரைகாரர் இவ்வடிக்கு, "ஏற்றத் தாழ்வில்லாத, சிறந்த குடியின்கட் பிறந்து" [53] என்று உரையெழுதியுள்ளார். 'திணை' என்ற சொல்லுக்குக் 'குடி' என்று பொருள் கொண்டார் அவர்.

"வசையில் விழுத்**திணைப்** பிறந்த" (புறம்.159)

இவ்வடிக்குப் பழைய உரைகாரர், "வசையில்லாத சிறந்த குடியின்கட் பிறந்த" [54] என்று உரையெழுதியுள்ளார். இந்த இடத்திலும் திணை என்பதற்குக் 'குடி' என்றே பொருள் கொண்டார்.

"அளக்கர்த்**திணை** விளக்காக" (புறம்.229)

"கடலால் சூழப்பட்ட பூமிக்கு விளக்காக" [55] என்று இதற்கு உரை கூறியுள்ளார். திணை என்பதற்குப் 'பூமி' என்று பொருள் கண்டனர் பழைய உரைகாரர்.

"விளங்கு**திணை** வேந்தர் களந்தொறுஞ் சென்று" (புறம்.373)

இப்பாடலுக்குக் குறிப்புரை எழுதிய உ.வே.சாமிநாதையர், "திணை - குலம்" [56] என்று எழுதியுள்ளார்.

இதுகாறும் கண்டவற்றால், சங்க இலக்கியங்களில் வந்துள்ள 'திணை' என்ற சொல்லுக்கு உரையாசிரியர்கள் நிலம், பூமி, குடி, குலம், சாதி, திண்ணை, இல் (வீடு), ஒழுக்கம், நல்லொழுக்கம், நன்னெறி என்ற பல்வேறு பொருளில் உரைகூறியுள்ளனர் எனத் தெரிகிறது.

## 'திணை' என்பதற்கு அகராதிகள் தரும் பொருள்

'திணை' என்பதற்கு நிகண்டுகள், அகராதிகள், பேரகராதி (Lexicon), பெருஞ்சொல்லகராதிகள், இலக்கியச் சொல்லகராதி, அபிதான சிந்தாமணி, கலைக்களஞ்சியம் முதலியன தரும் பொருளை இனித் தொகுத்துக் காணலாம்.

தமிழில் தோன்றிய அகராதிக்கலை என்று மதிக்கத்தக்கவை நிகண்டுகள் ஆகும். நிகண்டுகளுக்குத் தொல்காப்பியமே வித்திட்டது. தொல்காப்பிய உயிரியலில் 120 அருஞ்சொற்களுக்குப் பொருள் கூறப் பட்டுள்ளதே தமிழ் அகராதிக் கலையின் தொடக்கம் ஆகும். அதனைத் தொடர்ந்தே அருஞ்சொற்களுக்குச் செய்யுள் வடிவில் பொருள்கூறும் நிகண்டுகள் தோன்றின. திவாகரம், பிங்கலந்தை, சூடாமணி நிகண்டு, உரிச்சொல் நிகண்டு, நாமதீப நிகண்டு, பொதிகை நிகண்டு, அகராதி நிகண்டு, ஆசிரிய நிகண்டு முதலியன தமிழ் நிகண்டுகளில் குறிப்பிடத்தக்கன.

தமிழ் நிகண்டுகளில் காலத்தால் முற்பட்டது திவாகர நிகண்டு. இதன் காலம் 9ஆம் நூற்றாண்டு என்பர். 9500 சொற்களுக்கு இதில் பொருள் விளக்கம் உள்ளது. 'திணை' என்ற சொல்லுக்குத் திவாகரம் குலம், ஒழுக்கம், நிலம் என்னும் மூன்று பொருளைத் தருகின்றது.

"குலமும் ஒழுக்கமும் ஒழுக்கம் நிகழ்ந்த
நிலமும் திணைஎன நிகழ்த்தும்+ கிளவி" (திவா.2002)

'இடத்தின் பெயர் - பதினெட்டு' என்ற தலைப்பில் தொகுத்துத் தந்துள்ள ஒரு நூற்பாவில் திணையும் இடம்பெற்றிருக்கக் காணமுடிகிறது.

"வாய்,புலம், பாங்கர், வயின்,களம், வைப்பு,
தேயம், வழி,உழி, **திணை**யே, மருங்கு,
பால்,நிலம், தலமே, வளாகம், பட்டி,
சூழல், தானம் இடப்பெயர்த் தொடர்பே" (திவா.1011)

பிங்கலந்தை நிகண்டு 10ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது. இதில் 14,700 சொற்களுக்குப் பொருள் கூறப்பட்டுள்ளது. இது 'திணை' என்ற சொல்லுக்குக் குலம், நிலம், ஒழுக்கம் என்ற பொருளைத் தருகின்றது.

"குடிதிணை விழுப்பம் ஒழுக்கம் குலமென" (பிங். 953)

"குலமும் நிலமும் ஒழுக்கமும் திணையே" (பிங். 3641)

"**திணை**: சாதி, நிலம், ஒழுக்கம்"[57] என்று பிங்கல நிகண்டின் உரைக் குறிப்பு கூறுகின்றது.

"திணை - இடம்; ஒழுக்கம்; குடி; குலம்; பூமி; பொருள்" என்று கழகத் தமிழ் அகராதி பொருளுரைக்கின்றது.

செந்தமிழ் அகராதி, "திணை - இடம், நிலம், வீடு, குலம், ஒழுக்கம், பகுப்புக்கள்" [59] என்று பொருள் கூறுகின்றது.

நா.கதிரைவேற்பிள்ளையின் தமிழ்மொழியகராதி, "திணை -இடம், ஒழுக்கம், குடி, குலம், பூமி, பொருள்" [60] என்று பொருள் கூறுகின்றது.

பழந்தமிழ் இலக்கியச் சொற்களைத் தொகுத்து அவற்றின் பொருளை விளக்கும் நோக்கில் சுன்னாகம் அ.குமாரசுவாமிப்பிள்ளை இயற்றிய இலக்கியச் சொல்லகராதி, "திணை - நிலம், குலம், ஒழுக்கம்" [61] என்று பொருளுரைக்கின்றது.

ஆ.சிங்காரவேலு முதலியாரின் அபிதான சிந்தாமணி, "திணை - 1. (உ) உயர்திணை, அஃறிணை. (ரு) குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் இவை முறையே மலை, மணற்காடு, காடு, ஊர், கடல்சார்ந்த நிலங்கள். 2. (உ) அகத்திணை, புறத்திணை" [62] என்று திணையின் வகைகளை விளக்குகின்றதேயொழிய திணை என்ற சொல்லுக்குப் பொருள் கூறவில்லை.

சு.அ.இராமசாமிப் புலவர் இயற்றிய சிறப்புப் பெயர் அகராதி திண்ணனாரின் பெயரை விளக்கும் கருத்தில்,

> திண்ணர் - கண்ணப்ப நாயனார்க்கு இடப்பெற்ற பிள்ளைப் பெயர். உடல் திண்மையுடையதாக அமைந்திருந்தமையின் இவ்வாறு பெயரிட்டனர் [63]

என்று கூறியதால், 'திணை' என்றது 'திண்மையுடையது' என்ற பொருளை உணர்த்துவதாக உள்ளது.

சென்னைப் பல்கலைக்கழகம் வெளியிட்ட 'தமிழ் லெக்சிகன்' என்ற தமிழ்ப் பேரகராதி 'திணை' என்பதை ஆங்கிலம், தமிழ் ஆகிய இரண்டு மொழிகளிலும் விளக்கியுள்ளது.

> திணை thinai, n. perh. id. 1. Earth, land; பூமி (பிங்.). 2.Place, region, situation, site; இடம் (பிங்.). 3.House; வீடு. திணைபிரி புதல்வர் (பரிபா.16, 7). 4.Tribe, caste, race, family; குலம். உயர்திணை யூமன் (குறுந்.224). 5.Conduct, custom; ஒழுக்கம். அவன் றொஃறிணை மூதூர் (மலைபடு.401). 6.Conventional rules of conduct laid down in the Tamil works, of two classes, viz., aka-t-tinai and purattinai; தமிழ் நூல்களில் கூறப்படும் அகமும் புறமுமாகிய ஒழுக்கம். ஐந்திணை நெறியளாவி (கம்பரா.சூர்ப்பணகை.1). 7.(Gram.) Class, as of nouns, of two kinds, viz., uyartinai and akrinai; உயர்திணை யஃறிணைகளாகிய பகுப்புக்கள். ஆயிரு திணையி னிசைக்குமன் சொல்லே (தொல். சொல்.1) [64]

இக்கருத்துகள் மேலே தொகுத்துக் கண்ட இலக்கண இலக்கியச் சான்றுகளின் சாரமாகத் தோன்றுகின்றன.

தமிழ்ப் பல்கலைக்கழகம் வெளியிட்ட பெருஞ்சொல்லகராதி 'இருதிணை' என்பதற்கு,

> பெ. 1. உயர்திணை அஃறிணை. உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே, அஃறிணை என்மனார் அவரல பிறவே, ஆயிரு திணையின் (தொல். சொல். 1 சேனா.எ.வ.). 2.இயங்குதிணை நிலைத்திணை. (செ.ப.அக.) 3.அகத்திணை புறத்திணை. (மதுரை.அக.) [65]

என்று பொருள் கூறியுள்ளது. இயங்குதிணை என்பதை,

> பெ. சரப்பொருள் தானாய் இடம்விட்டுப் பெயரும் பொருட்கூட்டம். இயங்குதிணையும் நிலைத்திணையுமாம் (தொல். சொல். 1 நச்.) ஐந்தாவன நீக்கப் பொருண்மைஸஇயங்குதிணை பண்பு என்பனவற்றை நிலைக்கள மாகக் கொண்டு தோன்றும் (இலக். கொத். வேற்றுமை.26 உரை) [66]

என்று விளக்குகின்றது. 'உயர்திணை' என்பதனை, "பெ. மேல்குலம். உயர்திணை ஊமன் போல (குறுந்.224)" [67] என்று விளக்குகின்றது. 'அஃறிணை' என்பதற்கு,

> பெ. மக்கள் அல்லாத பிற உயிர்களும், உயிரற்ற பொருள்களும் அடங்கும் இலக்கணப் பகுப்பு. உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே, அஃறிணை என்மனார் அவரல பிறவே (தொல். சொல். 1 இளம்.). காதற் பரத்தை எல்லார்க்கும் உரியள் என்றாகாதே சூத்திரம் செய்தற்பாலது உரித்து என்று அஃறிணை வாய்பாட்டாற் சொல்லிற்று.. (இறை. அக.40 உரை). மக்கள் தேவர் நரகர் உயர்திணை மற்று உயிருள்ளவும் இல்லவும் அஃறிணை (நன்.261). தன்னுணர்ச்சி கெட்டு அஃறிணைகளின் உடற்றறிப்பார் (நல். பாரத். யயா.20) [68]

என்று பொருள்விளக்கம் தந்துள்ளது.

ம.ப.பெரியசாமித் தூரனை முதன்மை ஆசிரியராகக் கொண்டு சென்னை தமிழ் வளர்ச்சிக் கழகம் பல தொகுதிகளாக வெளியிட்ட கலைக்களஞ்சியத்தில் 'திணை' என்ற சொல் இடம்பெறவில்லை என்பது சுட்டத்தக்க ஒரு செய்தி.

ஜே.பி.ஃபேப்ரிசியஸ் என்பவர் தம் தமிழ்-ஆங்கிலம் அகராதியில் ஆங்கிலத்திலும் தமிழிலும் பின்வருமாறு விளக்கம் அளித்துள்ளார்.

> திணை-s. tribe, caste, race. சாதி; 2. Regular course of conduct, ஒழுக்கம்; 3. The two classes of nouns, pronouns and verbs, உயர்திணை, rational and அஃறிணை, irrational; 4. Soil, land, நிலம்;

*5. General division of themes or subjects in writings, பொருள்; 6.the earth, பூமி; 7. Site, location, place, இடம்.*

*ஐந்திணை, the five species of lands, குறிஞ்சி, மருதம், முல்லை, நெய்தல் and பாலை* [69]

*இணையத் தளத்தில் 'விக்கிபீடியா'* [70] *என்ற கலைக்களஞ்சியம் தமிழறிஞர் சிலரின் நூல்களின் வழியாகத் திரட்டிய கருத்துக்களின் அடிப்படையில் தரும் செய்தி பின்வருமாறு:*

*தமிழ்ச் செய்யுளில் 'திணை' என்பது செய்யுள் வகை அல்லது கரு ஆகும். செய்யுள் நிகழும் நிலம் - குறிப்பிட்ட செய்யுள் உணர்த்தும் பொழுது, இடம், சூழல் மற்றும் தாவரம், விலங்கு, மக்கள், தெய்வம், சமூகத் தொழில் உள்ளடங்கிய அந்த நிலத்தில் கருக்கொண்டுள்ள பொருட்களைக் குறிக்கும். கவித்துவ உருவகமாகக் கற்பனை உருவாக திணையின் பின்புலக் கருப்பொருட்கள் உதவும். 'உள்ளுறை' என்னும் உட்பொருள் அமைந்து செய்யுளின் மெய்ப்பாடு உருவாகவும் உதவும். [In Tamil poetics, thinais (Tamil: திணை tinai "genre", "type") is a type of poetical mode or theme. A thinai consists a complete poetical landscape - a definite time, place, season in which the poem is set - and background elements characteristic of that landscape - including flora and fauna, inhabitants, deities and social organisation. These collectively provide imagery for extended poetic metaphors ("Ullurai", literally "inner meaning"), which set the mood of the poem. - **Buck. David C., Paramasivan, K. (1997), The Study of Stolen Love: A translation of Kalaviyal enra Iraiyanar Akapporul with Commentary by Nakkiranar, Atlanta: Scholars Press, ISBN 0788503316, p.ix.**]*

*தொல்லாசிரியர்கள் திணையின் இருபெரும் பகுப்புக்களை உணர்த்தியுள்ளனர். ஒன்று அகத்திணை. இது காதலைப் பாடும். உறவுகளை வளர்க்கவும் உறவுகளின் பல்வேறு நிலைகளை விளக்கவும் அகத்திணைச் செய்யுள்கள் அமையும். மற்றொன்று புறத்திணை. இது அகத்திணையோடு நெருங்கிய உறவு உடையது. எனினும் வீரம், அறம், தத்துவம் முதலிய பொருள் பற்றி வரும். புறத்திணைச் செய்யுள்கள் போர்க்கள வழக்காறுகளை அல்லது குறிப்பிட்ட தத்துவச் சிந்தனைகளை விளக்குவனவாக அமையும். [Classical authors recognised two broad categories of thinais. Akam thinais (literally, "the inner genre") consisted of modes used in love poetry, associated with specific aspects of a relationship or specific stages in the development of a relationship. Puram thinais (literally, "the outer genre") consisted of modes that corresponded closely to the akam*

modes, but were used in heroic, philosophical and moral poetry, to describe the stages of a battle or particular patterns of thought. - Ramanujam, A.K., (1985), Poems of Love and War from the Eight Anthologies and Ten Long Poems of Classical Tamil, UNESCO Collection of Representative Works, New York, Colombia University Press, ISBN 0231051069, pp.237-269.] [71]

## 'திணை' - முடிபுகள்

'திணை' என்றால் என்ன என்பதைத் தொல்காப்பியர் தம் நூலில் எந்த இடத்திலும் விளக்கவில்லை.

தமிழறிஞர்கள், தமிழின் பழைய இலக்கண இலக்கியங்களில் வந்துள்ள திணை என்ற சொல்லுக்கு உரையெழுதிய தொல்லாசிரியர்கள், பழைய நிகண்டுகள், அகராதிகள், கலைக்களஞ்சியங்கள் முதலிய பல அறிஞர் 'திணை' என்ற சொல் குறித்துத் தெரிவித்த கருத்துக்களைக் கீழே தொகுத்து, பிறகு ஒரு முடிவுக்கு வரலாம்.

- திணை முதலில் நிலத்தைக் குறிக்கும்; பின்னர் அந்நில மக்களின் வாழ்க்கை ஒழுகலாற்றைப் பாடும் இலக்கியத்தைக் குறிக்கும்.
- திணை - நாடக மேடையை - 'திண்ணை'யைக் குறிக்கும்.
- ஒவ்வொரு நிலப்பகுதியையும் ஒரு குறிப்பிட்ட ஒழுக்க முறையுடன் தொடர்புபடுத்துவதைக் குறிக்கும் ஒரு குறியீடுதான் திணை.
- பொதுக்கருத்து அல்லது உள்ளடக்கம்.
- ஒழுக்கம் அல்லது நடத்தை.
- 'திணை' என்ற சொல்லின் வேர் 'திண்' ஆகும். வலிமை, நெருக்கம், செறிவு என்றும் பொருளைத் தரும் 'திண்' என்ற சொல் சங்கச் செய்யுள்களில் 28 இடங்களில் வந்துள்ளது.
- 'திணை' என்றால், சாதி.
- ஒழுக்கம்.
- பொருள்.
- பகுதி.
- திணை என்பது அகம்புறம் என்று அறியச் செய்தல்.
- உயர் ஒழுக்கம், பேணா ஒழுக்கம் இரண்டையும் திணை குறிக்கும்.
- சங்கப் பாடல்களில் வந்துள்ள 'திணை' என்ற சொல்லுக்கு உரையாசிரியர்கள் கூறியுள்ள பொருள்கள்: நிலம், குலம், குடி, திண்ணை, உயர்ந்த ஒழுக்கம், நல்லொழுக்கம், நன்னெறி, இல் (வீடு), இருப்பிடம், சீரிய குடி, பூமி.

- நிகண்டுகள், அகராதிகள் முதலியன 'திணை' என்ற சொல்லுக்குக் கூறியுள்ள பொருள்கள்: குலம், ஒழுக்கம், ஒழுக்கம் நிகழ்ந்த நிலம், இடம், குடி. விழுப்பம், சாதி, பொருள், பகுப்பு, அகமும் புறமுமாகிய ஒழுக்கம், உயர்திணை-மேல்குலம்; அஃறிணை-மேல்குலம் அல்லாத உயிர்களும் உயிரற்றனவும், செய்யுள் வகை அல்லது கரு.

ஆகிய பொருள்களைத் தமிழறிஞர் பெருமக்கள் கூறியுள்ளனர்.

'திணை என்றால் ஒழுக்கம்' என்று சொன்னதைச் சொல்லும் கிளிப்பிள்ளை போலச் சொல்லுவதை ஒழித்து, ஒரு முடிவுக்கு வரலாம். 'திணை' என்பதை இரண்டு வகையில் புரிந்துகொள்ள முடிகிறது.

<u>ஒன்று:</u>

'திணை' என்பது 'திண்ணிய பழக்கம்'. உயர்ந்த பழக்கவழக்கம் உடையவர் உயர்திணை; அஃது அல்லாதவர் அஃறிணை.

உயர்+திணை=உயர்திணை (உயர்ந்த பழக்கவழக்கமுடையவர்)

அல்+திணை=அஃறிணை (உயர்ந்த பழக்கம் அல்லாதவர்)

கோடானு கோடி உயிர்களும் உயிரற்ற பொருள்களும் கொண்ட இவ்வுலகில், நல்ல பழக்கவழக்கம் உடைய - நன்னடத்தை உடைய - மனம் (அறிவு) உடைய 'மனிதன்' என்ற ஒரு சாதி மட்டுமே உயர்திணை! மனிதன் தவிர்த்த ஏனைய கோடானு கோடி உயிர்கள், உயிரற்ற பொருள்கள் அனைத்தும் அஃறிணை!

"உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே
அஃறிணை என்மனார் அவரல பிறவே
ஆயிரு திணையின் இசைக்குமன் சொல்லே" (தொல். சொல். 1)

<u>இரண்டு:</u>

மனித குலம் தோன்றி வளர்ந்த சூழலுக்கு ஏற்ப, அறிவு சிறுகச் சிறுக வளர்ந்தபோது, அகவாழ்க்கை, புறவாழ்க்கை என இரு வகையிலும் நாகரிக வழக்காறுகள் சில உருவாகி நிலைபெற்றன. நிலைபெற்ற அவை அகத்திணை, புறத்திணை என்று பெயர்பெற்றன.

விலங்குகளை வேட்டையாடி உண்டு வாழ்ந்த வேட்டைச் சமூகத்தில் ஒத்த ஆணும் பெண்ணும் பாலியல் வேட்கை கடந்து, அன்பால் மனங்கலந்து 'களவு' என்ற வழக்காறு உருவானது. அது 'குறிஞ்சி' எனப்பட்டது. அதே காலத்தில் வேட்டையாடிய விலங்குகளில் உண்டது போக எஞ்சிய ஆநிரைகள் சொத்துக்களாக நிலைபெற, ஒரு குழுவினரின் ஆநிரையைப் பிற குழுவினர் பறிக்கும் போர் வழக்காறு உருவானது. அது 'வெட்சி' எனப்பட்டது. வெட்சி குறிஞ்சிக்குப் புறனாகத் தோன்றியது. "வெட்சி தானே குறிஞ்சியது புறனே" (தொல். புறத். 1). இது மலை நில வாழ்க்கையில் நடந்தது.

இப்படியே பல ஆயிரம் ஆண்டுகள் உருண்டோடின. மலையை விட்டு இறங்கி மனிதர்கள் ஆநிரைகளை மேய்க்கக் காடுகளில் வாழ்ந்த ஒரு காலத்தில்

வேளாண் அறிவு உருவானது. உழவுக்கு ஏற்றனவாகக் காடுகள் வயல்களாகச் செய்யப்பட்டன. வயல்வளம் என்னும் மண் சொத்தானது. மண்ணைப் பறிக்கும் போர் உருவானது. படையும் அரசும் உருவாயின. ஓர் அரசு வயல்வளம் கொண்ட அடுத்த அரசைப் போரிட்டுப் பறித்தது. அந்த வகைப் போர் 'வஞ்சி' எனப்பட்டது. அதே காலத்தில் அரச வாரிசை முறைப்படுத்த அரசனின் மனைவி கற்போடு 'இருக்கும்' திருமணம் என்ற 'முல்லை' ஒழுக்கம் வலியுறுத்தப்பட்டது. வஞ்சிப் போரும் முல்லை வழக்காறும் ஒரே காலத்தில் புறமும் அகமுமாக உருவாயின. "வஞ்சி தானே முல்லையது புறனே" (தொல். புறத்.5). இது காடு நில வாழ்க்கையில் நடந்தது.

இப்படியே சில ஆயிரம் ஆண்டுகள் கழிந்தன. முன்னர்க் காடுகளாக இருந்த நிலங்களில் பெரும்பகுதி வயல்காடுகளாக மாறின. அக்காலப் பகுதியில் பொன்னும் மணியும் எனக் கனிம வளங்கள் மனித குலத்தின் மூன்றாவது சொத்தாக உருவாகியது. அவற்றைப் பாதுகாக்கக் கோட்டை கொத்தளங்களை அரசர்கள் கட்டினர். பொன்னைப் பதுக்கிய கோட்டைகளை முற்றுகையிடும் போர் உருவானது. அது 'உழிஞை' எனப்பட்டது. அதே காலத்தில், அரசரும் அரசியல் சார்ந்தோரும் தம் வளமைச்செருக்கால் பொன்னிழைகளை ஆடல் மகளிராம் பரத்தையர்க்கு அளித்து அவர்களின் துணையை நாட, இல்லுறை மகளிர் அவர்களோடு ஊடல் கொள்ளும் 'மருதம்' என்ற வழக்காறு உருவானது. "உழிஞை தானே மருதத்துப் புறனே" (தொல். புறத்.9).

இவ்வாறே குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை, பெருந்திணை, கைக்கிளை என்று அகவாழ்க்கையில் தோன்றிய ஏழு திணைகளுக்குப் புறனாக வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் என்ற புறத்திணைகள் ஏழும் இணைஇணையாகச் சம காலத்தில் தோன்றின. (இதன் விளக்கத்தினை இயல்-7இல் காணலாம்). இவ் வழக்காற்றை நோக்கும்போது 'திணை' என்ற சொல், 'நாகரிகம்' என்ற பொருளைத் தருவதாகவும் உள்ளது.

'திணை' என்ற சொல்,

(1) நல்ல பழக்கவழக்கம் (நன்னெறி)

(2) நாகரிகம்

ஆகிய இரண்டு பொருள்களில் வழங்கியது தெளிவாகிறது. இவை இரண்டனுள், பிற்காலச் சொல்லான 'நாகரிகம்' என்ற பொருள் சாலப் பொருந்தும் என்று கூறலாம்.

## 'திணை' என்றால் 'நாகரிகம்'

'நாகரிகம்' என்ற சொல் தொல்காப்பியர் காலத்தில் இல்லை. தமிழ்ப் பரப்பில் திருக்குறளில்தான் முதன்முதலாக 'நாகரிகம்' என்ற சொல் ஓர் இடத்தில் மட்டும் வந்துள்ளது.

"பெயக்கண்டும் நஞ்சுண்டு அமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்" (குறள்.580)

சங்க இலக்கியங்களில் 'நாகரிகர்' என்ற சொல்லாட்சி நற்றிணைப் பாடல் ஒன்றில் மட்டும் வந்துள்ளதைக் காண முடிகிறது.

"முந்தை யிருந்து நட்டோர் கொடுப்பின்
நஞ்சும் உண்பர் நனிநா கரிகர்" (நற்.355)

இவ் அரிய கருத்தையே ஓர் அறநெறியாகத் திருவள்ளுவர் வழிமொழிந்து கூறியதாகத் தெரிகிறது.

இச்சான்றுகளை நோக்க, 'நாகரிகம்' என்ற சொல், சங்க கால இறுதியில் தமிழ் வழக்கிற்கு வந்ததை அறிகிறோம். இதன் வேர்ச்சொல் 'நகர்' என்பதாகும். 'நகர்' என்ற சொல் 'பெரிய வீடு', 'மாளிகை', 'அரண்மனை' என்னும் பொருளில் சங்க காலத்தில் வழங்கியதற்குச் சான்றுகள் பல உள.

"அந்தணர் அருகா அருங்கடி வியன்நகர்" (சிறுபாண்.187)

"சாடம் சார்த்திய கணைதுஞ்சு வியன்நகர்" (பெரும்பாண்.121)

"தொடர்நாய் யாத்த துன்னருங் கடிநகர்" (பெரும்பாண்.125)

"பைஞ்சேறு மெழுகிய படிவ நல்நகர்" (பெரும்பாண்.298)

"செவ்வி பார்க்கும் செழுநகர் முற்றத்து" (பெரும்பாண்.435)

"நெடுநகர் வீழ்ந்த கரிகுதிர்ப் பள்ளி" (மதுரைக்.169)

"பயன்அறவு அறியா வளங்கெழு திருநகர்" (மதுரைக்.216)

"நெடுஞ்சுடர் விளக்கங் கொளீஇ நெடுநகர்" (மதுரைக்.556)

"கடியுடை வியல்நகர் சிறுகுறுந் தொழுவர்" (நெடுநல்.49))

"தருமணல் ஞெமிரிய திருநகர் முற்றத்து" (நெடுநல்.90)

"வருநர்க்கு வரையா வளநகர் பொற்ப" ((குறிஞ்.202)

"அகல்நகர் வியல்முற்றத்து" (பட்டினப்.20)

"திருநகர் முற்றம் அணுகல் வேண்டி" (மலை.548)

"எந்தை ஓம்பும் கடியுடை வியனகர்" (நற்.98)

"தருமணல் ஞெமிரிய திருநகர் முற்றத்து" (நற்.143)

"கடியுடை வியனகர் காவல் நீவியும்" (நற்.156)

"கடியுடை வியனகர் காவலர் துஞ்சார்" (நற்.255)

"திருவுடை வியனகர் வருவிருந்து அயர்மார்" (நற்.258)

"கடியுடை வியனகர்க் காண்வரத் தோன்றி" (நற்.305)

"சீர்கெழு வியனகர் வருவனள் முயங்கி" (நற்.339)

"விளங்குநகர் அடங்கிய கற்பின்" (குறுந்.338)

"நன்மனை நெடுநகர் பலம்புகொள வறுதரும்" (ஐங்.236)

"பொன்னகர் வரைப்பின் கன்னம் தூக்கி" (ஐங்.247)

"ஓவத் தன்ன உருகெழு நெடுநகர்" (பதிற்.88)

"தொழில் வீற்றிருந்த நகர்" (பரி.18:29)

"அகனகர் கொள்ளா அலர்தலைத் தந்து" (கலித்.18:4)

"அல்லல் களைந்தனன் தோழி, நந்நகர்

அருங்கடி நீவாமை கூறி னன்றென" (கலித்.54:16-17)

"வளமைசா லுயர்சிறப்பி னுந்தைதொல் வியனகர்" (கலித்.57:6)

"நினக்கொத்த நல்லாரை நெடுநகர்த் தந்துநின்" (கலித்.70:17)

"பாழி யன்ன கடியுடை வியனகர்" (அகம்.15)

"வளங்கெழு திருநகர்ப் பந்துசிறி தெறியினும்" (அகம்.17)

"அல்குபதம் மிகுத்த கலியுடை வியனகர்" (அகம்.49)

"வரைகுயின் றன்ன வான்தோய் நெடுநகர்" (அகம்.93)

"திருநகர் அடங்கிய மாசில் கற்பின்" (அகம்.114)

"கடிநகர் புனைந்து கடவுட் பேணி" (அகம்.136)

"நெல்லுடை நெடுநகர் நின்னின்று உறைய" (அகம்.176)

"தருமணல் ஞெமிரிய திருநகர் முற்றம்" (அகம்.187)

"முழவுமுகம் புலரா விழவுடை வியனகர்" (அகம்.206)

"அருங்கடி வியனகர் நோக்கி" (அகம்.224)

"விழுநிதி துஞ்சும் வீறுபெறு திருநகர்" (அகம்.227)

"கடியுடை வியனகர்க் காவல் கண்ணி" (அகம்.232)

"கடியுடை வியனகர் ஓம்பினள் உறையும்" (அகம்.298)

"அருங்கடிக் காப்பின் அகனகர் ஒருசிறை" (அகம்.311)

"வெண்மணல் நிவந்த பொலங்கடை நெடுநகர்" (அகம்.325)

"பொன்னுடை நெடுநகர்ப் புரையோர் அயர" (அகம்.385)

"முழவுமுகம் புலரா விழவுடை வியனகர்" (அகம்.397)

"கடியுடை வியனக ரவ்வே யவ்வே" (புறம்.95)

"அரைசுகெழு செல்வர் நகர்போ லாதே" (புறம்.127)

"ஒளிறுவாள் மன்னர் ஒண்சுடர் நெடுநகர்" (புறம்.177)

"பொன்னுடை நெடுநகர் நிறைய வைத்தநின்" (புறம்.198)

"முழவுகண் துயிலாக் கடியுடை வியனகர்" (புறம்.247)

"வையங் காவலர் வளங்கெழு திருநகர்" (புறம்.261)

"கடியுடை வியனகர்க் காண்வரப் பொலிந்த" (புறம்.272)

"நெடுநகர் வரைப்பிற் கடிநறை புகைஇ" (புறம்.281)

"நெல்லுடை நெடுநகர்க் கூட்டுமுதற் புரளும்" (புறம்.287)

"கபில நெடுநகர்க் கமழு நாற்றமொடு" (புறம்.337)

"பனிக்கயத் தன்ன நீள்நகர் நின்றென்" (புறம்.378)

"அருங்கடி வியனகர்க் குறுகல் வேண்டி" (புறம்.383)

"கனவினுங் குறுகாக் கடியுடை வியனகர்" (புறம்.390)

மேற்சுட்டிய சான்றுகளில் 'நகர்' என்ற சொல் அரசரின் அரண்மனை அல்லது அதுபோன்ற பெரிய வீடுகளைக் குறித்தன. சங்கப் பாடல்களில் எண்ணிறந்த இடங்களில் வந்துள்ள மனை, இல் என்னும் சொற்கள் எளிய வீடுகளைக் குறித்தன. நகர் என்பது கலைத்தொழில் மிகுந்த செல்வந்தர் வீட்டைக் குறித்தது. "தொழில் வீற்றிருந்த நகர்" (பரி.18:29) என்பது இதற்குச் சான்று. அத்தகைய செல்வந்தர் அரசனுக்கு நிகரானவர்களாக இருந்தனர். "அரைசுகெழு செல்வர் நகர்போ லாதே" (புறம்.127) என்பது இதனை உணர்த்தும்.

வாசலைத் திறந்தால் ஒரே அறையோடு முடியும் வீடு 'மனை', 'இல்' எனப்பட்டது. அவ்வாறு முடியாமல் பல அறைகளாக அமைந்து, ஒவ்வோர் அறையாகப் போய்ப் பார்க்கும் அளவில் பரந்து விரிந்தமைந்த பெரிய வீடு நகர்; **நகர்ந்து நகர்ந்து போய்ப் பார்ப்பதால் அது 'நகர்'** எனப்பட்டது. காலப்போக்கில் இத்தகைய மாடமாளிகைகளைக் கொண்ட ஊரும் நகர், நகரம் என்று அழைக்கப்பட்டது. சங்க இலக்கியங்களில் நகரம் என்ற பொருளிலும் 'நகர்' என்ற சொல் வழங்கியது காணலாம்.

"கடிமரந் துளங்கிய காவு நெடுநகர்" (புறம்.23)

"நெடுநகர் வரைப்பிற் படுமுழா ஓர்க்கும்" (புறம்.68)

"கொளக்கொளக் குறைபடாக் கூழுடை வியனகர்" (புறம்.70)

எழுநிலை மாடம் போன்ற மாட்மாளிகை (நகர்) கட்டி வாழ்ந்த மக்களை 'நகரிக' மக்கள் எனச் சுட்டினர். 'நகரிக' என்பதே, முதனிலை நீண்டு 'நாகரிக' > 'நாகரிகம்' என ஆனது.

கலைத்தொழில் மிக்க - வளமான பரந்து உயர்ந்த பெரிய வீடு 'நகர்' எனப்பட்டு, அந்த வேர்ச்சொல்லின் அடியாக 'நாகரிகம்' என்ற சொல் உருவானது. இதனால், 'நாகரிகம்' என்ற சொல்லுக்குப் பொருள்: கலைநயமானது, வளமானது, பழக்கவழக்கங்களில் உயர்வானது, ஒழுக்கத்தில் செறிவானது, திண்ணியது என்று கூறலாம். 'நாகரிகம்' என்ற சொல் உருவாவதற்கு முன்னரே வழக்கிலிருந்த 'திணை' என்ற சொல்லும் இதே பொருளையே தருவதாக உள்ளது.

எனவே, **'திணை' என்ற சொல் 'நாகரிகம்' என்ற பொருளைத் தருவதாகக் கொள்வது சாலவும் பொருந்தும்** எனலாம். திணை என்றால் நாகரிகம். உயர்திணை=உயர்ந்த நாகரிகர்; அஃறிணை=அஃதல்லாதவர். அகத்திணை=அகநாகரிகம்; புறத்திணை=புறநாகரிகம்.

இனி, இந்த உலகம் தோன்றிய வரலாறு முதலாக உயிரினங்கள் தோன்றி, அதன்பின் பாலூட்டிகள் தோன்றிப் பரிணாம வளர்ச்சியாக வாலில்லாக் குரங்குகள்வழிப் படிப்படியாக மனித இனம் தோன்றிய வரலாற்றினைக் காண்போம். அதன் தொடர்ச்சியாக, தமிழர் குலம் படிப்படியாக நாகரிகம் பெற்று வளர்ந்த திணை வரலாற்றினைத் தொல்காப்பியச் சான்றாதாரங்கள்வழித் தெளிவுற விளக்க வழிசெய்யும்.

# 2. உலகம் பிறந்தது

ஆதியிலே கடவுள் விண்ணையும் மண்ணையும் படைத்தார். கடவுள் பூமியைப் படைத்த பின்னர், பூமியில் வெளிச்சம் வேண்டுமே என்பதற்காகச் சூரியனையும் சந்திரனையும் படைத்தார்; பிறகு பறவை, விலங்குகளையும் மனிதனையும் படைத்தார் என்று பைபிள் பகர்கிறது. ஏறத்தாழ இதே கருத்தைக் குர்ஆன் கூறுகிறது. உலகத் தோற்றம் குறித்து வைதிகச் சமயங்கள் கூறும் கருத்துகள் வேறு. அஷ்டதிக்கஜங்கள் என்ற எட்டு யானைகள் பூமியைத் தாங்கிக்கொண்டிருக்கின்றன. பூமியைப் பாயாகச் சுருட்டிக் கடலின் அடியில் அரக்கர்கள் ஒளித்து வைத்தபோது, திருமால் வராக அவதாரம் எடுத்து உலகத்தை மீட்டுக்கொண்டுவந்தார். வேங்கடேச புராணத்தில் ஆகாயம், அக்கினி, சூரியன், பூமி, உயிர்கள் ஆகியவற்றின் தோற்றத்தைப் பற்றிச் **சுகர் மாமுனி** ஸ்ரீ நாராயணனை முழுமுதலாக வைத்துப் பலவாறு விளக்குகின்றார். இப்படிச் சில கருத்துகள் உண்டு. இவைகுறித்த தத்துவார்த்த ஆய்வுக்குச் செல்லாமல், உலகத்தின் தோற்றத்தை அறிவியல் அடிப்படையில் அணுகினால், அறிவியல் தரும் செய்திகள் வேறாக உள்ளன.

சூரியனிலிருந்து உருவான சூரியக் குடும்பத்தைச் சேர்ந்த பல கோள்களில் ஒன்றுதான் பூமி என்ற இந்த உலகம். இந்த உலகம் தோன்றி 4600 மில்லின் - அதாவது 460 கோடி ஆண்டுகள் ஆயின என்பர்.[72]

## சூரியன் எப்போது பிறந்தது? எப்படிப் பிறந்தது?

பூமி தோன்றி 460 கோடி ஆண்டுகள் ஆயின. அதற்கு 40 கோடி ஆண்டுகளுக்குமுன் - அதாவது இன்றிலிருந்து 500 கோடி ஆண்டுகளுக்கு முன்னால் சூரியன் தோன்றியது என்பர். பிரபஞ்சம் என்னும் அண்டவெளியை ஆங்கிலத்தில் 'பால் வீதி' (Milky way) என்று கூறுவர். பால் வீதியை 'ஆகாய கங்கை' என்றும் அழைப்பது உண்டு. அது மங்கலான விண்மீன்களின் கூட்டமாக இருக்கும் என்பது விஞ்ஞானிகளின் கருத்து. இதுபோலப் பல ஆகாய கங்கைகள் இந்த அண்டவெளியில் உள்ளன.

> ஆகாய கங்கை போன்ற நட்சத்திரக் கூட்டங்கள் தோன்றி 7,000 மில்லியன் ஆண்டுகளுக்குப் பிறகே சூரியன் தோன்றியதாம். சூரியன் தோன்றி 5,000 மில்லியன் ஆண்டுகள் ஆகின்றன [73]

என்பர்.

சுமார் ஐந்நூறு அறுநூறு கோடி ஆண்டுகளுக்கு முன்னால், இருண்ட அண்டவெளி முழுவதும் ஹைட்ரஜன் அணுக்களைக் கொண்ட வாயுத்திரள்களும் பல்வேறு மூலங்களைக் கொண்ட தூசிப்படலங்களும் மிதந்துகொண்டிருந்தன. பிரபஞ்சத்தின் பல பகுதிகளிலும் ஒளிவீசிய நட்சத்திரங்களின் அல்ட்ரா வைலட் ஒளிக் கதிர்வீச்சின் ஆற்றல், அந்த வாயுத்திரள்களையும் தூசிப்படலங்களையும் மெல்ல மெல்லத் தள்ளி விளையாடியது. இப்படியே காலம், பற் பல இலட்சம் ஆண்டுகளைக் கடந்து சென்றது.

அல்ட்ரா வைலட் ஒளிக் கதிர்வீச்சின் வேகம் அதிகரிக்க அதிகரிக்க, ஹைட்ரஜன் அணுத்திரள்களும் தூசிப்படலங்களும் கடுமையான ஒளிக்கதிர்வீச்சின் அழுத்தத்திற்கு இலக்காயின. அணுக்களின் மோதலால் வெப்பம் உருவானது. ஈர்ப்புத் தன்மையும் சுழற்சியும் மிகுதிப்படும்போது, வெப்பம் மிகுந்து அனலாகத் தகிக்கத் தொடங்கியது!

காலம் இப்படியே நகர, ஹைட்ரஜன் அணுக்கள் பிளந்தன. மேலும் மேலும் பிளந்து சிதறின. அதன் விளை

ளவாக, மிகுந்த வெப்பம் விளைந்தது. வாயுத்திரள் அனல்பிழம்பாக மாறி மாறி அதுவே உருண்டு திரண்டு, சூரியனாக உருப்பெற்றது! இமானுவெல் காண்ட் (1724 - 1804) என்ற ஜெர்மன் நாட்டு வானியல் வல்லுநர் இவ்வுண்மையை ஆராய்ந்து கண்டறிந்தார் என்பர். [74]



இமானுவெல் காண்ட்

சூரியனின் வெப்ப அளவு வியக்கத்தக்க மிகுதியுடையது. இருபது மில்லியன் டிகிரி சென்டிகிரேட் வெப்பத்தைத் தன் நடுப்பகுதியிலும், 6,000 டிகிரி சென்டிகிரேட் வெப்பத்தைத் தன் மேற்பரப்பிலும் கொண்டுள்ளது. [75]

சூரியனை உருண்டையான ஒரு பை போலக் கற்பனை செய்தால், அதற்குள் நாம் வாழும் உலகத்தைப் போல 33,000 பூமிகளை ஒன்றாகச் சேர்த்து அடைத்துவிடலாம். அதன் விட்டம் 8,64,000 மைல் ஆகும். கிலோ மீட்டரில் சொல்வதானால், சுமார் 14 இலட்சம் கிலோ மீட்டர் எனலாம். பூமியின் விட்டம் 12,670 கிலோ மீட்டர் மட்டுமே.

## பூமி உட்பட ஒன்பது கோள்களின் தோற்றம்

சூரியனைப் போலவும் - சூரியனை விட அளவில் மிகப் பெரிதாகவும் உருவமுள்ள இராட்சச நட்சத்திரங்கள் அண்டப் பெருவெளியில் மிக வெகு தூரத்தில் இருக்கின்றன. எண்ணுதற்கரிய வெகுதூரத்தில் அவை இருப்பதால், இரவில் மினுக்கிடும் நட்சத்திரப் புள்ளிகளாகவே அவை நமக்குத் தெரிகின்றன. அந்தப் பூதாகரமான நட்சத்திரங்கள் தங்களுக்கென்று வரையறுக்கப்பட்ட பாதைகளில் இன்றைக்கும் முறையாகச் சுற்றிவருகின்றன. இப்படித்தான்-

460 கோடி ஆண்டுகளுக்குமுன் ஒருநாள்...

ஓர் இராட்சச நட்சத்திரம் தனக்கென்றிருந்த பாதையைவிட்டு விலக, எரிநட்சத்திரம் போல அண்டவெளியில் பயணித்துச் சூரியனுக்கு அருகே கடந்து செல்ல நேரிட்டது. அது சூரியனை நெருங்கிப் போனபோது, அந்த இராட்சச நட்சத்திரத்தின் மிகு ஈர்ப்பு விசையால் சூரியனின் மேற்பகுதி கொதித்துத் தழும்பி மலைபோல் அலைகளை

எழுப்பியது. அதனால், சூரியனின் ஒரு பகுதி அண்டமே அதிரும் வண்ணம் வெடித்து நொறுங்கிச் சல்லியும் சற்றே பெரிதுமான துண்டங்களாகச் சிதறியது!



சிதறிய பெரிய ஒன்பது துண்டங்கள் பல மில்லியன் மைல்களுக்கு இழுத்துச்செல்லப்பட்டு, இறுதியில் சூரியனின் ஈர்ப்பு விசையால் வேறுவேறு இடங்களில் நிலைபெற்றுச் சுழல ஆரம்பித்தன. இப்படித்தான் பூமி உட்பட ஒன்பது கோள்களும் பிறந்தன என்று ஒருசாரார் கூறுகின்றனர்.

வேறொரு சாரார் இதனை மறுப்பர். தங்களுக்கென்று வரையறுக்கப்பட்ட பாதையில் நிலைதவறாமல் சுற்றிவரும் நட்சத்திரங்கள் நிலைதடுமாறின என்று கருதுவதற்கு வாய்ப்பே இல்லை என்பது அவர்களின் வாதம். சூரியனின் துணைநட்சத்திரமாக இருந்த ஒன்று நழுவிச் சிதறும் தருணம், சூரியன் தன் ஈர்ப்புக் கயிற்றால் இழுத்து நிறுத்தியதே இந்த ஒன்பது கோள்களும் என்று இவர்கள் அனுமானிக்கின்றனர்.

மூன்றாவது சாரார் மேற்கூறிய இரண்டு கருத்துகளையும் மறுக்கின்றனர். சூரிய மண்டலம் தோன்றியது அப்படியொன்றும் அரிய நிகழ்ச்சி இல்லை. ஒரு பெரிய நட்சத்திரத்தைச் சுற்றிலும் பல கோள்கள் ஒரு குடும்பமாகத் திரண்டு நிற்பது இயல்பான ஒன்றுதான். நட்சத்திரங்களுக்கு இடையே தூசு முகில்கள் உள்ளன. ஒருகாலத்தில் சூரிய மண்டலம் தூசுமுகிலாக உருவாகிப் பெரும் மேகமாக மாறியது. அது சுழன்றபோது, வாயு, தூசு கலந்த மெத்தைகளாகிச் சிதறுண்டது. அந்த மெத்தை உருண்டைகளே குளிர்ந்து கோள்களாயின. ஹைட்ரஜன், அமோனியா, மீத்தேன் போன்ற மிக இலேசான வாயுக்கள் மூல முகிலிலிருந்து பிரிந்து திரண்டு, பெரிய அளவினதான வெளிவரிசை இராட்சசக் கோள்கள் ஆயின. அவற்றுள் 'புளூட்டோ' சிதறி ஓடிய வெளியில் நிறைய எரிந்து சுருங்கிச் சின்னஞ்சிறு கோளாக மாறிக் கடைசி வெளிவரிசையில் போய் நிலைத்தது. எஞ்சிய நான்கும் கல், மண், இரும்பு முதலிய உலோகங்களுடன் சேர்ந்து உள்வரிசைக் கோள்களாகச் சூரியனை நெருங்கி நின்றன. இவற்றுள் பூமியும் ஒன்று என்பது மூன்றாம் சாராரின் கருத்து.

இப்படி வேறுபட்ட கருத்துகள் இருப்பினும், சூரியனிலிருந்து பிரிந்து வந்த சூரியக் குடும்பமே (Solar System) பூமி முதலான ஒன்பது கோள்களும் என்ற கருத்தை அனைவருமே ஒத்துக்கொள்கின்றனர்.[76]




சூரியனைச் சுற்றிலும் நீள்வட்டப் பாதையில் ஒன்பது கோள்களும் இடமிருந்து வலமாக ஒரு முறையாகச் சுற்றி வருகின்றன. அந்த ஒன்பது கோள்களின் நிரல்முறை பின்வருமாறு அமைந்துள்ளது.

1. புதன் (Mercury)
2. வெள்ளி / சுக்கிரன் (Venus)
3. பூமி (Earth)
4. செவ்வாய் (Mars)
5. வியாழன் / குரு (Jupiter)
6. சனி (Saturn)
7. யுரேனஸ் (Uranus)
8. நெப்டியூன் (Neptune)
9. புளூட்டோ (Pluto)

**1. புதன்**

சூரியனைச் சுற்றிவரும் பாதையில் சூரியனுக்கு நெருக்கமாகச் சுற்றும் கோள் புதன் ஆகும். இது சூரியனிலிருந்து 5.76 கோடி கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. வெறும் 88 நாட்களில் புதன் சூரியனை ஒருமுறை முழுமையாகச் சுற்றி வந்துவிடும். (பூமி ஒருமுறை சூரியனைச் சுற்றிவர 365 நாட்கள் பிடிக்கும்). புதன் சூரியனை நெருங்கி முதல் வட்டப்பாதையில் இருப்பதால், அதன் பயண வட்டம் மற்றைய கோள்களின் பாதையை விட மிகச் சிறியது. அதனாலேயே அது 88 நாட்களில் சுற்றிவர முடிகிறது. புதன் தன்னுடைய ஒரு பகுதியை எப்போதும் சூரியன் பக்கமாகக் காட்டியவாறே சுழலும். அதனால் புதனின் ஒரு பகுதி எப்போதும் பகலாக இருக்கும்; மறுபகுதி எப்போதும் இரவாகவே இருக்கும்.

**2. வெள்ளி**

புதனுக்கு அடுத்ததாக இருப்பது வெள்ளி. இது ஏறத்தாழப் பூமியை ஒத்தது. இது சூரியனிலிருந்து 10.8 கோடி கி.மீ. தொலைவில் உள்ளது. சூரியனை ஒருமுறை சுற்றிவர இதற்கு 225 நாட்கள் பிடிக்கும். வெள்ளியைச் **சுக்கிரன்** என்றும் அழைப்பார்கள். வெள்ளி மிக அழகான கோள். இதனைப் பூமியிலிருந்து

அதிகாலையிலோ அந்தியிலோ நாம் பார்க்க முடியும். இதன் ஒளிவீசும் அழகில் மயங்கிய உரோமானியர்கள் தங்கள் காதல் தேவதையான 'வீனஸ்' என்பதன் பெயரை இதற்குச் சூட்டி அழைத்து வருகின்றனர்.

### 3. பூமி

மூன்றாவதாகச் சுற்றிவரும் கோளே நமது பூமி. இது சூரியனிலிருந்து 14.88 கோடி கி.மீ. தொலைவில் இருந்து சுற்றிவருகிறது. பூமியின் விட்டம் 7,920 மைல்கள் (12,670 கிலோ மீட்டர்) ஆகும். பூமி தன்னைத் தானே சுழற்றிக் கொண்டு ஒரு மணிக்கு இலட்சத்து எட்டாயிரம் கிலோ மீட்டர் வேகத்தில் ஓடிக்கொண்டிருக்கிறது. (நமது சூப்பர் ஃபாஸ்ட் ரயில் வண்டிகளின் வேகம் ஒரு மணிக்கு 80 கி.மீ. என்பதோடு ஒப்புநோக்குக).

### 4. செவ்வாய்

பூமிக்கு அடுத்துள்ள கோள் செவ்வாய். இது சூரியனிலிருந்து 22.32 கோடி கி.மீ. தொலைவில் உள்ளது. இதன் மேற்பகுதியில் இருக்கும் இரும்புத் துரு காரணமாக, இது செந்நிறமாகத் தோன்றும். சிவப்பு நிறம் கோபத்தின் அடையாளம் என்பதால், உரோமானியர்கள் தங்களின் கோபமான போர்க்கடவுளான 'மார்ஸ்' என்ற பெயரை இதற்குச் சூட்டினர். பூமியைப் போலவே செவ்வாயும் தன்னைத் தானே சுழன்று சுற்றிவருகிறது. ஒரு நாளைக்கு 24 மணிநேரம் என்ற கணக்கு, பூமியைப் போலவே செவ்வாய்க்கும் ஆகிறது. செவ்வாயிலும் பகலும் இரவும் சம நேரமாகும். ஆனால் செவ்வாய் ஒருமுறை சூரியனைச் சுற்றிவர 687 நாட்கள் ஆகின்றன.

### 5. வியாழன்

வியாழன் மிகப் பெரிய இராட்சசக் கோள் எனலாம். இதன் விட்டம் சுமார் 1.5 இலட்சம் கி.மீ. ஆகும். பூமியைப் போல ஆயிரம் மடங்கு பெரியது. வியாழனின் ஈர்ப்புவிசை பூமியின் ஈர்ப்பு விசையை விட இரண்டரை மடங்கு அதிகம். சூரியக் குடும்பத்தின் அனைத்துக் கோள்களையும் இதற்குள் அடக்கிவிடலாம். இது சூரியனிலிருந்து 77.3 கோடி கி.மீ. தொலைவிலும், பூமியிலிருந்து 65 கோடி கி.மீ. தொலைவிலும் உள்ளது. இத்தனை தொலைவில் இருந்தாலும் பூமியிலிருந்து இதனை இரவில் பார்க்கலாம். ஒரு பிரகாசமான நட்சத்திரத்தைப் போல இது தோன்றும். உரோமானியர்கள் தங்களின் கடவுள்களின் அரசனான ஜூபிடரின் பெயரை இதற்குச் சூட்டி மகிழ்ந்தனர். நமது நாட்டு ஜோதிடர்கள் இதனைத் தங்கள் குருவாகப் பாவித்து, 'குரு' என்று பெயரிட்டு அழைக்கின்றனர். பூமிக்குச் சந்திரன் என்ற ஒரு துணைக்கோள் மட்டும்தான். ஆனால், வியாழனுக்கு 12 துணைக்கோள்கள் உள்ளன. இத்தாலிய விஞ்ஞானியான கலிலியோ இதனை நிறுவினார். சூரியனை ஒருமுறை சுற்றிவருவதற்கு வியாழனுக்கு 12 ஆண்டுகள் ஆகும்.

### 6. சனி

வியாழனுக்கு அடுத்த பெரிய கிரகம் சனி. இது பூமியைவிட 700 மடங்கு பெரியது. சூரியனிலிருந்து 148.8 கோடி கி.மீ. தூரத்தில் இது உள்ளது. இது தன்னைத் தானே சுழன்று ஒருமுறை சுற்றப் பத்து மணி நேரம்தான் ஆகும். அத்தனை வேகமாகச் சுழலும். ஆனால், சூரியனை ஒருமுறை சுற்றி வருவதற்கு 25 ஆண்டுகள் ஆகும்.

சனிக் கோளைச் சுற்றி வளையங்களாகத் தெரிவன அதன் ஒன்பது துணைக்கோள்கள் ஆகும். அவை தாய்க்கோளை விட்டுப் பிரிந்தாலும் அதன் ஈர்ப்பு விசையிலிருந்து முழுமையாக விடுபடாமல் சுற்றிக் கொண்டிருப்பதால் வளையங்களாகத் தெரிகின்றன.

**7. யுரேனஸ்**

சூரியனிலிருந்து யுரேனஸ் 297.6 கோடி கி.மீ. தொலைவில் உள்ளது. இதன் விட்டம் 52,096 கி.மீ. ஆகும். இது சூரியனை ஒருமுறை சுற்றிவருவதற்கு 84 ஆண்டுகள் ஆகின்றன. இதற்கு ஐந்து துணைக்கோள்கள் உண்டு. யுரேனஸின் அச்சு, சூரியனை நோக்கிச் சரிந்து கிடைமட்டத்தில் சுழலும். யுரேனஸ் கோளில் இருந்துகொண்டு ஒருவர், "சூரியன் மேற்கில் உதித்தாலும் உன் ஜம்பம் பலிக்காது!" என்று சவால் விட முடியாது. ஏன் தெரியுமா? இக்கோளில் மட்டும் சூரியன் மேற்கில் உதித்துக் கிழக்கில் மறையும்.

**8. நெப்டியூன்**

இது சூரியனிலிருந்து சுமார் 500 கோடி கி.மீ. தொலைவில் உள்ள கோள் ஆகும். இதன் விட்டம் 19,200 கி.மீ. இது ஒரு மணிக்குச் சுமார் 20,000 கி.மீ. வேகத்தில் வேகவேகமாகச் சுற்றுகிறது. அப்படியும் இது சூரியனை ஒருமுறை சுற்றிவருவதற்கு 165 ஆண்டுகள் ஆகும். இதற்கு இரண்டு துணைக்கோள்கள் உண்டு.

**9. புளூட்டோ**

புதிரானதொரு சிறிய கோள் இது. இதன் விட்டம் 3040 கி.மீ. மட்டுமே. இது சூரியனைச் சுற்றும் பாதை மிக நீண்ட நிள்வட்டமாக இருக்கும். இது சூரியனிலிருந்து 586 கோடி கி.மீ. தூரத்தில் உள்ளது. இது மிகச் சிறிய கோளாக இருந்தும் தன்னைத்தானே சுற்றிக்கொள்வதற்கே ஆறு நாட்கள் ஆகும். இது சூரியனை ஒருமுறை சுற்றி வருவதற்கு 248 ஆண்டுகள் பிடிக்கும்.

## நிரல்பட ஐம்பூதங்களாகத் தோன்றிய உலகம்

நிலம், தீ, நீர், வளி, விசும்பு என்னும் ஐம்பூதங்களும் ஒன்றன்பின் ஒன்றாகத் தோன்றி அவை யாவும் கலந்த மயக்கமே இந்த உலகம் என்றார் தொல்காப்பியர்.

> "நிலம்தீ நீர்வளி விசும்போடு ஐந்துங்
> கலந்த மயக்கம் உலகம் ஆதலின்" (தொல். மரபு.90)

என்ற நூற்பாவின் கருத்து, அறிவியல் கூறுவது போலவே, உலகின் ஐம்பூதங்களின் தோற்ற வரிசையில் முழுமையாகப் பொருந்துகிறது. இது மிக வியப்பான உண்மை!

சுமார் 460 கோடி ஆண்டுகளுக்கு முன்னால் இந்தப் பூமி என்ற நிலம் தோன்றிய காலத்திலிருந்து வரிசை முறையாக 1.நிலம், 2.தீ, 3.நீர், 4.வளி, 5.விசும்பு என்று ஒவ்வொரு படிநிலையாக வரிசையில் வளர்ந்த அறிவியல் உண்மையினை இனி விளக்குவோம்.

## 1. நிலம் - முதலில் தோன்றியது

சூரியனிலிருந்து பிரிந்துவந்து 'நிலைத்த' நாள் முதலாகவே 'நிலம்' என்ற பூமி உருவாகிவிட்டது. 'ஞாலம்' என்ற பெயரும் பூமிக்கு உண்டு. 'ஞாலுதல்' என்றால்

தொங்குதல் என்று பொருள். அண்டவெளியில் தொங்கிக் கொண்டிருப்பதால், நிலம் 'ஞாலம்' எனப்பட்டது. 'ஞாலம்' என்ற சொல்லாட்சி எப்போது தமிழ்வழக்கில் வந்ததோ, அந்தக் காலம் முதலாகவே உலகம் அண்டப் பெருவெளியில் தொங்கும் அறிவியல் உண்மையைத் தமிழர் அறிந்திருந்தனர் எனக் கூறலாம். 'ஞாலம்' என்ற சொல், 2700 ஆண்டுகட்கு முந்திய தொல்காப்பியத்திலேயே உண்டு.

"**ஞாலத்து** வரூஉம் நடக்கையது குறிப்பில்" (தொல். புறத்.36)

வானவியல் அறிவு இற்றைத் தமிழரினும் நம் முன்னோர்க்கு மிகுதியாக உண்டு என்பர்.[77]

## 2. தீ - நிலத்திற்கு அடுத்துத் தோன்றியது

சூரியக் குடும்பமாக உருவான அந்த நாள் முதற்றே, நிலத்தின் மேற்பரப்பு நெருப்புக் குழம்பாகத் தகித்துக் கொதித்தது. நிலத்தைப் பிளந்துகொண்டு எரிமலைகள் நெருப்பைக் கக்கின. நிலமெங்கும் தீப்பிழம்பே நிரம்பி வழிந்தது. உலகம் உருவான காலத்தில் அதன் உட்பகுதி பல இலட்சக்கணக்கான டிகிரி வெப்பத்தில் தகித்தது. மேல்பகுதி 10,000 டிகிரி வெப்பத்தில் கொதித்துக் குமுறியது. பாறைகளும் மூலப்பொருட்களும் அளவிடற்கரிய வெப்பத்தின் காரணமாக நீரைப்போல் உருகி ஓடி, வெளி வெப்ப மிகுதியால் அவை ஆவியாக மாற்றமடைந்தன. பூமியின் உட்பகுதியிலிருந்த அடர்த்தி குறைந்த சிலிக்கா (Silica-மணல்) போன்ற பொருட்கள் பூமியின் மேற்பரப்பிற்கு வந்தன. இப்படியே, பூமியின் நிலைப்பாட்டில் தீப்பிழம்பாகவே பல கோடி ஆண்டுகள் கழிந்தன.[78]

## 3. நீர் - தீயை அடுத்துத் தோன்றியது

வெப்பத்தால் உலோகப் பொருட்களில் சிறைப்பட்டிருந்த நீர், நீராவியாகவும் ஆக்ஸிஜன், ஹைட்ரஜன் என்னும் மூலங்களாகவும் வெளிப்பட்டது. (ஹைட்ரஜனும் ஆக்ஸிஜனும் ஓரளவுடன் சேர்ந்தால் அதுதான் தண்ணீர். $H_2 + O = H_2O$) நீராவி தூசுப்பொருட்களுடன் கலந்து மேகத்தை உருவாக்கியது. பூமியைச் சுற்றித் திரண்டிருந்த ஆவி குளிர்ந்து மழையாகக் கொட்டியது. தொடர்ந்து ஓரிரு நூறு ஆண்டுகள் அல்ல; **இருபது கோடி ஆண்டுகள் அடாத மழை!** அனலாகத் தகித்த பூமியின் வெப்பத்தால் முதலில் சில ஆயிரம் ஆண்டுகள் பெய்த மழைநீர் முழுவதும் ஆவியாகிக் காற்றில் கரைந்தது. பின்னர் பெய்த மழையால் ஆறு, ஏரி, கடல் எனத் தேங்கியதால், பூமி குளிர்ந்தது! பூமியின் நிலைப்பாட்டில் நீராகவே பல கோடி ஆண்டுகள் கழிந்தன என்பர்.[79]

## 4. வளி - நீரை அடுத்துத் தோன்றியது

வாயு மண்டலம் இச்சமயத்தில்தான் உருவாகத் தொடங்கியது. உலகம் தோன்றிய பொழுதே ஆக்ஸிஜன், கார்பன்-டை-ஆக்ஸைடு, ஹைட்ரஜன், நைட்ரஜன் முதலான வாயுக்கள் மிகக் குறைந்த அளவில் இருந்தாலும் போகப் போக அடைமழையால் அது பெரிய அளவில் உருவானது. நிலத்தில் கால்சியம் கார்பைடு, இரும்பு கார்பைடு போன்ற கரிச் சேர்க்கையுடைய பாறைகளோடு மழைநீர் சேரச் சேர, 'அசிட்டிலின்' என்ற ஹைட்ரோ கார்பன் வாயு உண்டானது. இதுதான் பின்னர் ஒருகாலத்தில் உயிரினங்கள் உருவாவதற்கு அடிப்படையான மூலப்பொருளானது. பல கோடி

ஆண்டுகள் படிப்படியாக இப்படித் தோன்றிய ஹைட்ரோ கார்பன்கள் வாயுமண்டலத்தைக் கொஞ்சங் கொஞ்சமாக ஆட்கொண்டன. காலப்போக்கில் போதுமான அளவு இச்சேர்க்கைப் பொருட்கள் வானத்தில் சேர்ந்தன என்பர். [80]

## 5. விசும்பு - இறுதியாக அறியப்பட்ட ஐந்தாம் பூதம்

படிப்படியாகத் தோன்றிய ஹைட்ரோ கார்பன் வாயு, வானத்தை நிரப்பத் தொடங்கியது. வானத்தில் ஏற்பட்ட மின்னலால் உருவான வெப்பமும் காற்றுமண்டலத்தில் ஏற்பட்ட இறுக்கமும் விசும்பில் சேர்ந்திருந்த ஹைட்ரோ கார்பன்களை இரசாயன மாற்றத்திற்கு உட்படுத்தி, **உயிர்கள் தோன்றுவதற்கு உரிய அடிப்படைப் பொருளான 'அமினோ ஆசிட்'டை விசும்பில் தோற்றுவித்தன!** மழைநீரோடு கலந்து நிலத்தை அடைந்த இந்த மூலப்பொருள்தான் ஆரம்பத்தில் ஒரு திசு (செல்) கொண்ட உயிரைத் தோற்றுவித்துப் படிப்படியாக உயிர்கள் ஒன்றன்பின் ஒன்றாக வளர்ச்சியடைந்தன என்பர். [81]

விசும்பில் 'அமினோ ஆசிட்' தோன்றும் வரை, உலகில் எந்த உயிரினமும் தோன்றவில்லை. எரிமலை வெடித்தல், நிலநடுக்கம், நிலமடிப்பு, நிலமுறிவு, கடல்கோள் என்று இயற்கையின் திருவிளையாடல்கள் நிகழ்ந்துவந்த நெடுங்காலமாகவே பூமியில் புல், பூண்டு, ஈ, எறும்பு என்று எந்த உயிர்களும் தோன்றவில்லை. இன்றிலிருந்து 210 கோடி ஆண்டுகளுக்குமுன் நிலைமை இதுதான்!

460 கோடி ஆண்டுகட்குமுன் உலகம் தோன்றிய காலம் முதலாக, 210 கோடி ஆண்டுகளுக்கு முன்னர் உயிரினம் தோன்றிய காலம் வரையிலும்,

> நிலம் > தீ > நீர் > வளி > விசும்பு

என்ற வரிசையில் வளர்ந்துவந்த அறிவியல் உண்மையைத்தான்,

> "நிலம்தீ நீர்வளி விசும்போடு ஐந்துங்
> கலந்த மயக்கம் உலகம் ஆதலின்" (தொல். மரபு.90)

என்ற தொல்காப்பிய நூற்பா நுண்ணிதின் உணர்த்துகின்ற திறன் எண்ணி எண்ணி வியக்கத்தக்கதாக உள்ளது!

தொல்காப்பியத்திற்கு எளிய உரையெழுதிய தே. ஆண்டியப்பன்,

> மரபியலில் இளமைப்பெயர், ஆண்மைப் பெயர், பெண்மைப் பெயர், **உலகத் தோற்றம், உயிரின் பரிணாம வளர்ச்சி**, மனிதன் உருவாக்கிய சமூக அமைப்பு, நூலாக்க மரபு என்பவை இடம்பெறும் [82]

என்று கூறுவர். அது உண்மையான கருத்தாகும்.

உலகத்தின் தோற்றமும் ஐம்பூதங்களின் முறையான வரிசை நிரலும் தொல்காப்பியருக்கு எப்படித் தெரிந்தன?... அவரும் அவருக்கு முந்திய தமிழரும் உலகத் தோற்றம் பற்றிய அறிவினைக் கர்ணபரம்பரையாகப் பெரியோர் மாட்டுக் கேட்டும் ஒருவருக்கொருவர் அதுகுறித்து மொழியே இன்றிப் பேசியும் மனத்துள்

இறுத்தியும் வந்த முறைமையால் பெற்றனர் என்று கருதலாம். இது மிகவும் வியப்பான உண்மை!

## மரபியல் நூற்பா - பரிணாமம் பற்றியதா?

"ஒன்றறி வதுவே உற்றறி வதுவே
இரண்டு அறிவதுவே அதனொடு நாவே
மூன்று அறிவதுவே அவற்றொடு மூக்கே
நான்கு அறிவதுவே அவற்றொடு கண்ணே
ஐந்து அறிவதுவே அவற்றொடு செவியே
ஆறு அறிவதுவே அவற்றொடு மனனே
நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத் தினரே" (தொல். மரபு.27)

உயிரின வகையும் வளர்ச்சியும் பற்றித் தொல்காப்பியர் தம் காலத்தில் 'நேரிதின் உணர்ந்தோர்' நெறிப்படுத்திய முறையினை இந்நூற்பாவில் பதிவுசெய்துள்ளார். இதில் ஓரறிவு உயிர் முதலாக ஆறறிவு உயிரான மனிதன் வரையிலும் தொல்காப்பியர் வரிசைப்படுத்திக் கூறுவது உயிர்களின் பரிணாம வளர்ச்சி பற்றியதுதானா?... இது கவனமுடன் ஆராயத்தக்கது.

கணிதத்தில் ஒன்று-இரண்டு-மூன்று... என்ற வரிசையில் வருவதே முறை. அந்த அறிவியல் அடிப்படையில் பார்த்தால், உயிர்களின் தோற்ற வரலாற்றிலும் ஓர் அறிவு உயிர் தோன்றியதற்குப் பின்னரே ஈரறிவு உயிர் தோன்றியிருக்க வேண்டும்; அதன்பின் ஒரு காலத்திலேயே மூன்றறிவு உயிர் தோன்றியிருக்க வேண்டும்; இவ்வாறே நான்கறிவு, ஐந்தறிவு என்றவற்றின் பின்னரே 'மனம்' என்ற ஆறாவது அறிவுடைய மனிதன் தோன்றினான் என்று கணக்கிட்டார் தொல்காப்பியர்.

தொல்காப்பியச் சிறப்புப் பாயிரம் கூறுவதைப்போல, வழக்கும் செய்யுளும் ஆயிரு முதலின் அடிப்படையில், முந்துநூல் கண்டு முறைப்படி எண்ணி இலக்கணம் சொன்னவர் தொல்காப்பியர். வழக்கில் குழந்தை பிறந்து படிப்படியாக அறிவுநிலை பெறும் இயல்பு எத்தகையது?... முதலில் தாயின் மெய்தொடு உணர்ச்சி; அடுத்து நாவால் பாலருந்தும் ருசி அறிவு; பிறகு மூக்கால் உணரும் நுகர்ச்சி; அதன்பின், பெற்றவள் முகம் பார்த்தல்; பிறகு அவள் குரல் கேட்டல்; எல்லாவற்றுக்கும் பிறகே நல்லது கெட்டது அறியும் மனம் என்ற பகுத்தறிவு! மெய், வாய், மூக்கு, கண், செவி, மனம் என்ற வரிசையிலேயே உலக உயிர்களின் தோற்றமும் வளர்ச்சியடைந்திருக்க வேண்டும் என ஊகித்தனர் ஆன்றோர். இந்த அடிப்படையிலேயே ஆறறிவு உயிர்களை வரிசைப்படுத்தினர். உரையாசிரியரைப் போல அவற்றிற்கு ஒன்றிரண்டு உதாரணங்களையும் தந்து அடுத்தடுத்த நூற்பாக்களை யாத்தார் தொல்காப்பியர்.

"புல்லும் மரனும் ஓர்அறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே" (தொல். மரபு.28)

(புல்லும் மரமும் ஓரறிவு உயிர்களுக்கு உதாரணம்)

"நந்தும் முரளும் ஈரறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே" (தொல். மரபு.29)

(நத்தையும் சிப்பியும் ஈரறிவு உயிர்களுக்கு உதாரணம்)

*"சிதலும் எறும்பும் மூவறி வினவே*
*பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே" (தொல். மரபு.30)*

*(கறையானும் எறும்பும் மூவறிவு உயிர்களுக்கு உதாரணம்)*

*"வண்டும் தும்பியும் நான்கறி வினவே*
*பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே" (தொல். மரபு.31)*

*(வண்டும் சுரும்பும் நாலறிவு உயிர்களுக்கு உதாரணம்)*

*"மாவும் மாக்களும் ஐயறி வினவே*
*பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே" (தொல். மரபு.32)*

*(விலங்குகளும் அறிவிலிகளும் ஐந்தறிவு உயிர்களுக்கு உதாரணம்)*

*"மக்கள் தாமே ஆறறி வினவே*
*பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே" (தொல். மரபு.33)*

*(மனிதர்களே ஆறறிவு உயிர்க்கு உதாரணம். வேறு பிறரும் இருக்கலாம்.)*

*கிளவியாக்கம் 58ஆவது நூற்பாவில், பால்வரை தெய்வம் (ஊழ்), பூதம் போன்றனவும் உயர்திணை மேன என்று கூறியதை மனங்கொண்டே ஆறறிவினவிற்குப் பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே என்றார்.*

*தொல்காப்பியர் அறிவுத்தர அடிப்படையில் உயிரினங்களைப் பாகுபாடு செய்துவரும் வரிசையில் ஓரறிவு உயிர் என்பதற்கு உதாரணமாகப் புல், மரம் முதலிய தாவரங்களைக் கூறுவது சிந்திக்கத்தக்கது. கடந்த நூறு ஆண்டுகட்குமுன் வரை தாவரங்களுக்கு உயிர் இல்லை என்ற கருத்தே நிலவியது. 1848இல் ஜெர்மன் விஞ்ஞானி கஸ்டவ் தியோடர் ஃபெக்னர் (Dr.Gustav Theodor Fechner) என்பவர் தாவரங்களுக்கும் உயிர் உண்டு என்று அறிவித்த முதல்வர் என்பர். அவரைத் தொடர்ந்து நம் இந்திய விஞ்ஞானி சர் ஜெகதிஷ் சந்திர போஸ் (Sir Jagadish Chandra Bose) என்பவர் 1900இல் அறிவியல் சான்றுகளால் தாவரங்களுக்கும் உயிர் உண்டு என நிறுவிய வரலாற்றை இங்கு நினைவுகூர்தல் வேண்டும். சுமார் மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரேயே நம் தமிழர் புல், மரம் முதலான தாவரங்களுக்கும் உயிர் உண்டு என்ற அறிவியலை அறிந்திருந்த உண்மையை இந்நூற்பாவால் உணர்ந்து வியக்க முடிகிறது. உயிர்களின் வரிசையில் கடைசியாகத் தோன்றியவனே மனிதன் என்ற உண்மையும் இந்நூற்பாவில் பதியப்பட்டிருப்பதையும் கவனிக்க வேண்டும். நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத்தினரே என்றதால், தொல்காப்பியர் காலத்திற்கும் முன்னரேயே இவ்அறிவியல் உண்மைகள் தமிழகத்தில் நிலைத்திருந்தன என்பதை எண்ணி எண்ணி மகிழலாம்.*

*மேற்சுட்டிய நூற்பாக்கள் பரிணாமக் கொள்கையோடு உள்ளவாறே ஒத்துப்போகின்றன என்று கூறமுடியாது. எனினும், மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரேயே உலக உயிர்களின் தோற்றம் குறித்த சிந்தனை முனைப்பு இருந்த உண்மையை நிறுவும் சான்றுகளாக இந்நூற்பாக்கள் உள்ளன என்பதை யாரும் மறுக்க முடியாது.*

***பிற்கால டார்வின் முதலான விஞ்ஞானிகளின் முனைப்பில் கடுகளவும் குறைந்தது அல்ல நம் முன்னோர்களின் இந்த அறிவியல் முயற்சி!***

# 3. உயிர்களின் தோற்றம்

உயிர்களின் தோற்றம் மற்றும் பரிணாமம் பற்றிய ஆராய்ச்சிகளை விரிவாக மேற்கொண்டவர் சார்லஸ் டார்வின். இவர் இங்கிலாந்து நாட்டைச் சார்ந்தவர். 1831இல் கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்தில் பட்டம் பெற்ற டார்வின், உயிரினங்களின் தோற்றமும் மாற்றமும் பற்றிய ஆய்வில் ஆர்வம் கொண்டார். **பீகில்** என்ற கப்பலில் பல ஆண்டுகளாகப் பயணம் செய்து, பல்லாயிரக்கணக்கான உயிரினங்களைச் சேகரித்து ஆராய்ச்சியை மேற்கொண்டார். பல தீவுகளில் வாழ்ந்த மனிதர் இயல்புகளை ஆராய்ந்தார். மனிதன் தோன்றிய வரலாற்றை அறிவியல் அடிப்படையில் நிறுவும் வெறியோடு தொடர்ந்து ஆய்வில் இறங்கினார். உயிரினங்களின் தோற்றம் பற்றி இவருக்கு முன்னரே பஃபோன் (Buffon), லாமார்க் (Lamark), கதே (Kathe), ஜியாவ்ரே செயின்ட் ஹிலாரி (Geoffroy Saint Hilaire), டாக்டர் டபுள்யூ.சி. வெல்ஸ் (Dr. W.C.Wells) முதலிய பல விஞ்ஞானிகள் ஆய்வுசெய்துள்ளனர். என்றாலும், அறிவியல் ஆதாரங்களோடு விளக்கம் அளித்த பெருமை டார்வினையே சாரும். டார்வின், தாம் கண்டறிந்த உண்மைகளை 'உயிரினங்களின் தோற்றுவாய்' (Origin of Species) என்ற பெயரில் ஒரு நூலாக வெளியிட்டார். அதன் தமிழாக்கச் சுருக்கமும் தமிழில் நூலாக வெளிவந்துள்ளது.[83]








அதன் முக்கியக் கருத்துகள் பின்வருமாறு:

இயற்கைக்குத் தேர்வுமுறைச் சக்தி உண்டு. கெட்டவற்றை அழித்து நல்லவற்றைப் பாதுகாக்கும் பணியை இயற்கை அமைதியாக நடத்தி வருகிறது. உலகில் முதலில் மூச்சுவிட்ட ஏதோ ஓர் உயிரின் சந்ததியாகத்தான் எல்லா உயிர்களும் ஒன்றன்பின் ஒன்றாகத் தோன்றியிருக்க வேண்டும். வாழ்க்கையின் சிக்கல்களுக்கு மூலகாரணமாக இருப்பவை இயற்கையின் விதிகளே. வாழ்வாதாரம், போராட்டம், மரணம் ஆகியவற்றில் இருந்துதான் உயர்ந்த உயிரினங்கள் பிறந்தன. உயர்ந்த மனித சிருஷ்டியும் மலர்ந்தது! உலக உயிரினங்களில் தகுதியானது வாழும். தகுதியற்றது அழியும். தகுதியானது பலவீனமானதாக இருந்தாலும் அது வளர்ந்தே தீரும். அதை அழிக்க முடியாது. தகுதியற்றது பலமாக இருந்தாலும் அது அழிவது உறுதி!... தவளை எலியாக, ஔவாலாகப் பரிணமித்தது. அதிலிருந்து தேவாங்கு - அதிலிருந்து குரங்கு - பிறகு மனிதக் குரங்கு - பிறகு மனிதன் பரிணமித்தான்!

கடவுள் மண்ணைப் பிசைந்து மனிதனைப் படைத்தார் என்ற மேலைச் சமயக் கருத்தின் அடித்தளத்தையே அசைத்தது டார்வினின் கருத்து. 1860ஆம் ஆண்டில் ஆக்ஸ்பர்டு பிரிட்டிஷ் சங்கக் கூட்டத்தில் **பிஷப் வில்பர் லோர்ஸ்** கடுமையாக டார்வினைத் தாக்கிப் பேசினார். மெய்ஞ்ஞானத்திற்கும் விஞ்ஞானத்திற்கும் இடையே இப்படி மோதல்கள் இருந்து கொண்டுதான் இருக்கும்.

## உயிர்களின் தோற்றம் பற்றிய வரலாறு

உலகம் தோன்றி இன்று வரை 460 ஆண்டுகள் ஆயின. முதல் 250 கோடி ஆண்டுகள் வரை உலகில் எந்த உயிரினமும் தோன்றவில்லை. அது உயிர்களற்ற உலகமாகவே இருந்தது. நெருப்புக் கோளமாகத் தகித்துக் கொண்டிருந்த உலகத்தைப் பின்னர், பல கோடி ஆண்டுகளாகப் பெய்த அடைமழை குளிர வைத்தது. அதன் பிறகுதான் உலகில் உயிரினங்கள் தோன்றும் தகுதியை இந்த உலகம் அடைந்தது. உலகம் தோன்றி இன்று வரையிலுமுள்ள நெடுங்காலத்தை நிலவியலார் நாற்பெருங் காலப் பிரிவாகப் பகுத்துக் கூறுவர்.[84]

| | பெருங்காலப் பிரிவு | கோடி ஆண்டுகளுக்கு முன் | ஆண்டுகள் |
|---|---|---|---|
| 1. | அசோயிக் காலம் (Azoic Era) | 460 கோடி - 60 கோடி | 400 கோடி |
| 2. | பலியோசோயிக் காலம் (Paleozoic Era) | 60 கோடி - 23 கோடி | 37 கோடி |
| 3. | மீசோசோயிக் காலம் (Mesozoic Era) | 23 கோடி - 6.3 கோடி | 16.7 கோடி |
| 4. | சேனோசோயிக் காலம் (Cenozoic Era) | 6.3 கோடி- இன்றுவரை | 6.3 கோடி |

### 1. அசோயிக் காலம் (Azoic Era)

உலகம் தோன்றிய காலம் முதலாக உள்ள முதல் 400 கோடி ஆண்டுக் காலப் பகுதியை அசோயிக் காலம் என்று கூறுவர். நான்கு காலப் பிரிவுகளில் மிக மிக நீண்ட காலம் கொண்ட பெரும் பிரிவு இதுதான். இது இரண்டு பெருங்காலப் பகுதியாகப் பகுக்கப்படும்.

1. ஆர்க்கியன் (Archaean) காலம் - இன்றிலிருந்து 460 கோடி ஆண்டுகளுக்கு முன் தொடங்கி, 210 கோடி ஆண்டுகளுக்கு முன் வரையிலும் உள்ள மொத்தம் 250 கோடி ஆண்டுகள் ஆர்க்கியன் காலம் என்று கூறப்படும்.

2. பிரிகேம்ப்ரியன் (Precambrian) காலம் - இன்றிலிருந்து 210 கோடி ஆண்டுகளுக்கு முன் தொடங்கி, 60 கோடி ஆண்டுகளுக்கு முன் வரையிலுமுள்ள மொத்தம் 150 கோடி ஆண்டுகள் பிரிகேம்ப்ரியன் காலம் என்று அழைக்கப்படும்.

ஆர்க்கியன் காலம் மிக நீண்ட 250 கோடி ஆண்டுக்காலம் என்றாலும், இத்தனை நெடிய ஆண்டுப் பகுதியில் புல், பூண்டு என்று ஓர் உயிரும் உலகில் தோன்றவில்லை. காரணம், இதன் பாதிக் காலம் நெருப்பாகக் கொதித்துக் கொண்டிருந்ததும் மீதிக் காலம் பல கோடி ஆண்டுகளாக அடைமழை பெய்து கொண்டிருந்ததும்தான். இதன் கடைசிக் காலப் பகுதியில் பூமி ஒருவாறு குளிர்ச்சியடைந்து வாயுமண்டலம் தோன்றியது. பிராணவாயு, கரியமில வாயு, ஹைட்ரஜன், நைட்ரஜன் முதலிய வாயு மூலங்கள் நீரில் கரைந்து நிலத்தையும் கடலையும் அடைந்தன. மீத்தேன் (methane) என்ற ஹைட்ரோ-கார்பன் வாயு, காற்று மண்டலத்தில் தோன்றியது. காஸ்மிக் கதிர்களாலும் மின்னலின் மிகு வெப்பத்தாலும் மீத்தேன் தாக்கப்பட்டபோது, உயிர்கள் தோன்றுவதற்கு ஆதாரமான அமினோ ஆஸிட் (amino acid) எனப்படும் ஆர்கானிக் அமிலம் உருவானது. இது பூமியில் பலவகையான இரசாயன மாற்றங்களை உருவாக்கியது. ஆனாலும் ஓர் உயிரின் சுவடுகூட இக்காலப் பகுதியில் தோன்றவில்லை. இப்படியே, மலட்டு உலகமாக 250 கோடி ஆண்டுகள் உருண்டோடின.

அடுத்து வந்த பிரிகேம்ப்ரியன் காலமான 150 கோடி ஆண்டுக் காலத்தில், உயிரின் தோற்றத்திற்கான தயார்நிலை மாற்றம் உருவானது. தண்ணீரிலும் தரையிலும் உயிரினம் தோன்றுவதற்கு உரிய தகுதியை இக்காலப் பகுதி உருவாக்கித் தந்தது. குறிப்பாகக் கடல் நீரை உயிரின் கருவறையாக மாற்றிச் சமைத்த காலப் பகுதி இது என்று கூறலாம். கடலில் ஒரு செல் கொண்ட 'ஆல்கே' என்ற தாவர இனம் இக்காலப் பகுதியில் முதலில் தோன்றியது. உலகின் முதல் உயிர் என்ற பெருமை 'ஆல்கே' என்ற பச்சைப் பாசி வகைத் தாவரத்திற்கே கிடைத்தது!



algae

"புல்லும் மரனும் ஓர்அறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே" (தொல். மரபு.28)

என்று தொல்காப்பியர் தாவர இனமே முதலில் பிறந்ததாகக் கூறுவது இங்கு ஒப்புநோக்கத்தக்கது.

உயிர் என்பது என்ன?... உயிர் என்பதற்கு ஒரு வரையறை உண்டு. **சுவாசித்தல், உண்ணுதல், கழித்தல், இனப்பெருக்கம் செய்தல் ஆகிய நான்கு செயல்களையும் செய்யவல்லது எதுவோ அதுதான் உயிர்!** ஒரே இடத்தில் நிலையாக நிற்பது தாவர வகை உயிர்; இடம்விட்டு இடம் நகர்ந்தால் (animates), அது விலங்கின வகை உயிர் (animal) என்று கூறப்படும். இந்த அடிப்படையில், ஆல்கே என்ற தாவரவகை உயிரான பச்சைப்பாசி சுவாசித்தது; உணவை உட்கொண்டது; மலம் கழித்தது; தன் இனத்தைப் பெருக்கிப் புதிய பாசிகளை உருவாக்கியது! தண்ணீர்ப் போக்கில் இது நகருமே தவிரத் தன் முயற்சியால் இதற்கு நகரத் தெரியாது. இதனால், இது தாவர வகை.

சில ஆண்டுகள் கழிந்தன. இடம்விட்டு இடம் நகரும் விலங்கின வகையில் முதல் உயிராக - ஒரு செல் விலங்கினமாக 'அமீபா' தோன்றியது.






Amoeba

அதனை அடுத்துப் பாக்டீரியா என்ற விலங்கினம் உருவானது. அவற்றைத் தொடர்ந்து கடல்புழுக்கள் போன்ற உயிர்ப் பிராணிகளும் தோன்றின.



Bacteria



Sea worm

இது நடந்தது பிரிகேம்ப்ரியன் காலத்தின் கடைக்கோடியில் ஆகும். அப்போதெல்லாம் கடலின் வெப்பம் முழுதுமாகத் தணியவில்லை; வெப்பத்துடன் சூடுபறக்கவே இருந்தது என்பதை மனங்கொள்ள வேண்டும். அந்தச் சூட்டிலும் அமீபா முதலிய ஆரம்பநிலை ஒரு செல் உயிரிகள் தோன்றின. அது நடந்து இன்று வரை 60 கோடி ஆண்டுகள் ஆகின்றன!

## 2. பலியோசோயிக் காலம் (Paleozoic Era)

உலகம் தோன்றியதிலிருந்து 400 கோடி ஆண்டுகள் கழிந்தபின் இன்றிலிருந்து 60 கோடி ஆண்டுகளுக்கு முன் தொடங்கி, 23 கோடி ஆண்டுகளுக்கு முன் வரையிலும் இடைப்பட்ட 37 கோடி ஆண்டுக் காலம் பலியோசோயிக் காலம் எனப்பட்டது. இது 1.கேம்ப்ரியன், 2.ஆர்டோவிஷியன், 3.சைலூரியன் 4.டிவோனியன், 5.கார்பானிபரஸ், 6.பெர்மியன் என்னும் ஆறு உட்பிரிவுகளைக் கொண்டது.

பலியோசோயிக் காலத்தின் தொடக்கத்தில் - கேம்ப்ரியன் காலப் பகுதியில், மலைமுகடுகளில் பனிக்கட்டிகளும் பனிப்பாறைகளும் தோன்றின. பனிப் பாறைகள் உருகின. நில அரிப்பால் வண்டல்கள் ஆறுகளின் வழியே கடலை நிரப்பின. கடல்மட்டம் உயர்ந்தது. அதுவரை, சுடுநீராகத் தகித்துக் கொண்டிருந்த கடல்நீர் பனிநீர்ப் பெருக்கத்தால் சற்றே குளிர்ந்து வெதுவெதுப்பானது. அந்த மிதமான சூடு, கடலில் உயிர்கள் செழித்து வளர உறுதுணையானது. 'டிரைலோபைட்' (Trilobite) எனப்படும் உயிரினம் முதலில் தோன்றியது. இவ்வுயிரினம் தலை, உடல், வால் என்ற முக்கிய உறுப்புக்களைக் கொண்டது. இவற்றின் வழியில் வந்த பூச்சி இனங்களே இன்றைய தேளும் சிலந்தியுமாகப் பரிணாமம் பெற்றன.



Trilobites

இவற்றைத் தொடர்ந்து, 'பிரெக்யோப்போட்' (Brachiopods) என்ற புதிய உயிரினம் தோன்றியது. இவை எல்லாமே கிளிஞ்சல், சிப்பி, நத்தை வகையைச் சார்ந்த உயிரினங்கள் என்பர்.[85]



Brachiopods in early ambrian age







Shell & Oyster

"நந்தும் முரளும் ஈரறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே" (தொல். மரபு.29)

என்று தொல்காப்பியர் நத்தை, சிப்பி வகையினவான கடல்வாழ் உயிரினங்களைக் கூறியது இன்றைய அறிவியல் ஆய்வின் முடிபுகளோடு ஒத்துப்போகிறது. இவற்றை - (புல் முதலிய) முதலில் தோன்றிய தாவர வகை உயிரிலிருந்து இரண்டாம் நிலையில் பிறந்த இரண்டறிவுடைய உயிர்கள் என்று கூறியதும் இங்கு ஒப்புநோக்கத்தக்கது.

கிரிட்டேஷியஸ் காலத்தின் இறுதியில் 'பாக்குலைட்ஸ்' (Baculites) என்ற உயிரினம் தோன்றியது. இக்காலத்துச் சிறுவர்கள் பள்ளிக்கூடச் சிலேட்டுப் பலகையில் இதைச் சிலேட்டுக்குச்சி போல வைத்து எழுதிப் பார்ப்பார்கள். அதனால் இதனைக் 'கடற்குச்சி' என்று அழைப்பார்கள். தலையினைக் காலாகக் கொண்டு ஊர்ந்துசெல்லும் 'காஸ்ட்ரோபோட்' (Gastropod) என்ற நத்தைவழி வந்த உயிரினங்கள் பெருகின. முரட்டுச் செம்மறி ஆட்டுக் கொம்பு போல முறுக்கப்பட்ட 'அமொனைட்' (Ammonite) என்ற கிளிஞ்சல் வகை உயிரினமும் இக்காலத்தில் தோன்றியது.


Baculites


Gastropod


Ammonite

அக்காலத்தில் தோன்றிய கிளிஞ்சல், சிப்பி, நத்தை போன்ற உயிரினங்கள் அனைத்தும் முதுகெலும்பில்லாத (invertebrate) மெல்லிய உயிரினங்கள் ஆகும். சைலூரியன் காலப்பகுதியில் முதுகெலும்பு இல்லாத மீனினம் போன்ற ஒருவகை உயிரினம் தோன்றியது.


Fish which did not have vertebrae


ancient fish fossil

கடலில் பலவகை நீர் சேரச்சேரக் கடலின் அழுத்தம் அதிகரித்தது. அதைச் சமாளிக்கும் முயற்சியில் இவ்வகை உயிரினங்களின் உடலில் நடுவே நூல் போன்ற மெல்லிய எலும்பு உருவாகத் தொடங்கியது. அதுவே முதுகெலும்பாக உருவெடுத்தது. முதலில் மீன் இனங்கள் தோன்றிப் பல்கிப் பெருகின. இதன் பின்னரே முதுகெலும்புடைய (vertebrate) வலிய உயிரினங்கள் தோன்றின. இன்றைக்கு 40 கோடி ஆண்டுகளுக்கு

முன்னர்த்தான் முதுகெலும்புடைய முதல் உயிர் தோன்றியது. இதனை 'மீன்களின் காலம்' என்று கூறலாம்.

மீன் இனத்திலிருந்து கடற்கரைக்கு வந்தவை ஊர்வன என்ற உயிரினங்களாக மாறின. மீனினத்தின் ஒரு பிரிவு, தம் செதில்களைக் கால்களாகக் கொண்டு கடற்கரையில் நடக்க முயன்றன. முதுகெலும்பின் வளர்ச்சியாலும் கழுத்திலிருந்து கிளைத்த தலையின் அமைப்பாலும் ஊர்வன மீன்களிலிருந்து பெரிதும் வேறுபட்டுத் தோன்றின.

மீனுக்கும் ஊர்வனவுக்கும் இடையே, நீரிலும் நிலத்திலும் என்று இரண்டிலும் வாழும் ஒருவகை உயிரினம் தோன்றியது. அவற்றின் இன்றைய எச்சங்களே தவளை, முதலை முதலியன. இவ் இனங்களிலிருந்தே பல்லி, ஓணான் போன்ற ஊர்வனவும் அவற்றின் கிளை உயிர்களும் தோன்றின. இவற்றின் வழிவந்தவையே அடுத்துவந்த ஜூராசிக் காலத்தில் கோலோச்சிய இராட்சசப் பல்லிகளான **டைனோசார்!**

தாவர வகையிலும் சுட்டத்தக்க ஒரு வளர்ச்சியை இக்காலப் பகுதியில் காண்கிறோம். சுமார் 35 கோடி ஆண்டுகளுக்குமுன் பூக்காத தாவர வகைகள் தோன்றின. மூன்றடி உயரமுள்ள மரம் போன்ற தாவரங்கள் நிலப்பரப்பில் வளர்ந்தன. நாற்பதடி வரை வளரும் **ஜில்போ** இன மரங்களும் தோன்றின.

இக்காலப் பகுதியில் அமைந்திருந்த உலக அமைப்பும் சுட்டத்தக்கது. இப்போது இமயமலை இருக்கும் இடத்தில் அக்காலத்தில் **டெத்திஸ்** (Tethys Ocean) என்ற ஓர் அகன்ற ஆழமான கடல், அலையெழுப்பிக் கொண்டிருந்தது! இது இன்று நம்புதற்கு அரியதோர் உண்மை!

Tethys Ocean

பலியோசோயிக் காலத்தின் உலக வரைபடம் இதுவாகும்.

### 3. மீசோசோயிக் காலம் (Mesozoic Era)

உலகம் தோன்றிச் சுமார் 440 கோடி ஆண்டுகள் கழிந்தபின், இன்றைக்கு 23 கோடி ஆண்டுகளுக்கு முன் தொடங்கிச் சுமார் ஆறரைக் கோடி ஆண்டுகளுக்கு முன் வரையிலும் உள்ள காலப் பகுதியை மீசோசோயிக் காலம் என்பர். இது 1)ட்ரையாசிக், 2)ஜூராசிக், 3)கிரிட்டேஷியஸ் என்ற மூன்று உட்பிரிவுகளைக் கொண்ட 17 கோடிக் கால அளவினது ஆகும்.

## 1.) ட்ரையாசிக் காலம் (Triassic period)

ட்ரையாசிக் காலத்தில், இமய மலையை மூடியிருந்த டெத்திஸ் என்ற கடலின் மட்டம் தாழ்ந்து வற்றத் தொடங்கியது. இந்தக் காலத்தில் நன்னீர் ஏரிகளும் சதுப்புநிலச் சமவெளிகளும் பெருகின. கடற்கரைப் பகுதிகளில் கடல்கோள்கள் அவ்வப்போது நிகழ்ந்தன. மலர்களைக் கொண்ட பூக்கும் தாவர இனங்கள் பல்கிப் பெருகிய காலம் இது. விலங்கினங்களில் இராட்சசப் பல்லிகள் எனப்பட்ட டைனோசார்ஸ் இனம் தோன்றி வளர்ந்த காலமும் இதுவாகும். கடலில்தான் டைனோசார்ஸ் வகை முதலில் தோன்றியது. அந்த இனத்தில் 'பிளெசியோசர்' என்ற டைனோசார் குறிப்பிடத்தக்கது. அண்மையில் நாளிதழ் ஒன்றில் வெளியான ஒரு செய்தி இது:

> ஜான் ரக்கில்ஸ் (வயது 75) என்ற இங்கிலாந்து முதியவர் தம் தோட்டத்தில் கண்டெடுத்த ஒரு விநோதமான கல்லை எடுத்து அதனை அரிய வகைப் பொருளாகக் கருதிப் பாதுகாத்து வந்தார். ஒருகட்டத்தில் அதை அவர் தன் ஊரிலுள்ள அருங்காட்சியகத்தில் ஒப்படைத்தார். அக்கல்லை அவர்கள் பரிசோதித்தபோது அது கல்லன்று; ஒருவகை டைனோசார் எலும்பின் புதைபடிவம் (fossil) என்று கண்டறிந்தனர். 'பிளெசியோசர்' என்றழைக்கப்படும் அந்த டைனோசார் ஒரு கடல்வாழ் உயிரினமாகும்.
>
> 12.2 மீட்டர் நீளம் வரை வளரக்கூடிய அந்த உயிரினம், சுமார் 25 கோடி ஆண்டுகளுக்கு முற்பட்ட மீசோசோயிக் காலத்தில் வாழ்ந்திருக்கலாம். டிரையாசிக் காலம், டைனோசார்கள் ஆதிக்கம் செலுத்திய ஜுராசிக் காலத்திற்கு முந்திய காலம் என்பதால், பிளெசியோசரை ஒரு துவக்க கால டைனோசார் என்று கருதலாம்.
>
> உலகில் டைனோசார் அழிந்த காலமான கிரிட்டேசியஸ் யுகத்திலும் இந்த வகை டைனோசார் உயிர்வாழ்ந்துள்ளது என்று ஆய்வாளர்கள் கூறுகின்றனர். இதில் வியப்பு என்னவென்றால், இத்தனை கோடி ஆண்டுகள் கழிந்த பிறகும் ரக்கில்ஸ் கண்டெடுத்த படிவத்தில் அந்த உயிரியின் இரத்த நாளங்கள் அப்படியே பாதுகாக்கப்பட்டு இருந்தன என்பதுதான். இந்த வரலாற்று உண்மை மிக அரிதானது என்கின்றனர் ஆய்வாளர்கள்.[86]




*Plesiosaurus*

பிளெசியோசர் என்ற டைனோசார் சுமார் 25 அடி நீளம் வரை வளரும். இவ் வகையில் சிறிய வாய் கொண்டதும் அகன்ற பெரிய வாய் கொண்டதுமான இரண்டு வகைகள் உண்டு. இவை கடலில் திரிந்தாலும் கரைகளில் முட்டையிட்டுக் குஞ்சு பொரித்தன.

இதே காலப் பகுதியில் இட்ச்தையோசாரஸ் (Ichthyosaurus) என்ற ஒரு வகை உண்டு. இது இராட்ச மீனைப் போலக் காட்சியளிக்கும் ஒருவகை நீர்வாழ் டைனோசார் ஆகும். இது பத்தடி நீளம் வரை வளரக்கூடியது.





மீசோசோயிக் காலம் ஊர்வனவற்றின் பொற்காலம் என்று கூறுவார்கள். இதன் தொடக்கக் காலப் பகுதியில் அகன்ற பெரிய தலையையுடைய மீன் போன்ற ஸ்டீகோசெஃபாலியா (Stegocephalia) என்ற நீர்வாழ் உயிரினம் தவளையாக உருவெடுத்தது.



Stegocephalia

முதலையின் வழித்தோன்றல்களும் இக்காலத்தில் தான் உருவாயின. அக்கால நில வாழ்க்கைக்கு ஏற்ற சிறிய உடலமைப்பைக் கொண்ட தீக்கோடான்ட் (Thecodonts) என்ற புதிய வகை ஊர்வன உயிரினம் தோன்றியது. அதுவே நிலம்வாழ் டைனோசார் இனத்திற்கு முன்னோடியான உயிரினமாகும்.





Thecodonts

ட்ரையாசிக் காலப்பகுதியில், ஜுராசிக் கால டைனோசார்களை ஒப்பிடும்போது, சிறிய அளவினதான டைனோசார் இனம் தோன்றி வளரத் தொடங்கின. அவற்றுள் கோயெலாஃபிசிஸ் (Coelophysis) என்ற எட்டடி நீளமுள்ள - இறைச்சியை உணவாகக் கொண்ட - டைனோசார் வகை குறிப்பிட்டுச் சொல்லத்தக்கது. இவை பிற ஊர்வனவற்றை அடித்துத் தின்றதோடு தம் இனத்தையும் கொன்று தின்னும் பழக்கம் உடையவை.





Coelphysis

## 2.) ஜுராசிக் காலம் (Jurassic period)

டைனோசார் இனம் பலவகைகளாகப் பெருகி வளர்ந்த காலம் ஜுராசிக் காலப் பகுதியாகும். உருவத்தில் மிகப் பெரிதாக டைனோசார் இருந்தாலும், முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கும் பறவை மற்றும் ஊர்வன இனத்தைச் சார்ந்தவை ஆகும். டைனோசார்களை இறைச்சி உணவுப் பழக்கமுடையன, தாவர உணவுப் பழக்கமுடையன என்று இரு பெரும் வகையாகப் பிரிக்கலாம். இறைச்சி உணவுப் பழக்கம் கொண்ட டைனோசார்களில் குறிப்பிடத்தக்க ஒரு வகை 'டைரன்னோசாரஸ்' (Tyrannosaurus) என்பதாகும்.







Tyrannosaurus

டைனோசார்களில் முடிசூடா மன்னனாக வாழ்ந்தது இது. மிகமிகப் பெரிய உருவம் கொண்டது. தரையோடு தரையாக ஊர்ந்து செல்லும் நிலையில் இதன் நீளம் ஐம்பது அடி; நின்றால் இருபது அடி உயரம் கொண்டது. அதன் அருகில் ஒரு மனிதன் நின்றால், அதன் முழங்கால் மட்டத்தில் அவன் தெரிவான். டைரன்னோசாரஸ் பிற சிறிய வகை டைனோசார்களை அடித்து உணவாகக் கொள்ளும் பழக்கமுடையவை. வாயைத் திறந்தால் மூன்றடி வரை திறக்கும். ஒரு பெரிய ஆட்டை அப்படியே விழுங்க இதனால் முடியும்.





*Sauropod-Brontosaurus*

தாவர உணவுப் பழக்கமுடைய டைனோசார்களில் குறிப்பிட்டுச் சுட்டத்தக்கது, நீரிலும் நிலத்திலும் வாழக்கூடிய 'சாரோபாட்' (Sauropod) வகைகளாகும். இவை நீர்நிலைகளுக்கு அருகில் மணலில் முட்டையிட்டுக் குஞ்சு பொறிக்கும். இவற்றின் முட்டைகளை மேலே படத்தில் காணலாம்.

இந்த வகைகளுள் குறிப்பிடத்தக்க டைனோசார் 'ப்ரண்டோசாரஸ்' (Brontosaurus) என்ற வகையாகும். யானை போன்ற கனத்த உருவமும் நீண்ட கழுத்தும் சிறிய தலையும் கொண்டதாக இது இருக்கும். வாத்தின் பாதங்களைப் போன்ற ஜவ்வு படர்ந்த கனத்த பாதங்கள் இதற்கு உண்டு. மலைப் பாம்பு போன்ற நீண்ட வாலை இழுத்துக் கொண்டு காடுகளில் நகர்ந்து மரங்களின் கிளைகளில் மேய்ந்து திரியும் சாதுவான உயிரினம் இது. பெரும்பாலும் நீர்நிலைகளை வாழிடமாக இவை கொண்டிருக்கும். இதன் அதிகப்பட்ச எடை 35 டன். இதன் நீளம் 70 அடி.

டைனோசார்களின் கிளை இனமாகச் சில உண்டு. அவற்றுள் குறிப்பிட்டுச் சொல்லத்தக்கவை இரண்டு. ஸ்டீகோசாரஸ் (Stegosaurus) என்பது அவற்றில் ஒன்று. மற்றொன்று ட்ரைசெராடப்ஸ் (Triceratops) என்பதாகும்.





ஸ்டீகோசாரஸ் இன டைனோசார்களின் முதுகில் இரட்டை வரிசைகளில் அகலவடிவில் ஈட்டிக் கவசங்கள் உண்டு. சுமார் நான்கு அடி உயரத்தில் தகடு போன்ற தடித்த தோலால் ஆன ஈட்டிகளாக அவை இருந்தன. மாமிச உணவுக்காகத் தம்மைத் தாக்கிக் கொல்ல வரும் டைனோசார்களிடமிருந்து இந்தத் தோல் தகடுகள் பாதுகாப்பளித்தன. ஈட்டி முனைகளைக் கொண்ட தடித்த வாலும் இதற்கு ஒரு பாதுகாப்பு ஆயுதமாக அமைந்தது.






ட்ரைசெராடப்ஸ் என்ற இனத்தின் தலையில் காண்டா மிருகத்திற்கு இருப்பது போன்ற தடித்த கூர்மையான கொம்புகள் மூன்று இருந்தன. இதன் வாயின் மேல்தாடை, கிளியின் மூக்குப் போன்ற வடிவில் அமைந்திருந்தது. இதன் கழுத்தில் வேலி கட்டியதைப் போல, எலும்பாலான ஒரு பாதுகாப்பு வளையமும் அமைந்திருந்தது. பிற டைனோசார்களிடமிருந்து இந்தக் கொம்புகளும் கழுத்து வளையமும் பாதுகாப்பு அளித்தன.

### 3.) கிரிட்டேஷியஸ் காலம் (Cretaceous period)

கிரிட்டேஷியஸ் காலத்தில் பறக்கும் டைனோசார்கள் உருவாயின. இதுவரையிலும் உலகில் பறவை இனங்கள் தோன்றவில்லை. விண்ணில் பறக்கும் உயிர்கள் என்றால் இதுவரை சிறிய உருவம் கொண்ட வண்டுகளும் பூச்சிகளுமே இருந்துவந்தன. பருத்த உடலமைப்புக் கொண்ட உருவங்கள் பறந்தது இக்காலப் பகுதியில்தான். உலகின் முதல் பறவை எனக் கருதத்தக்கது பெரோடக்டைல் (Pterodactyl) என்ற டைனோசார் இனமாகும்.





*Pterodactyl (flying dinosaur)*

இந்த வகை டைனோசார்களில் பெரானோடன் (Pteranodon) என்ற பறக்கும் டைனோசார் மிக நீண்ட அலகினை உடையது. இதன் தலை கழுத்தையும் உடலையும் வாலையும் விட மிக நீளமாக இருக்கும். குட்டிபோட்டுப் பால் கொடுக்கும் விலங்குகளுக்கு இருப்பதைப் போல இதன் வாயில் வரிசையாகப் பற்கள் இருந்தன.





Pteranodon

மீசோசோயிக் காலத்து விலங்கினங்கள் பெரும்பாலும் குழிக்குள் முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கும் இனமாகவே இருந்தன. குட்டி போட்டுப் பால் கொடுக்கும் இனங்கள் மிக அரிதாகவே உயிர் வாழ்ந்தன, அவற்றுள் எலி வகைகளே மிகுதி. இவை மரங்களிலும் புதர்களிலும் வாழ்ந்தன. இவைகளின் பற்கள் கோரைப் பற்கள், அரைக்கும் பற்கள் என்று பலவகையில் வளர்ச்சியடைந்திருந்தன. பெரிய உருவமுடைய **பாலூட்டிகள் அப்போது பெருகவில்லை என்பது குறிப்பிடத்தக்க செய்தி**. இத்தகைய சிறிய பாலூட்டிகள் டைனோசார்களின் முட்டைகளைத் திருடித் தின்றும் வாழ்ந்தன. இதனால் டைனோசார் இனம் அழிந்தது என்றும் சில ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.

கிரிட்டேஷியஸ் காலத்தின் முடிவில், டைனோசார் வகைகள் அனைத்தும் இருந்த இடம் தெரியாமல் அழிந்து போயின. அதற்குக் காரணம் பலவாறாக ஊகிக்கப்படுகிறது. நீர்நிலைகளையே பெரிதும் சார்ந்த இவை, நீர் வறண்டு போனதால் அழிந்தன என்பர் சிலர். தாவர உணவுப் பழக்கமுடைய டைனோசார் இனங்கள் உண்ட தாவர வகைகள் அழிந்துபோக நேரிட்டதால் இவையும் அழிந்தன என்பர் சிலர். மாமிச உணவுப் பழக்கமுடையன ஒன்றோடொன்று சண்டையிட்டு அழிந்தன. ஆக்ஸிஜன் குறைந்ததால், வெப்பநிலை அதிகரித்ததால், எரிமலைகள் நெருப்பைக் கக்கியதால் என்று பல காரணங்கள் கூறப்படுகின்றன. விண்ணில் இருந்து விழுந்த ஒரு நட்சத்திரத்தால் நிலப்பரப்பே சி  தறிக் கடலில் இழுத்துச் செல்லப்பட்ட இயற்கை அழிவால் டைனோசார் இனமே அழிந்தது என்ற கருத்தும் உண்டு.

இன்றுள்ள தென்ஆப்பிரிக்கா, மடகாஸ்கர், இந்தியா, ஆஸ்திரேலியா, அண்டார்டிக், தென் அமெரிக்கா முதலிய பகுதிகள் பலியோசோயிக் காலத்தில் ஒரே கண்டமாக இணைந்திருந்தன. இணைந்த அப் பரப்பினைக் **கோண்டுவானா நிலம்** (Gondwana Land) என்பர். இதன் பின்வரும் ஜுராசிக் காலப் பகுதியின் தொடக்கத்தில், ஆஸ்திரேலியாவும் தென் அமெரிக்காவும் கோண்டுவானா நிலத்திலிருந்து மெதுவாகப் பிரிந்து சென்றன. ஆஸ்திரேலியாவின் பிரிவால், இன்றைய வங்காள விரிகுடா தோன்றியது என்பர்.[87]







Gondwana Land

கோண்டுவானா நிலம் (Gondwana Land) என்றழைக்கப்படும் பகுதியின் தெற்கே பண்டு இருந்ததுதான் **இலெமூரியா** என்ற கண்டம். அது ஒருகாலத்தில் பூமியில் விழுந்த விண்வீழ் மீனின் தாக்குலால் சிதைவுற்று இலெமூரியா கடல்வாய்ப்பட்டது. ஆஸ்திரேலியா ஒரு பொரித் துண்டமாகத் தனியே தள்ளப்பட்டது. அன்றிலிருந்து ஆஸ்திரேலியா ஒரு விந்தையான நாடானது. அங்குள்ள மரஞ்செடி கொடிகள், **கங்காரு** போன்ற விலங்கினங்கள், ஏமு முதலான பறவைகள் வேறு நாடுகள் எங்கும் காணப்பெறாதவை. அவற்றைப் பிற நாடுகளில் கொண்டு வளர்த்தாலும் அவை வளர்வதில்லை என்று பன்மொழிப் புலவர் கா.அப்பாத்துரை கூறியுள்ளார்.[88]

### 4. சேனோசோயிக் காலம் (Cenozoic Era)

இன்றைக்கு ஆறு கோடியே 30 இலட்சம் ஆண்டுகளுக்கு முன்னிருந்து இன்றுவரை உள்ள காலத்தைச் சேனோசோயிக் காலம் என்பர். மற்ற பெரும்பிரிவுகளோடு ஒப்பிடும்போது மிகக் குறைந்த ஆண்டுக் காலம் இதுதான். உலகம் தோன்றி 460 ஆண்டுகள் ஆன நிலையில், சுமார் ஆறு கோடி ஆண்டுகளை மட்டுமே கொண்ட இந்த மிகக் குறுகிய சேனோசோயிக் காலத்தில்தான் உலகம் வளர்ந்தது; உயிரினங்கள் பெருகின; மனித இனமும் தோன்றியது!

இன்று காணப்படும் வானுயர்ந்த மலைகள், பரந்த சமவெளிகள், வற்றாத ஜீவநதிகள், இருவேறுபட்ட தட்ப வெப்ப நிலை, எண்ணற்ற தாவரங்கள், உயிரினங்கள் என்று இன்றைக்கு உலகில் காணும் அத்தனை அதிசயங்களும் இந்த ஆறு கோடி ஆண்டுகளில் நடந்தவை ஆகும்.

சேனோசோயிக் காலம் குறுகிய காலமாயினும், இது, 1.பலயோசீன், 2.இயோசீன், 3.ஒலிகோசீன், 4.மையோசீன், 5.பிலியோசீன், 6.டெர்ஷியரி, 7.பிளைஸ்டோசீன், 8.ரீசெண்ட், 9.குவார்ட்டர்னலி என்னும் ஒன்பது உட்பிரிவுகளைக் கொண்டது.

சேனோசோயிக் காலத்தில் டெத்திஸ் கடல் வற்ற ஆரம்பித்தது. அதன் அடித்தளத்திலிருந்து மடிப்பு மலைகள் உருவெடுத்து மேலெழுந்தன. இமய மலை, ஆல்ப்ஸ் மலை, கார்பெத்தியன் மலை எனப் பெரிய மலைத் தொடர்கள் உருவாகி நிமிர்ந்து நின்றன.

பல நூறு மீட்டர் உயரம் வரை வளரும் மரங்கள் தோன்றின. இவற்றால் மிக உயரத்திற்குப் பறக்கும் பறவை இனங்கள் பெருகின. மலரும் தாவர வகைகளும் தோன்றி வளர்ச்சி பெற்றன. புற்கள் ஐயாயிரம் வகைகளுக்கு மேல் உருவாயின.

மேய்ச்சல் பழக்கமுடைய மான்கள், ஆநிரைகள் முதலியன பெருகின. இக்காலம் குட்டி போட்டுப் பால்கொடுக்கும் பாலூட்டி இனங்களின் பொற்காலமாக உருவானது. குட்டிகளுக்குப் பாலூட்டி வளர்க்கும் பாசமிகு தாய்மையால், இவ்விலங்குகளில் ஒருசார் இனங்களுக்கு மூளையின் வளர்ச்சி கூர்மையானது. மூளை வளர்ந்த பாலூட்டி இனத்தில் குரங்கு குறிப்பிடத்தக்க இனமானது. பாலூட்டி இனங்களில் பலவகையிலும் பரிணாமம் நடந்த காலம் இது.

குதிரையும் யானையும் சேனோசோயிக் காலத்தில் தோன்றி வளர்ந்த பாலூட்டிகளில் சுட்டத்தக்கவை. இவை தொடக்கத்தில் இருந்த உருவ அமைப்பு மிக வேறுபட்டதாகும். ஒரே அடி உயரமுள்ளதாகக் குதிரை தோன்றியது. அதற்கு 'இயோகிப்பஸ்' (Eohippus) என்று பெயரிட்டனர். ஓரடி உயரமுள்ள அதுதான் படிப்படியாக வளர்ச்சியடைந்து சில கோடி ஆண்டுகளில் இன்றுள்ள உயரத்தை எட்டியது.



Eohippus (ancestor of the horse)

குறுகிய காலத்தில் மிகப் பெரிய உருவ வளர்ச்சியடைந்த விலங்கிற்கு உதாரணம் யானை. நான்கு கோடி ஆண்டுகளுக்குமுன் தோன்றிய யானையின் உயரம் ஒரு பன்றியின் உயர அளவில் இரண்டடி உயரமே இருந்தது. அது 'மோயெரிதிரியம்' (Moeritherium) எனப்பட்டது.



Moeritherium

அப்போது அதற்குத் துதிக்கை கிடையாது; தந்தங்கள் இல்லை. பார்ப்பதற்குக் கருப்பு நாட்டுப் பன்றியைப் போலவே தோற்றமளித்தது. ஆனால், அவற்றின் பாதங்கள் பன்றிகளுக்கு உள்ளதைப் போல் இல்லாமல் சதைப்பிடிப்போடு தடித்து இருந்தன. அடுத்த இரண்டு கோடி ஆண்டுகளில் யானையின் வளர்ச்சியில் நிறைய மாற்றங்கள் விளைந்தன. வாயில் கோரைப் பற்கள் இரண்டு சிறிய தந்தங்களைப் போலத் தெரிந்தன. துதிக்கையும் இலேசாக வளர்ந்திருந்தது. அதனை 'டினோதிரியம்' (Dienotherium) என்றனர்.

டினோதிரியத்தின் உறுப்புகள் படிப்படியாக வளர்ந்தன. வாயிலிருந்த இரண்டு கோரைப் பற்கள் நீண்டு பெரிதாக வளர்ச்சியடைந்து தந்தங்கள் ஆயின; துதிக்கையும் நீளமாக வளர்ந்து தரையைத் தொட்டது.



Deinothirium



Matured Elephant

இப்படி வளர்ந்த யானைகள் இனத்தில் விநோதமான சில வகைகளும் தோன்றின. ட்ரிலோபோடன் (Trilophodon) என்ற வகை யானைக்கு மேல்தாடையில் இரண்டு தந்தங்கள், கீழ்த்தாடையில் இரண்டு தந்தங்கள் என நான்கு தந்தங்கள் இருந்தன. உறைபனிப் பகுதியில் திரிந்த மஸ்டோடன் (Mastodon) என்ற யானையின் உடம்பில் சடைமுடிகள் வளர்ந்து பார்க்கவே பயங்கரமாக இருந்தது.



Trilophodon



Mastodon

*உங்களில் இன்றைய யானையைப் பார்க்காதவர்களே இருக்க முடியாது. உங்களிடம் ஒரு கேள்வி. பெண்யானையின் பாலூட்டும் உறுப்பு பசுவுக்கு இருப்பதைப் போலப் பின்னங்காலுக்கு இடையில் இருக்கிறதா, அல்லது மனிதப் பெண்ணுக்கு இருப்பதைப் போல மார்பில் இருக்கிறதா? என்ன, இதுபற்றி நீங்கள் இதுவரை யோசித்ததே இல்லையா?...*





*யானைக்குப் பாலூட்டும் உறுப்பு , மனிதர்க்கு இருப்பதைப்போல மார்பில்தான் உண்டு! அப்படியானால், யானை மனித மூதாதையாக இருக்க வாய்ப்பு உண்டா?*

# 4. மனிதனின் மூதாதையர்




உலகில் உயிரினம் தோன்றிக் கோடானுகோடி ஆண்டுகளுக்குப் பின்னால் தோன்றிய பாலூட்டிகளில் அறிவுசார்ந்த ஒரு குறிப்பிட்ட உயிரினத்தின் படிப்படியான பரிணாம வளர்ச்சியாக மனிதக்குரங்கு உருவானது. அது 'குரங்குமனிதன்' ஆகி, அவன் வழிவந்தவனே மனிதன். 'மனிதக் குரங்கு' உருவாவதற்கும் முந்திய, மனித இன முன்னோடி உயிரிகள் என்று பல உண்டு

என்பது அறிவியல்வாதிகள் கருத்து. இது பொருள்முதல் வாதம்.

கருத்துமுதல் வாதத்திற்குச் சமய அறிஞர்கள் உருவாக்கிய கருத்துதான் அடிப்படை. கருத்து முதல் வாதிகளிடம் கேள்விகள் கேட்க அனுமதி இல்லை. பொருள்முதல் வாதத்திற்குக் கண்ணால் கண்டு காரண காரிய முறையில் நிறுவிய பொருள்தான் அடிப்படை. இதில் கேள்விகள் கேட்கலாம்; தர்க்கம் செய்யவும் அனுமதி உண்டு.

கடவுளால் நேரடியாகப் படைக்கப்பட்டவன்தான் மனிதனா? அல்லது ஆதியில் ஏதோ ஓர் உயிரியாக இருந்து... பல ஆயிரம், இலட்சம், கோடி ஆண்டுகளாக மாற்றம் பெற்று உருவானவனா மனிதன்? எது உண்மை?

*எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்*
*மெய்ப்பொருள் காண்பது அறிவு (குறள்.423)*

**'கேவலம் குரங்கிலிருந்து பிறந்தவர்களா நாம்?' என்ற இழிவில், அறிவியல் உண்மையை நம்மில் பலர் ஏற்றுக்கொள்ளத் தயங்கினர்.**

'பசுவுக்குப் பிறந்தவன் ஆபுத்திரன்' என்ற கருத்தில், ஆபுத்திரனைக் கேவலமாகப் பேசியவர்கள் வாழ்ந்த உலகம் இது. உண்மையில் அவன் பசுவுக்குப் பிறந்தவன் அல்லன். காசியில் வேதம் ஓதுவிக்கும் அந்தணப் புலவனின் மனைவி சாலி என்பவள் முறைதவறிக் கருவுற, அதையறிந்த அந்தணன் அவளைத் தெற்கே குமரியாடிப் பாவம் தொலைத்து வருமாறு ஏவுகிறான். தெற்கே பாண்டிய நாட்டிற்கு வந்த நிலையில் சாலி ஈன்ற தன் மகனை ஒரு தோட்டத்தில் விட்டுச் செல்கிறாள். கன்றினை இழந்த ஒரு பசு, அம் மகவைத் தன் குழவிபோல் பாவித்துப் பால் சுரந்து காக்க, அந்த வழியே வந்த (குழந்தைப் பேறு வாய்க்கப்பெறாத) பூதி என்ற அந்தணன் அந்தக் குழந்தையை எடுத்துப்போய் வளர்க்கிறான். சிலநாள் பசு அவனை மகன்போல் வளர்த்ததால் 'ஆபுத்திரன்' என்ற பெயரை அவன் பெற்றான். அந்தணர் குடியிருப்பில் வளர்ந்து வாலிபப் பருவம் அடைந்த ஆபுத்திரன் ஒருநாள், பலியிட வைத்திருந்த பசுவைக் காக்க நினைத்து, இரவோடு இரவாக அதைக் கடத்திச் செல்கிறான். பசுவைக் காணாமல் தேடிவந்த அந்தணர்கள் ஆபுத்திரனைக் கையும் களவுமாகப் பிடித்து அவனைக் கண்டிக்கின்றனர். "அருமறை அறியாத ஆமகன் ஆதலால் இப்படிச் செய்தான்!" என்று அந்தணர்கள் பழிக்கின்றனர். அதற்கு அவன், அருமறை புகழும் முனிவர்கள் பலர் மிருகங்களுக்கு மகனாகப் பிறந்தவர்கள்தானே என்ற பட்டியலை அடுக்குகிறான்.

ஆன்மகன் அசலன், மான்மகன் சிருங்கி,
புலிமகன் விரிஞ்சி, புரையோர் போற்றும்
நரிமகன் அல்லனோ கேச கம்பளன்?
ஈங்கிவர் நுங்குலத்து இருடி கணங்களென்று
ஓங்குயர் பெருஞ்சிறப்பு உரைத்தலும் உண்டால்
ஆவொடு வந்த அழிகுலம் உண்டோ? (மணி.13: 63-68)

'அசலன் என்ற முனிவர் பசுவுக்கு மகனாகப் பிறந்தவர். சிருங்கி முனிவர் மானுக்கு மகனாகப் பிறந்தவர். பெரியோர்கள் போற்றுகின்ற கேசகம்பள முனிவர் நரிக்குப் பிறந்தவர் அல்லவா?' என்று ஆபுத்திரன் கேட்கும் கேள்விகளை இங்கே நினைத்துப் பார்க்க வேண்டும். நரிக்குப் பிறந்தவர் முனிவராகப் பெருமை பெற்றிருக்கும்போது குரங்குக்குப் பிள்ளையாகப் பிறந்ததில் நமக்கு என்ன குறை வந்துவிடும்?...

'குரங்கிலிருந்து பிறந்தவன் மனிதன்' என்று பொதுவாகச் சொன்னாலும், குரங்கிற்கும் பல கோடி ஆண்டுகளுக்கு முன்னால், 'பொது முன்னவர்' (common primate) என்ற ஒரு குறிப்பிட்ட பாலூட்டியிலிருந்து மனிதன் உருவாகிச் சிறுகச் சிறுகப் பரிணாமம் பெற்று வளர்ந்துவந்திருக்க வேண்டும். அறிவு சார்ந்த மூளை வளர்ச்சிக்கு அடிப்படைக் காரணமாக இருந்தது, மனிதனை வளர்த்த 'தாய்ப் பாசம்' என்று சொல்கிறார்கள்.

தாய்ப்பாசம் உயிரினங்களுக்கெல்லாம் பொதுவானது. தன் குஞ்சுகளைக் களவாட வரும் கருடனுடன் தாய்க் கோழி கடுமையாகப் போராடும். சிட்டுக்குருவி தான் தேடிக் கொண்டுவந்த இரையைக் கூட்டிலுள்ள தன் குஞ்சுகளுக்குப் பாசத்தோடு ஊட்டும். பொதுவாகப் பறவைகளைவிடப் பாலூட்டும் விலங்குகளுக்கு இருக்கும் தாய்மைப் பாசம் மிகுதி என்பர்.

தாயின் முலைகளில் சுரந்த பால் தன் குட்டிக்கு ஊட்டப்படும்போது குட்டி, தாய் இருவருக்கும் மூளைத் திறனில் வளர்ச்சி மிகுதியாகும். இதன் விளைவாகவே, பாலூட்டிகள் இனத்திலிருந்து மூளை வளர்ச்சி பெற்ற மனிதன் தோன்றினான்!

பாலூட்டிகள் எல்லாவற்றுக்கும் பாலூட்டும் உறுப்புகள் ஒரே மாதிரி இருப்பதில்லை. காம்புகள் முளைத்த மடு (மடி), சில பாலூட்டிகளுக்குப் பின்னங் கால்களுக்கு இடையே அமைந்திருக்கும். சிலவற்றிற்குப் பாலூட்டும் காம்புகள் பற்பலவாக வயிறு முழுவதும் பரவி இருக்கும். மிகச் சில பாலூட்டிகளுக்கு மட்டுமே பாலூட்டும் உறுப்பு - முன்னங் கால்களுக்கிடையே - மார்பில் தாயின் கண் பார்வையில் இருக்கும். தன் குட்டியைக் கண்ணாரக் கண்டு பாலூட்டிப் பராமரிக்கும் தாய்மைப் பாசம் அத்தகைய விலங்குகளுக்கு மிகுதி என்பதை உணர வேண்டும்.



பாலூட்டிகளில் யானைகளும் குரங்குகளும் ஒருவகையில் ஒப்புமை யுடையவை. பாலூட்டும் உறுப்பான மடு, ஏனைய பாலூட்டிகளுக்கு வயிற்றில் அல்லது பின்னங்கால்களுக்கு இடையே அமைந்திருக்க, குரங்குகளுக்கும் யானைகளுக்கும் முன்னங்கால்களுக்கு இடையே - அதாவது, மார்பில் அமைந்துள்ளது.



இவற்றிற்கு மடு மார்பில் இருப்பது மட்டுமன்று. ஒவ்வொரு மார்பிலும் ஒரு முலைக்காம்பு மட்டுமே இருக்கும். இது சிந்திக்கத்தக்கது.

யானைக்கு இருப்பதைப் போலவே நீர்யானைக்கும் பாலூட்டும் மடு மார்பில்தான் உண்டு. இதைக் கவனித்திருக்கிறீர்களா?




குரங்கிலிருந்து தோன்றிய மனித இனத்திற்கும் பாலூட்டும் உறுப்பு மார்பில்தான் உண்டு. இதனால், யானை இனத்திற்கும் குரங்கு மற்றும் மனித இனத்திற்கும்

தொடர்பு இருக்குமா?... என்ற கேள்வி எழுகிறது. இது ஆழமான அறிவியல் மேலாய்வுக்கு உரியது.

மனிதன், யானை போன்ற பெரிய உருவமுடைய பாலூட்டிகள் வழியாகத் தோன்றவில்லை; எனினும் 'யானை ஷுரு' (elephant shrew) என்ற சின்னஞ்சிறு பாலூட்டிவழித் தோன்றினான் என்று அறிவியல் கூறும். மனிதனின் முன்னோடிகளில், குரங்கிற்கும் முன்னதாகத் தேவாங்கைக் கூறுவார்கள். தேவாங்கு எதிலிருந்து உருவானது? அதற்கும் முந்திய சங்கிலித் தொடர் யாது?... அதை இப்போது பார்க்கலாம்.

மனிதனின் மூதாதையர் (premates) என்று பொதுவாகக் கருதப்படும் உயிர்கள் மூஞ்சூறு, எலி, ஔவால் முதலியன. அவற்றுள்ளும் மனித இனத்திற்கு நெருக்கமானதாக 'ஷுரு' (Shrew) என்ற இனத்தைக் கூறுவார்கள்.

## 1. ஷுரு (Shrew)

ஷுருவில் பெருவகையாக இரண்டினைக் கூறுவர். ஒன்று மர ஷுரு (tree shrew); மற்றொன்று யானை ஷுரு (elephant shrew). மரத்தில் வாழ்வன 'மர ஷுரு' என்றழைக்கப்படும். இவை உடலளவில் மிகவும் சிறியன. சற்றே பெரிய உடல்வாகுடையவை 'யானை ஷுரு' எனப்படும். ஆப்பிரிக்கக் காடுகளில் யானை ஷுரு அதிகம் உள்ளன. இவை யானையைப் போலக் கரிய நிறம் கொண்டவையாக இருக்கும். இவற்றுள் சில பொன்னிறமாக இருக்கும். அவற்றைத் 'தங்க முதுகு யானை ஷுரு' (golden-rumped elephant shrew) என்று அழைப்பார்கள்.




எலி, அணிலைப் போன்ற தோற்றமுடைய பாலூட்டி உயிரினம் ஷுரு. இது கடந்த ஜுராசிக் யுகத்திலேயே தோன்றிப் பெரிய டைனோசார்களின் இடையே மரங்களிலும் புதர்களிலும் ஒளிந்து எச்சரிக்கையுடன் வாழ்ந்துவந்த மூதாதை ஆகும். இவ்வினத்தின் மூளை வெகுவாகக் கூர்மை பெற்றது. மனித மூளைத் திறனின் தொடக்கம் ஷுருவிலேயே முளைவிட்டது எனலாம்.

மரக்கிளைகளைப் பற்றி ஏறிய பயிற்சியால், இதன் கை விரல்களின் அமைப்பில் - மனிதர்க்கு இருப்பதைப் போல - கட்டை விரலைத் தனியே பிரித்துப் பிற விரல்களோடு கூடிச் செயல்படுவதற்கு வழி ஏற்பட்டது.




குட்டி போட்டுப் பால் கொடுக்கும் இனத்தைச் சேர்ந்தது ஷுரு. ஷுருக் குட்டிக்கு அதன் தாய், இரண்டு நாள்களுக்கு ஒருமுறைதான் பால் கொடுக்கும். அதுவும் ஐந்து நிமிடம் மட்டும்தான். அதுவே குட்டிக்கு இரண்டு நாள்வரை தாங்கும். கீழேயுள்ள படத்தைக் கவனியுங்கள். பால் ஊட்டும் உறுப்பு மார்பில் இருப்பதை அறியலாம். மனித இனத்தின் முன்னோடி உயிரி இது என்பதற்கு இதுவும் ஒரு சான்றாகும்.



ஷுரு மாமிச பட்சணி. பூச்சி, புழுக்கள், நத்தை, விட்டில் என்று எதையும் விட்டுவைக்காது. புலால் உணவு என்று ஒன்றும் கிடைக்காத பட்சத்தில் அது தன் உடம்பையே கடித்துத் தின்னும் அளவிற்குப் புலால் வெறி பிடித்த விலங்கு இது!

குட்டி போட்டுப் பால் கொடுக்கும் பாலூட்டி (mammal) இனத்தில் உருவத்தில் மிகவும் சிறியது ஷுரு தான். ஆனால், உருவத்தில் மிகப் பெரிதான யானைக்கும் இதற்கும் தூரத்து உறவு உண்டு என்று ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர். கரிய நிறம், மார்பில் பாலூட்டும் முலைக் காம்பு முதலிய ஒற்றுமைகளோடு இன்னும் பல அறிவியல் கூறுகள் ஷுருவுக்கும் யானைக்கும் ஒத்துப்போயின. ஷுரு மாமிச உணவு உட்கொள்ளும் விலங்கு; யானை தாவர உணவு உட்கொள்ளும் விலங்கு என்று அடிப்படை வேறுபாடு இருப்பதை மறுக்க முடியாது.

## 2. லெமூர் (Lemur)

ஷுருவின் பரிணாம வளர்ச்சியில் உருவான இலெமூர் என்ற விலங்கு உருவத்தில் ஷுருவை விடப் பெரிய அளவில் இருந்தாலும் அது தாவர உணவுப் பழக்கமுடைய விலங்காக இருந்ததையும் எண்ணிப் பார்க்க வேண்டும். இயற்கையின் பரிணாம விந்தை அறிவுக்கு அடங்காதது!

அடுத்த இரண்டு கோடி ஆண்டுகளில் 'ஷுரு' இனம் 'இலெமூர்' (Lemur) என்ற இனமாகப் பரிணாமம் பெற்றது. கண்கள் துருதுருக்கக் கூர்த்த மதியுடைய இனமாக இலெமூர் இருந்தது.





மனித உள்ளங்கை போலவே கட்டை விரல் விலகி, நான்கு விரல்களும் ஒரு நிரையாகத் தோன்றும் அமைப்புடையதாக இலெமூர் விளங்கியது.

"கிட்டத்தட்ட மனிதரது அமைப்பும், மூளை உருவும் உடைய இலெமூர் (Lemur) என்ற உயிர் வகை ஒன்று நடுக்கோட்டுப் பகுதியைச் சுற்றி இருப்பதைக் கூர்ந்து நோக்கி, அந்த லெமூர்களிலிருந்தே மனிதர் ஏற்பட்டிருக்க வேண்டுமென்று தீர்மானித்தனர். ... 'இலெமூர்' என்ற அவ்வுயிரின் பெயரையே அடிப்படையாகக் கொண்டு இலெமூரியா என அறிஞர் பெயர் வகுத்தனர்" [89] என்று இலெமூரியாக் கண்டத்தின் பெயர்க் காரணத்தைக் கூறுகின்றார் கா.அப்பாத்துரை.

இலெமூர் மரக்கறி உணவை மட்டுமே உட்கொள்ளும் சாது பட்சணி. பாலூட்டி இனமான இலெமூருக்குப் பாலூட்டும் உறுப்பு மார்பிலேயே அமைந்திருந்தது. அது தன் குட்டிகளை இடுப்பில் இடுக்கிக் கொண்டு மார்புக் காம்பில் பாலூட்டும் அழகைப் பின்வரும் படத்தில் காணலாம்.



## 3. லாரிஸ் (Loris)





இலெமூருக்கு அடுத்த பரிணாமமாக 'லாரிஸ்' (Loris) என்ற உயிரினம் தோன்றியது. கண்கள் பளிங்குபோல் பளபளக்கும். கூரிய பற்கள் இதற்கு உண்டு. இதன் உருவம் ஒரு கைக்குள் அடங்கிவிடும் அளவில் சிறியது. பார்ப்பதற்குக் குட்டிப் பொம்மைக் குரங்குபோலத் தோன்றும்.



சிறிய பூச்சிகளைப் பிடித்துத் தின்னும். மாமிசத்துடன் இலை தழைகளும் இதற்கு உணவாக அமையும். மரக் கிளைகளில் ஏறுவதோடு சிறிய குச்சியிலும் இது ஏறி நிற்கும். அவ்வளவு இலேசானது.





மனித முன்னோடி விலங்குகளில் சூட்டிகையாகவும் சுறுசுறுப்பாகவும் விளங்கக் கூடிய உயிரினமாக லாரிஸ் இருந்தது. இன்றும் மலேசியாக் காடுகளில் லாரிஸ் இனங்களைக் காண முடிகிறது.

## 4. டார்சீர் (Tarsier)





லாரிஸுக்கு அடுத்த பரிணாமமாக 'டார்சீர்' (Tarsier) என்ற உயிரி தோன்றியது. இதன் கண்கள் அறிவு சார்ந்த கவர்ச்சியானவையாக இருந்தன. இது மனிதனைப் போலவே சிரிக்கும்; விரல்களால் நாகரிகமாக உணவை எடுத்து உண்ணும். பிற பிராணிகள் உண்டது போக எஞ்சிய உணவை இது தன் கையாலும் தொடாது.

இந்தோனேசியாக் காடுகளில் இன்றும் காணப்படும் விலங்கு இது. ஒரு நேரத்தில் ஒரு குட்டிதான் ஈனும். ஆண்டுக்கு இரண்டு முறை இது குட்டி போடும். டார்சீர் பிறந்து மூன்று வாரங்கள் (20 நாள்கள்) மட்டுமே அதன் தாய் இதனைப் பராமரிக்கும். தாய் தன் குட்டியை வாயில் கவ்வித் தூக்கிச் செல்லும். மூன்று வாரம்தான். அதன்பின் டார்சீர் குட்டிக்குத் தன் முயற்சியாகவே வேட்டையாடும் திறன் உருவாகிவிடும். ஒரு குட்டி மட்டுமே ஈனும் விலங்குகள், தம் குட்டிமீது மிகவும் பாசமாக இருக்கும் என்று கூறுவார்கள். மனிதர்களைப் போலவே டார்சீர் பாசம் மிகுந்தது.



விட்டில் பூச்சி, கரையான், கரப்பான் பூச்சி, பாச்சை, தும்பி, தட்டான் முதலிய பூச்சிகள்தாம் டார்சீரின் உணவு. பூச்சிகளை வேட்டையாடுவது டார்சீரின் வழக்கமான தொழிலாகும்.

## 5. தேவாங்கு (Sloth)





ஒரு நாய்க்குட்டியின் அளவில் இருக்கும் விலங்கு தேவாங்கு ஆகும். இதன் நகங்கள் மிக நீளமாகவும் கூர்மையாகவும் இருக்கும். நகங்களின் உதவியால் தேவாங்கு மரக்கிளைகளைப் பற்றித் தொங்கும். குரங்கிற்கு முன்னோடியான இவ்விலங்கு மிகவும் சுறுசுறுப்பானது. அதே நேரத்தில் தூக்கத்தில் கும்பகர்ணனாக இருக்கும். ஒரு நாளில் 15 மணி நேரம் தூங்கக் கூடியது. தன் காலிலுள்ள நீண்ட நகங்களால் மரக்கிளையைப் பற்றித் தொங்கிய நிலையிலேயே இது அயர்ந்து தூங்கும்.




தேவாங்கில் இரண்டு வகைகள் உண்டு. ஒன்று இரட்டைக் குளம்புத் தேவாங்கு (two-toed); மற்றொன்று முக்குளம்புத் தேவாங்கு (three-toed). கால் நுனியில் நீளமாக இருக்கும் நகம் போன்ற உறுப்புகளைத் தான் 'குளம்பு' என்பர். அவை இரண்டு இருந்தால் இரட்டைக் குளம்பு; மூன்று இருந்தால் முக்குளம்பு என வகை பிரிக்கப்படும்.

தேவாங்கு மனிதர்களைப் போலவே ஆற்று வெள்ளத்தில் டைவ் அடித்து நீந்தக் கூடிய திறன் பெற்றது.





தன் குட்டியின்மீது மிகுந்த பாசம் கொண்ட விலங்கு இது. குட்டி தன் மார்பில் பால் குடிக்கும் நிலையிலேயே மரக்கிளையில் தலைகீழாகத் தொங்கியவாறே இது உறங்கும்.





## 6. குரங்குகள் (Nea world & Old world Monkeys)

பபூன், கிப்பன், உராங்குட்டான், கொரில்லா, சிம்பன்சி என்ற பலவகை மனிதக் குரங்குகளில், மனிதனோடு மிக நெருங்கிய சிம்பன்சி என்ற மனிதக் குரங்கிலிருந்து 'குரங்கு மனிதன்' தோன்றினான். அதன் பின்னர் 'மனவளர்ச்சி அடைந்த மனிதன்' என்ற மனிதன் தோன்றினான் என்று மனித குலத்தின் தோற்ற வரலாறு கூறுகின்றனர். இது பின்வரும் வரைபடத்தால் சுருக்கமாக விளக்கப்பட்டுள்ளது.



யானையிலிருந்து மனிதன் தோன்றினான் என்று அறிவியல் முடிவு இருந்திருந்தால் மதவாதிகள் ஒருவேளை மகிழ்ச்சியோடு ஏற்றிருக்கக் கூடும். அற்பமான

குரங்கிலிருந்து மனிதன் தோன்றினான் என்பதை அவர்களால் ஒத்துக் கொள்ள முடியவில்லை. அப்படிக் கூறிய டார்வினை எதிர்ப்பாளர்கள் ஒரு மனிதக்குரங்காகச் சித்திரித்துக் கேலிசெய்தனர்.





"பொதுவாக, 'குரங்கிலிருந்து பிறந்தவன் மனிதன்' என்ற கொள்கை, உலகம் முழுவதும் பரவலாக ஒப்புக்கொள்ளப்படுகிறது."[90]

## 7. மனிதக் குரங்குகள் (Apes)

மனிதக் குரங்கு வகைகளில் சிம்பன்சி இன்றைய மனிதனோடு நெருங்கிய தொடர்பு கொண்டு விளங்குவதை அறிவியல் முறையில் நிரூபித்துள்ளனர். அதனுடைய எலும்புக்கூடு மனிதனுடைய எலும்புக் கூட்டோடு 98% ஒத்திருக்கிறது. மீதமுள்ள இரண்டு சதவீதம்கூடப் பெரிய வேறுபாடு என்று கூறமுடியாது; சிறு மாற்றம் என்று வேண்டுமானால் சொல்லலாம் என்பர். [91]

> மனிதனின் முதுகெலும்புக்குக் கடைசியில் வால் அடையாளம் மிஞ்சியுள்ளது. நான்கு கால் விலங்குகளில் காதுகளை அசைக்க உள்ள நுண்ணிய நரம்புகளைப் போல் மனிதனிலும் கூட நுண்ணிய நரம்புகளின் அடையாளங்கள் தென்படுகின்றன. சிலர் இவற்றால் தம் காதுகளை அசைக்கவும் செய்வார்கள்.[92]



> நவீன பரிசோதனைகள் மூலம் சிம்பன்சி மற்றும் நவீன மனிதன் ஆகியோரின் டி.என்.ஏ.க்களில் 98 சதம் ஒற்றுமையுள்ள விஷயம் தெரிய வந்தது [93]

என்பர்.

சிம்பன்சியின் குட்டி பிறந்த நிலையில் மனிதக் குழந்தையைப் போலவே காலையும் கையையும் விறைப்பாக ஆட்டும்; வாயைக் கோணி அழும். குழந்தைச் சேட்டைகள் சிம்பன்சிக் குட்டிக்கும் மனிதக் குழந்தைக்கும் பொதுவானவையாக அமைந்துள்ளன.







சிம்பன்சியின் முகபாவனைகள் மனிதரை ஒத்திருப்பதைக் காணலாம். ஒரு தேர்ந்த நடிகனைப் போலவே அது முகபாவனைகள் காட்டி நடிக்கும். மனிதர்களின் நாடகத்தில் சிம்பன்சியின் முகபாவனைகள் மனிதரை ஒத்திருப்பதைக் காணலாம். ஒரு தேர்ந்த நடிகனைப் போலவே அது முகபாவனைகள் காட்டி நடிக்கும். மனிதர்களின் நாடகத்தில் பிறந்த மெய்ப்பாடுகள் எட்டு என்று தொல்காப்பியர் கூறுவார். அவை நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை என்னும் எட்டுவகை ஆகும். நகை = வாய்விட்டுச் சிரித்தல்; அழுகை = வருந்திக் கண்கலங்குதல்; இளிவரல் = இகழ்ச்சி, ஏளனம்; மருட்கை = வியப்பு; அச்சம் = பயம்; பெருமிதம் = வீரம்; வெகுளி = சினம்; உவகை = (பாலியல்) களிப்பு. அவை எட்டையும் சிம்பன்சி தன் முகத்தில் காட்டவல்லதாக இருக்கும்.



நகை அழுகை இளிவரல் மருட்கை



அச்சம் பெருமிதம் வெகுளி உவகை

எட்டு வகை மெய்ப்பாடுகளையும் நடிக்கும் நாடகத்திறன், மனிதன் என்ற வளர்ச்சிக்கு முந்திய சிம்பன்சி நிலையிலேயே தொடங்கிவிட்டது என்று கருதலாம்.

## குரங்கு, பிற பாலூட்டிகள் - நடை வேறுபாடு

குரங்கு நடக்கும் முறை, மற்ற பாலூட்டிகள் நடக்கும் முறையிலிருந்து வேறுபட்டது; அது மனித நடையோடு ஒப்புமையுடையது என்பதைக் கூர்ந்து நோக்குவோரே கவனிக்க முடியும். அதனை விளக்குவோம்.





நடந்து செல்லும் ஆடு மாடுகள், குதிரைகள், நாய்களின் நடையை நீங்கள் கவனித்தது உண்டா? அனைத்துப் பாலூட்டிகளும் முதலில் தங்களின் வலது பின்னங்காலை எடுத்து வைத்ததும் அடுத்து வலது முன்னங்காலை எடுத்துவைக்கும். அதன்பின்னரே இடது பின்னங்கால், அடுத்து இடது முன்னங்கால் என்ற முறையிலேயே நடக்கும். அதாவது, வலது கால்கள் இரண்டையும் ஒன்றையடுத்து

மற்றொன்றாக எடுத்துவைத்த பிறகுதான், இடதுகால்கள் இரண்டையும் ஒன்றையடுத்து மற்றொன்றாக எடுத்து வைக்கும். கவனித்துப் பாருங்கள். இது தெரியும். ஆனால், மனிதனின் நடை 'மாறுகால் மாறுகை' முறையாகும்.

மனிதன் தன் வலது காலை எடுத்துவைக்கும் அதே தருணத்தில், தன் இடது கையை முன்னே நீட்டுவான்; அடுத்ததாக, இடது காலை எடுத்துவைக்கும் அதே தருணத்தில் தன் வலது கையை முன்னே நீட்டுவான். பஃபூன், கிப்பான், உரங்கூட்டான், சிம்பன்சி முதலிய மனிதக் குரங்குகளும் இவ்வாறே நடக்கின்றன.

வாலுள்ள பழைய குரங்குகளும் இப்படித்தான் நடக்கும். (அதன் கைகளுக்குப் பதிலாக முன்னங்கால்கள் இருந்தன). **இந்த ஒற்றுமை குரங்குகளுக்கும் மனிதனுக்கும் இடையே மட்டுமே உண்டு. வேறு பாலூட்டிகளிடம் இந்த முறையைப் பார்க்க முடியாது.** இத்தகைய நுட்பமான சான்றுகள்வழி டார்வின் தந்த ஒப்பற்ற கருத்தின் மூலம் உலகத்தையே தம் பக்கம் திரும்பச் செய்துவிட்டார் என்பர். [94]

மனித மூதாதையர் என்று கருதப்படும் பாலூட்டி விலங்குகளின் கைவிரல்கள் மற்றும் பாதங்களின் விரல்கள் மனிதனோடு பொருந்தி அமைந்தன. கையில் கட்டை விரல் தனியே பிரிந்தும் ஏனைய நான்கு விரல்கள் ஒருங்கிணைந்தும் அமைந்தன. இதனால் மரக்கிளையைக் கவ்விப் பிடித்து ஏறி இறங்குவதற்கும், மரக்கட்டையைக் கையால் இறுகப் பிடித்து அதைக் கருவியாகப் பயன்படுத்துவதற்கும் ஏதுவானது.

மனிதனுக்கு மரம் ஏறி இறங்கும் பழக்கம் கடந்த பல இலட்சம் ஆண்டுகளாக அற்றுப்போனதால், கால்களின் கட்டை விரல் மற்றைய விரல்களோடு நெருங்கிவரத் தொடங்கியது.






இதையெல்லாம் கருத்தில் கொண்டே, மனிதக் குரங்கு இனத்திலிருந்தே மனிதன் தோன்றினான் என்று அறிவியல்வழி நிரூபித்தனர். இதை எதிர்த்த மதவாதிகள், அறிவுசார்ந்த ஒரு கேள்வியை எழுப்பினார்கள்.

> குரங்கிலிருந்து மனிதன் தோன்றினான் என்பது உண்மையானால், இன்றைய குரங்குகள் ஏன் மனிதனாக மாறவில்லை?...

'நச்' என்ற நல்ல கேள்வி இது! ஆனாலும், இதற்குரிய பதில் இதுதான்:

இன்றைய குரங்குகள் எல்லாம் மனிதனாக மாறிக்கொண்டுதான் இருக்கின்றன - இம்மி இம்மியாக! வெறும் நூறு ஆண்டுகளுக்குள் கண்மூடிப்போகும் மக்களால் அந்த மாபெரும் மாற்றத்தைக் கண்டறிய முடியாது. இன்னும் ஒரு கோடி ஆண்டுகள் அல்லது குறைந்தபட்சம் 50 இலட்சம் ஆண்டுகள் கழிந்தால், இன்றைய குரங்குகள் எல்லாம் மனிதர்களாக மாறிப் போயிருக்கும். அப்படிப் பற்பல இலட்சம் ஆண்டுகளாக - இம்மி இம்மியாகத்தானே நாமும் மாறி வந்திருக்கிறோம்!

இதற்கு முந்திய தொல்லியல் அகழ்வாராய்ச்சிகளை ஆழ்ந்து ஊன்றிக் கவனித்தால் இந்த உண்மை உறைக்கும்.

## 8. குரங்கு மனிதன்

உலகின் பல மூலைகளில் நடந்த அகழ்வாராய்ச்சியில் கிடைத்த மண்டை ஓடுகள், எலும்புகள், கல்படிமங்கள் (fossils) முதலியவற்றைக் கொண்டு ஆய்வுகள் நடந்தன. இதனால், சுமார் பதினைந்து மில்லியன் (ஒன்றரைக் கோடி) ஆண்டுகளுக்கு முன்னால், குரங்கு மனிதன் நிலையில் வாழ்ந்த நம் மூதாதையர்களை அறிய முடிந்தது. அந்தக் குரங்கு மனிதர்களின் இனத்தை 'ராமபித்தக்கஸ்' (Ramapithecas) என்று பெயரிட்டு நம் தொல்லியல் ஆய்வாளர் அழைக்கின்றனர். இந்த இன மனிதர்களின் எலும்புக்கூடுகள் நம் இந்திய நாட்டில் இமயமலை அடிவாரத்தில் உள்ள **சிவாலிக்** குன்றுப் பகுதியில் (Siwalik hills) கண்டுபிடிக்கப்பட்டன. இதனுடைய தாடை, பற்கள் ஆகியவற்றின் அமைப்பு மனிதனுடைய அமைப்பை ஒத்திருந்தது.[95]



ஆரம்ப காலத்தில் 'ராமபித்தக்கஸ்' மனிதர்கள், குரங்குகளைப் போலவே கிளைக்குக்கிளை தாவித் திரிந்தனர். காலப்போக்கில் இவர்களின் உடலமைப்பில் மாற்றம் ஏற்பட்டது. மரங்களிலிருந்து தரைக்கு வந்து வாழ வேண்டிய கட்டாயமான சூழல் உருவானது. அவர்கள் கற்களை ஆயுதமாகப் பயன்படுத்தும் அறிவு பெற்றனர். தங்கள் உணவைத் தாங்களே வேட்டையாடி உண்ணும் ஓர் உயர்நிலைக்குத் தள்ளப்பட்டனர். வேட்டைப் போராட்டத்தில் கிடைத்த அனுபவத்தால், அவர்களுடைய மூளை, வளர்ச்சி அடையத் தொடங்கியது.







*Rampithecus*

இப்படியே பத்து மில்லியன் (ஒரு கோடி) ஆண்டுகள் கழிந்தன. 'ராமபித்தக்கஸ்' என்ற குரங்கு மனிதர்கள் நிலையிலிருந்து படிப்படியாக வளர்ந்து முன்னினும் மூளை வளர்ச்சியடைந்த 'குரங்கு மனிதர்கள்' உருவானார்கள். இதனை உலகின் பல்வேறு இடங்களில் நடந்த அகழ்வாராய்ச்சிகளின் முடிவுகள் உணர்த்தின.

தொடக்கத்தில் எலி போன்ற உருவமுடைய ஷ்ரு என்ற உயிரினத் திலிருந்து தொடங்கி, அது லெமூர் ஆகி, அதுவே லாரிஸ், பிறகு டார்சீர் எனப் பரிணமித்து, அதிலிருந்து தேவாங்கு, பிறகு குரங்கு, அதன்பின் முன்னங் கால்களைக் கைகளாகத் தூக்கி நடந்த மனிதக்குரங்கு... குரங்கு மனிதன்... எனப் பரிணாமம் பெற்றுக் கடைசியில் மனிதன் தோன்றினான் என்று பரிணாம ஆய்வாளர் கூறுவர்.



# 5. மனிதன் தோன்றினான்





தென் ஆப்பிரிக்காவில் நடந்த அகழ்வாராய்ச்சியில் கண்டெடுத்த மண்டை ஓடுகளை வைத்து ஆய்வு நடத்தியதில், இந்த மனித இனம் உடல் திடத்திலும் மூளைத் திறனிலும் முன்னவர்க்கு மிகுந்திருந்த நிலையை அறிய முடிந்தது. இவர்களுக்கு 'ஆஸ்ட்ரலோபித்தக்கஸ்' (Australopithecus) என்று பெயரிட்டனர். இவர்களை 'ஆப்பிரிக்கக் குரங்கு மனிதன்' என்று சுட்டுவதும் தொல்லியலார் வழக்கம்.




Australopithecus africanus

ஆப்பிரிக்கக் குரங்கு மனிதர்களை அடுத்து, அவரினும் மூளை வளர்ச்சி அதிகம் பெற்ற ஓர் இனத்தையும் கண்டறிந்தனர். இவ்வினத்தவர்கள் நிமிர்ந்து நடந்தனர். விலங்குகளின் எலும்புகளைக் கற்களால் உடைத்துத் தின்னும் பழக்கமுடைய மனிதர்களாக இவர்கள் இருந்தனர்.





இவர்களின் பெயர் '1470 மனிதன்' என்பதாகும். இவர்களைப் பற்றிய தடயங்கள் கண்டுபிடிக்கப்பட்டு ஆராய்ந்தபோது உருவான தொல்லியல் கோப்பிற்கு இடப்பட்ட எண்ணே இவர்களது பெயரும் ஆயிற்று. இவர்களை 'ஹோமோஹேபிலிஸ்' (Homohabilis) என்ற பெயராலும் அழைக்கிறார்கள். இவர்கள் ஒரு மில்லியனிலிருந்து இரண்டரை மில்லியன் ஆண்டுகளுக்கு முற்பட்டவர்கள் என்பர். [96]

'ஹோமோஹேபிலிஸ்' மனிதர்கள் பத்து இலட்சம் ஆண்டுகளுக்கு முற்பட்ட 'மனிதர்கள்' என்று நாம் கூறினாலும், அவர்கள் பாதிக் குரங்குகளாகவே இருந்தனர்.

> ஆதிமனிதன் பத்து இலட்சம் ஆண்டுகளுக்கு முற்பட்டவன். குரங்குகளின் இயல்புகள் அவனிடமிருந்து முற்றாக நீங்கியிருக்கவில்லை [97]

என்று கூறுவது இதனை உணர்த்தும்.

'ஹோமோஹேபிலிஸ்' (Homohabilis) என்ற இன மனிதர்களுக்கு அடுத்த நிலையாக வந்தவர்கள்தாம் 'ஹோமோ எரக்டஸ்' (Homoerectus) என்ற மனிதர்கள். இவர்கள் இன்றிலிருந்து சுமார் 50 ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டவர்கள் என்பர். ஆசியா, ஆப்பிரிக்கா, ஐரோப்பா ஆகிய பகுதிகளில் கண்டெடுக்கப்பட்ட மண்டையோடுகள், எலும்புக் கூடுகளை வைத்து ஆராய்ந்ததில் இது தெரிய வந்தது. கூர்தீட்டிய கற்களை ஆயுதங்களாகப் பயன்படுத்தினார்கள். வேட்டையாடிய விலங்குகளை நெருப்பில் சுட்டுத் தின்றார்கள். இவர்கள் நெருப்பை உருவாக்கவும் அதனைத் தக்கவாறு பயன்படுத்தவும் அறிந்திருந்தார்கள்.







## தொடர் அகழ்வாராய்ச்சி முடிவுகள்

குரங்கிலிருந்து மனிதன் தோன்றினான் என்ற கருத்தை டார்வின் முன்வைக்கிறபோது, அதை ஏற்றுக்கொண்ட அறிஞர்கள், ஒரு கேள்வியை எழுப்பினார்கள். மனிதக் குரங்கிற்கும் மனிதனுக்கும் மத்தியில் உள்ள இணைப்பு யாது? இடைப்பட்ட பரிணாம உயிரிகள் யார் யார்? அந்த இணைப்பைக் கண்டுபிடிக்காமல் இதை ஒப்புக்கொள்வது அறிவுக்குப் பொருந்தாது என்றனர். இதனால், மனிதக் குரங்கு இனத்திலிருந்து பரிணாமமுற்று வளர்ந்த உயிரிகளைத் தேடும் முயற்சிகள் தொடங்கின. கல்லை ஆயுதமாகப் பயன்படுத்தத் தொடங்கிய முதல் இனத்தின் தடயம் கிடைக்காதா என்று உலகமெங்கும் அகழ்வாராய்ச்சிகளை நடத்தினர்.

உதய கற்கால மனிதர், மத்திய கற்கால மனிதர், புதிய கற்கால மனிதர் என்று - கடந்த சுமார் ஒரு கோடி ஆண்டுகளாகப் பரிணமித்து வந்த இந்தத் தொன்மை மனிதர்களை முப்பெரும் பிரிவாகப் பிரிப்பார்கள். இவர்களைக் குறித்த தொல்லியல் ஆய்வுகள் உலகமெங்கும் பல மூலைகளிலும் தொடர்ந்து நடந்தன.

இந்தியாவிலும் வடக்கே சிந்துசமவெளி முதல் தெற்கே ஆதிச்சநல்லூர் வரை ஆய்வுகள் நடந்தன. இந்திய அகழ்வாராய்ச்சிகளை முக்கியமாகக் கருதாத உலக ஆய்வாளர்கள் ஜெர்மனி, இங்கிலாந்து, சீனா, ஆப்பிரிக்கா என்று வெளிநாடுகளில் நடந்த ஆய்வுகளுக்கே பெரிதும் முதன்மை அளித்தனர். அவற்றுள் 1857 முதலாக 1947 வரையிலும் நடந்த ஆய்வுகள் குறிப்பிடத்தக்கவை. அந்த ஆய்வுகளில் சில சுட்டத்தக்க ஆய்வு முடிபுகளை உலகிற்கு முன்வைத்தனர். அம்முடிவுகள் மனித இனத்தின் வளர்ச்சிப் படிநிலைகளை ஒருவாறு வெளிச்சத்திற்குக் கொண்டுவந்தன. அவற்றை, ஆய்வு நடந்த காலவரிசையில் விளக்கிக் கூறியுள்ளார் எஸ்.ஏ.பெருமாள்.[98] அவர் தந்த தகவல்களை வைத்தும் இணைய த் தளத்தின் துணையுடனும் கிடைத்த செய்திகளின் அடிப்படையில், சுட்டத்தக்க நம் மூதாதையர்களை **மனித இனம் பரிணமித்துவந்த காலவரிசையில்** சுருக்கமாகத் தருவோம்.

### 1. ஆப்பிரிக்கக் குரங்கு மனிதன் (Australopithecus Africanus)

தென் ஆப்பிரிக்காவில் 1925 முதலாக 1947 வரையிலும் டாக்டர் ராபர்ட் புரூம் (Dr. Robert Broom) என்பவர் நடத்திய அகழ்வாராய்ச்சியில் பூமியில் சில எலும்புகளையும் மண்டையோடுகளையும் கண்டுபிடித்தார்.





அந்த மண்டையோடு மனிதக் குரங்கின் சாயலை ஒத்திருந்தாலும் அது, குரங்கைக் காட்டிலும் மூளைவளர்ச்சி அடைந்த மனிதன் என்ற உண்மை ஆய்வில் முடிவானது. அவன்தான் தொன்மையான ஆப்பிரிக்கக் குரங்கு மனிதன் என்று அவர் பெயர்சூட்டினார். மண்டையோடுவழி நிறுவிய அந்த உண்மை, தொல்லியல் உலகில் பரபரப்பை ஏற்படுத்தியது. தொல்லியலாளர் அம்மனிதனை 'ஆஸ்ட்ரலோபித்தகஸ் ஆஃப்ரிக்கானஸ்' என்று அழைத்தனர்.

### 2. ஜாவா மனிதன் (Java man)

இந்தியாவுக்கும் ஆஸ்திரேலியாவுக்கும் இடையில் உள்ளது ஜாவா தீவு. இது ஒருகாலத்தில் இந்தியாவோடு இணைந்திருந்த பகுதியாகும். ஜாவா தீவில் உராங்குட்டான் குரங்கினம் ஏராளமாக உள்ளது என்பதால், அதிலிருந்து கிளைத்த மனித இனத்தின் தடயங்கள் அங்கே கிடைக்கலாம் என்ற எண்ணத்தில், யூஜின் டூபி (Eugene Dubois) என்ற டச்சுப் பேராசிரியர் அகழ்வாராய்ச்சியை 1891இல் அங்கே நடத்தினார். ஜாவாவில் சோலோ என்ற ஆற்றின் கரையில் திரினுல் என்ற இடத்தில் அவர் நடத்திய ஆய்வில் சில மண்டையோடுகளையும் தொடை எலும்புகளையும் கண்டுபிடித்தார்.






விடுபட்ட பரம்பரையைக் கண்டுபிடித்து விட்டேன் என்று டூபி உற்சாகமாக அறிவித்தார். குரங்கிலிருந்து தோன்றிய முதல் மனிதன் இவனே என்றார். அந்த ஜாவா மனிதனுக்கு பித்தகாந்ரோப்பஸ் (Pithecanthropus) என்று பெயர் சூட்டினார். (**'பித்தகேர்' என்றால் கிரேக்க மொழியில் குரங்கு என்று பொருள்**). ஜாவா மனிதனைச் சில ஆய்வாளர்கள் மனிதக் குரங்குதான் அது என்று பிடிவாதமாகக் கூறினர். உண்மையில், ஆப்பிரிக்கக் குரங்கு மனிதனுக்குப் பிந்திய காலத்தில் பரிணாமம் பெற்ற குரங்கு மனிதனே ஜாவா மனிதன் என்பது நிரூபிக்கப்பட்டது. எந்தவகை மனிதக் குரங்கின் மூளையையும் விட ஜாவா மனிதனின் மூளை அளவு பெரியதாக - அதாவது 940 சிசி அளவினதாக இருந்தது. இந்த மனிதனுக்கு முன்னர், ஹோமோ எரக்டஸ் (Homoerectus) காலத்தில் 'டர்கானா பாய்' (Turkana Boy / WT 15000) என்ற வகை மனிதனின் மூளை அளவு 910 சிசி மட்டுமே. அவனைக் காட்டிலும் ஜாவா மனிதன் வளர்ச்சியடைந்தவன் என்பது நிரூபணம் ஆயிற்று.

### 3. பீக்கிங் மனிதன் (Peking man)

டாக்டர் டேவிட்சன் பிளாக் (Davidson Black) என்பவர் கனடாவில் டொரண்டோ நகரில் பிறந்தவர். அவருக்கு மனித இனத்தின் மூதாதையர்கள் பற்றிய ஆய்வில் மிகுந்த ஈடுபாடு இருந்தது. சீனாவில் உள்ள பீக்கிங் யூனியன் மருத்துவக் கல்லூரியில் பேராசிரியராகப் பணியாற்ற அவருக்கு அழைப்பு வந்தபோது அதை மகிழ்ச்சியோடு ஏற்றார். காரணம், சீனாவில் மனித மூதாதையர்களின் தடயங்கள் கிடைக்க நிறைய வாய்ப்பு இருந்ததாக அவர் படித்திருந்தார். அங்கே பணியாற்றி வந்தபோது, பீக்கிங் மனிதனின் மண்டையோட்டை ஆராயும் வாய்ப்பு அவருக்கு 1928இல் அமைந்தது.





பீக்கிங் நகருக்கு அருகில் பேய்க்குன்று (Dragon Hill) என்ற இடம் உள்ளது. அக்குன்றின் அடிவாரத்தில் சவுகடீன் (Zhoukoudian) என்ற ஒரு கிராமத்தில் சில மண்டையோடுகளையும் எலும்புகளையும் கண்டுபிடித்து ஆராய்ந்தார் டேவிட்சன் பிளாக். மனிதப் பரிணாம வரலாற்றில் இணைப்பை ஏற்படுத்தும் முக்கிய மனிதன் இவனாவான் என்றார். அந்த மனிதனுக்கு 'சீனாந்ரோப்பஸ்' (Sinanthropus) என்று பெயர்சூட்டினார். இவனைப் 'பீக்கிங் மனிதன்' என்றும் அழைப்பார்கள். "விடுபட்ட இணைப்பு இது அல்ல!" என்று சிலர் மறுத்தனர். டேவிட்சன் பிளாக் 1934இல், தான்

இறந்துபோன காலம்வரை இந்த ஆய்வினைத் தொடர்ந்து செய்து, மனிதக் குரங்கிற்கும் மனிதனுக்கும் இடையே உருவான இணைப்பினங்களில் சுட்டத்தக்க பரிணாமமே பீக்கிங் மனிதன் என்பதை நிறுவினார்.

### 4. பில்ட்டவுன் மனிதன் (Piltdown man)

இலண்டன் நகரில் 1912இல் தற்செயலாகக் கண்டறியப்பட்ட மூதாதை மனிதன் இவன். சாலைச் சீரமைப்பிற்காகக் கொட்டிய கற்குவியலின் இடையே ஒரு மனிதனின் தாடை எலும்பு கிடந்ததை, அந்த வழியே வந்த தொல்பொருள் ஆய்வாளர் சார்லஸ் டாசன் (Charles Dawson) என்பவர் காண நேரிட்டது. அந்தக் கற்களை அள்ளிக் கொண்டுவந்த இடமான பில்ட்டவுன் என்ற ஊரில் தோண்டிப் பார்த்தபோது, இன்னும் சில மண்டையோடுகள் கிடைத்தன.


Charles Dawson






அவற்றை வைத்து ஆராய்ச்சியைத் தொடர்ந்தபோது கண்டறியப்பட்ட மனித மூதாதையே பில்ட்டவுன் மனிதன். இவனுக்கு 'இயோன்தராப்பஸ் டாசோனி' (Eoanthropus Dawsoni - டாசன் கண்டுபிடித்த ஆரம்பக் காலக் குரங்குமனிதன்) என்று பெயரிட்டார்கள். பொதுவாக, **பீல்ட்டவுன் மனிதன்** என்று அழைப்பதே வழக்கத்தில் உள்ளது.

### 5. ஹீடல்பர்க் மனிதன் (Heidelberg man)

ஜெர்மனியில் ஹீடல்பர்க் நகருக்கு அருகில் நெஞ்சாறு என்ற ஆற்றங்கரையில் 1907இல் ஹீடல்பர்க் பல்கலைக்கழகம் நடத்திய அகழ்வாராய்ச்சியில் சில மண்டையோடுகள் கிடைத்தன. அவற்றை வைத்து ஆய்வு நடத்தியதில் அந்த மூதாதை பில்ட்டவுன் மனிதனுக்குக் காலத்தால் பிந்தியவன் என்ற உண்மை கண்டறியப்பட்டது. அந்த மனிதனுக்கு ஹீடல்பர்க் மனிதன் என்று பெயர் சூட்டினர்.







### 6. நியாண்டர்தால் மனிதன் (Neanderthal man)

ஜெர்மனியில் நியாண்டர்தால் என்னும் மலைச்சரிவில் உள்ள குகைகளில் தொன்மைக்கால மனிதர்களின் எலும்புகளும் மண்டை ஓடுகளும் 1857இல் கிடைத்தன. பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் வாழ்ந்த நம் மூதாதையரான

மனிதன் அவன் என்ற உண்மை தெரிய வந்தது. 1857-க்குப் பிறகு அறியப்பட்ட ஜாவா மனிதன், பீக்கிங் மனிதன், பில்ட்டவுன் மனிதன், ஹீடல்பர்க் மனிதன் ஆகிய மூதாதையருக் கெல்லாம் உறவு உடையவனும் பிந்திய தலைமுறையைச் சேர்ந்தவனும் இவன் என்பதையும் அறிந்தனர். அவனுக்கு நியாண்டர்தால் மனிதன் என்று பெயர் சூட்டினர்.



## 7. குரோமாக்னன் மனிதன் (Cro-magnon man)

பிரான்ஸில் குரோமாக்னன் என்ற இடத்தில் ஒரு குகையில் நடத்திய ஆராய்ச்சியில் பழங்கால மனிதனின் மண்டை ஓடுகளும் எலும்புகளும் கிடைத்தன. இந்த ஆராய்ச்சி 1868இல் நடந்தது. இந்த ஆண்டுக்குப் பிறகு 1947 வரை கண்டறியப்பட்ட அனைத்து மூதாதையரான மனித இனங்களை விடவும் இவனே காலத்தால் மிகவும் அண்மையன் என்ற உண்மையையும் கண்டறிந்தனர். அதாவது, இன்றைய மனிதர்களுக்குச் சுமார் முப்பது நாற்பது ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட மனிதன் இவன் என்று நிறுவினர்.



## நால்வேறு இனத்தவர் - குரங்குத் தாய்வழி வந்தவரே!

பல்வேறுபட்ட தோல் நிறங்களையும் நெட்டையும் குள்ளமுமான வேறுபட்ட உடலமைப்புக்களையும் கொண்ட மனிதர் வகைகளை உலகெங்கும் இன்று காண்கிறோம். இதை வைத்து நம் தொல்லியல் ஆய்வாளர்கள் மனிதர்களை நால்வேறு இனத்தவர்களாகப் பகுத்துக் கூறினார்கள். 1.நீக்ராய்டு, 2.ஆஸ்ட்ரலாய்டு, 3.மங்கலாய்டு, 4.காக்கசாய்டு என்று அவ்இனங்களுக்குப் பெயர்சூட்டினர். இந்தப் பகுப்பு உண்மையில், ஒரு கற்பனையானது என்றே கூறவேண்டும்.



மனிதக் குரங்கு இனத்திலிருந்தே படிப்படியாக மனிதன் தோன்றினான் என்ற உண்மையை அறிவியல்வழி அறிகின்றபோது, **உலக மனிதர்கள் எல்லாரும் ஒருதாய் மக்களே** என்ற உண்மை வெளிச்சமாகின்றது. நீக்ரோவர்க்கு உள்ளேயே கரி நிறத்தவரும் உண்டு; கோதுமை நிறத்தவரும் உண்டு. எல்லார்க்குள்ளும் எல்லா நிறங்களும் ஒளிந்து கிடக்கின்றன!





கறுப்பு நிறத் தம்பதியினர்க்கு இன்றும் (எந்தத் தவறும் நிகழாத போதே) வெள்ளைத்தோல் குழந்தை பிறப்பதைக் காண்கிறோம். இயற்கை விந்தையானது! ஆதியில் அத்தம்பதியரின் மூதாதையர்களுள் யாரோ ஒருவர் அந்த நிறத்தில் இருந்திருப்பார். ஜீன்ஸ் என்ற அணுவுக்குள் ஆயிரமாயிரம் ஆண்டு முன்னோடிகள் ஒளிந்துள்ளனர்!



குரங்கினம் என்ற ஒரே இனத்திலிருந்து வந்த மனிதர்களுள் நிற வேறுபாடு எப்படி வந்தது? உருவ அமைப்பிலும் வேறுபாடுகள் எப்படி வந்தன?... அறிவியல் ஆக்கம் புரியமுடியாத விந்தையானது!

மனித இனம் உருவான காலத்திலிருந்து, காலங்காலமாக மாறிவந்த தட்ப வெட்ப நிலைகளுக்கு ஏற்ப, பூமத்திய ரேகைப் பகுதியில் வாழ்ந்தவர்கள் உணவு தேடல் முதலிய காரணங்களால் சிறுகச் சிறுகத் துருவப் பகுதிகளுக்குக் குடிபெயர்ந்ததும், வெயிலே படாத பனிப்படலப் பகுதிகளில் பல்லாயிரம் ஆண்டுகள் வாழ்ந்ததால் வெள்ளைத் தோல் பெற்றதும் பிறகு, திரும்பவும் வெயில் பாங்கான மத்திய நிலப் பகுதிக்குக் குடிபெயர்ந்ததும், உணவு முறை வேறுபாடுகளாலும் இன்னபிற காரணங்களால் இந்த வேறுபாடுகள் நிகழ்ந்தன என்று உணரலாம். இக்கருத்தினை அறிஞர் பலரும் கூறியுள்ளது இதனை அரண்செய்யும்.

> வடபகுதியில் வாழும் நாள்களில் குளிரினாலும் பிற குளிர்நாட்டு மக்களுடன் கலந்ததாலும், குளிரைத் தடுக்க அணிந்த ஆடை அணிகளாலும், சுற்றுச் சார்புகளின் நிறத்தினாலும் அவர்கள் நிறம் மாறி வெள்ளை நிறத்தவர் ஆயினர்; பின்னர், சூட்டினால் கறுத்து, ஆடையணிகள் குறைவாக அணிந்திருந்த மக்களைவிடத் தம்மை உயர்வாக மதித்துக் கொண்டனர் ”

என்ற கருத்து எண்ணத்தக்கது.

# 6. முதல் மனிதன் - இந்தியன்... தமிழன்!



உலகில் முதல் மனிதனாகத் தோன்றியவன் இந்தியன்; அதிலும் குறிப்பாகத் திராவிடன் என்று கூறினால் அது பலருக்கு நம்பக் கூடியதாக இல்லை. தொல்லியல் ஆய்வில் நீக்ரோ இனத்தவரே முதல்வர் என்ற கருத்து வலுப்பெற்றுள்ளது. **நீக்ரோ இனத்தவரே ஆதி திராவிடர்** ஆவார். லெமூரியா கண்டம் என்ற ஒன்று இந்தியப் பெருங்கடலில் குமரிமுனையை ஒட்டி இருந்ததும், அது ஆப்பிரிக்காவைத் தன்னோடு இணைத்திருந்த உண்மையை நிலைநாட்டும் முயற்சிகள் உலகில் ஆங்காங்கே பல மூலைகளில் நிகழ்ந்து வருவதை இணையத்தளத்தினுள் (the unexplained mysteries.com/lostlands.html, blogspot.com, realhula.com) நுழைந்து பார்ப்பவர் அறிவர். லெமூரியா என்ற கண்டம் முன்பு இருந்தது பற்றி இணையத்தளம் தரும் படம் இது:



அறிஞர்கள் பலரும் தமிழ் மண்ணிலேயே முதல்-மனிதன் தோன்றினான் என்ற கருத்தை வலியுறுத்தியுள்ளனர். இது கவனத்தில் கொள்ளத் தக்கது. மொழிஞாயிறு ஞா.தேவநேயப் பாவாணர் இலெமூரியா என்னும் குமரிக் கண்டம் பற்றி நுட்பமாக ஆராய்ந்து கூறியுள்ள உண்மைகள் இங்கு எண்ணத்தக்கவை.

> இந்துமாவாரி ஒரு காலத்தில் சந்தாத் தீவுகளினின்று தொடங்கி, ஆசியாவின் தென்கரை வழியாய் ஆப்பிரிக்காவின் கீழைக்கரை மட்டும் பரவியிருந்த ஒரு நிலப்பரப்பாயிருந்தது. கிளேற்றர் இப் பழம்பெருங் கண்டத்தை, அதில் வசித்திருந்த குரங்கொத்த உயிரி (பிராணி) பற்றி இலெமூரியா (Lemuria) என்றழைக்கின்றார். இக்கண்டம் மாந்தனின் பிறந்தகமாயிருக்கக் கூடுமாதலின், மிக முதன்மையானது

என்றார் பேரறிஞர் எக்கேல்.

> ஒரு காலத்தில் தென்னாப்பிரிக்காவையும் இந்தியாவையும் இணைத்துக் கொண்டு ஒரு தொடர்ந்த நிலப்பரப்பிருந்தது

என்றார் அறிஞர் ஓல்டுகாம்.

> காட்டு எலியட்டு என்பவர் எழுதியுள்ள மறைந்த இலெமூரியா (Lost Lemuria) என்னும் நூலிலுள்ள நிலப்படத்திலிருந்து, ஒரு பெரும் மலைத்தொடர் மேலைக்கடலில் தொடங்கித் தென்வடலாகக் குமரி முனைக்குத் தென்பாலிருந்த நிலப்பகுதியில் நெடுந்தொலைவு சென்று, பின்பு தென்மேற்காகத் திரும்பி, மடகாசுக்கர் என்னும் ஆப்பிரிக்கத் தீவு வரை சென்றதாகத் தெரிகிறது

என்றார் பேரா. கா.சுப்பிரமணிய பிள்ளை.

> கடல்நூல் (Oceanography) என்னும் தற்காலக் கலை, ஒரு காலத்தில், தென் அமெரிக்காவினின்று ஆப்பிரிக்காவை யொட்டியும் இந்தியாவை யொட்டியும் ஆஸ்திரேலியா வரை படர்ந்திருந்ததும், 'காண்டுவானாக் கண்டம்' என்றறியப் பட்டதுமான, ஒரு முழுகிய வியனிலத்தைப் பற்றி, வியக்கத்தக்க வுண்மைகளை அண்மையிற் கண்டுபிடித்திருக்கின்றது

என்பது 29-07-1934ல் வெளிவந்த இந்திய விளக்கக் கிழமையிதழ்ச் செய்தியாகும்.

> கோடியாண்டுகட்குமுன் - ஒருவேளை அதற்கு முந்தி - ஒரு பெருங்கண்டம் ஆப்பிரிக்காவையும் இந்தியாவையும் இணைத்துக் கொண்டிருந்தது

என்றார் திருவாளர் யோவான் இங்கிலாந்து.

> இதுவரை உலகிற் கண்டெடுக்கப்பட்ட பழைய மாந்தன் எலும்புக் கூடுகளுள், சாலித் தீவில் (Java) 1891-ல் தூபாயிசு என்பவரால் எடுக்கப்பட்டதற்குரிய 'நிமிர்ந்த குரங்கு மனிதன்' (Pithecanthropos Erectus) காலம் கி.மு. 5,00,000 என்று கணிக்கப்பட்டுள்ளது. 1961-ல் தென்னாப்பிரிக்காவில் தங்கனியிக்காவில் இலீக்கி (Leakey) என்னும் ஆங்கில மாந்தநூ லறிஞராற் கண்டெடுக்கப்பட்டுள்ள ஈரெலும்புக் கூடுகளுள், ஒன்றற்குரிய 'கொட்டையுடைப்பான்' (Nut-cracker Man or Sinjanthropos Boisi) இற்றைக்கு 6,00,000 ஆண்டுகட்கு முற்பட்டவன் என்றும், இன்னொன்றற்கு உரிய, இன்னும் பெயரிடப்படாத, நனிமிகு முந்திய மாந்தன் குறைந்த பக்கம்

> 17,50,660 ஆண்டுகட்கு முற்பட்டவன் என்றும் கணிக்கப்பட்டுள்ளது. இதை அமெரிக்க மாந்தநூற் பேராசிரியர் சிலர் மறுத்துள்ளனர். உண்மை எஞ்ஞனமிருப்பினும், சாலித் தீவையும் தென்னாப்பிரிக்காவையும் தன்னுடன் இணைத்துக் கொண்டிருந்த நாடே குமரிக்கண்டமாதலின் அந் நிலத்து மாந்தன் தோற்றம் கி.மு. 5,00,000 ஆண்டுகட்கு முந்தியதென்று மறுப்பச்சமின்றிக் கூறலாம். [100]

தேவநேயப் பாவாணர் குறிப்பிட்ட மாந்தநூலறிஞராற் கண்டெடுக்கப் பட்டுள்ள ஈரெலும்புக் கூடுகளும் கொட்டையுடைப்பான் மனிதனின் படமும் கீழே தரப்பட்டுள்ளன.



பன்மொழிப் புலவர் கா.அப்பாத்துரை,

> திருநெல்வேலிக் கோட்டத்தைச் சேர்ந்த ஆதிச்சநல்லூர் முதலிய இடங்களில் மிகப் பழைமையான மனித எலும்புக் கூடுகளும் தலை ஓடுகளும் கண்டெடுக்கப்பட்டுள்ளன. இவற்றை நுணுகி ஆராய்ந்த அறிஞர் இவையே உலகின் மற்றெந்தப் பகுதிகளில் எடுக்கப்பட்ட எலும்புக் கூடுகளையும்விடப் பழமை வாய்ந்தவை என்றும், பெரும்பாலும் இவையே மனிதத் தோற்றத்தின் தொடக்கக் காலத்தைச் சார்ந்தவையாயிருக்கக் கூடுமென்றும் அறிவிக்கின்றனர் [101]

என்பர்.

அவரே, மனித நாகரிகப் பழமை வகையிலும் மிகச் சிறந்து விளங்குவது நடுக்கோட்டுப் பகுதியே (Equatorial regions) என்ற கருத்தை வலியுறுத்திப் பின்னர், ஆப்பிரிக்காவில் பெருவழக்காக உள்ள ஒருவகைப் புளிய மரம் உலகில் வேறு எங்குமே இல்லாமல், தமிழ்நாட்டின் தெற்குப் பகுதியில் நாகர்கோவில் வட்டத்தில் சீமைப்புளி, பப்பரப்புளி, யானைப்புளி எனப் பலபெயர்களால் அழைக்கப்படுவதை எடுத்துக்கூறி,

> இன்னும் செடி கொடி மர வகைகளுள் தேக்கு, தென் இந்தியாவுக்கும் ஆப்பிரிக்காவுக்கும்; புளி சாவகத்திற்கும் (Java) இந்தியாவிற்கும்; தென்னை இந்தியா, இலங்கை, மேலனேசியா என்பவற்றிற்கும்; கரும்பு சீனம், இந்தியா, சாவகம் என்பவற்றிற்கும்; நெல் இந்தியாவிற்கும் பர்மாவிற்கும் சீனத்திற்கும் ஜப்பானிற்கும் சாவகத்திற்கும் பொது உரிமையாய் இருக்கின்றமை காண்க. ஆப்பிரிக்காக் கண்டமும் இந்தியாவும் பெரிதும் ஒத்திருப்பதிலிருந்து

> இலெமூரியாக் கண்டம் ஆப்பிரிக்காவையும் இந்தியாவையும் இணைத்திருக்க வேண்டும் என்பதும் விளங்கும் [102]

என்று கூறுவது கருதத்தக்கது.

தென்னிந்திய மக்களில் பலர் ஆப்பிரிக்க நாட்டு நீக்கிரோவர்களின் சாயலை ஒத்திருப்பதாக ஆய்வுகள் கூறுகின்றன. ஆதித் திராவிடர்கள் ஆப்பிரிக்காவில் குடியேறியதன் விளைவாக இது நேர்ந்தது என்று அறிஞர் கருதுவர். ஆதி கிரேக்கர்கள் ஆப்பிரிக்க நீக்ரோக்களையும் இன்றைய மலபார் திராவிட தலித்களையும் ஒரே இனத்தவர் என்றே கருதினர். [The ancient Greeks considered the Africans and Sudras (modern Dalits and Dravidians) as belonging to the same 'Ethiopian' stock. 'Ethiopian' was the Greek word for 'Negro', and Greek authors referred to the Sudroids as 'Eastern Ethiopians' and to Sudroids as 'Eastern Ethiopians' (ie. Eastern Negroes) [cf. Herodotus. VI. 70] [103] இதற்குரிய மலபார் கேரளத் தலித் மக்கள் புகைப்படத்தையும் இணையத்தளத்தில் தந்துள்ளனர்.



திராவிடர்களின் நிறம் கருப்பு (மாமை - மாயோன், மாயோள்) ஆகும். இவ்வுண்மையைச் சங்க இலக்கியங்களில் பரவலாகக் காணலாம்.

"மாயோன் மேய காடுறை உலகமும்" (தொல். அகத்.5)

"மாயோன் மேய மன்பெருஞ் சிறப்பின்" (தொல். புறத்.5)

"மாயோள் முன்கை ஆய்தொடி கடுக்கும்" (பொருந.14)

"மாயோன் மேய ஓண நன்னாள்" (மதுரைக்.591)

"மாயோன் அன்ன மால்வரைக் கவாஅன்" (நற்.32)

"மாயோள் பசலை நீக்கினன் இனியே" (ஐங்.145)

'மாயோள்' என்றால் கருநிறத்துப் பெண் என்பது பொருள். கருநிறத்துத் திராவிடத் தலித் மகளிரும் நீக்ரோ பெண்ணும் ஒரே சாயலையுடையவர்.



தலித் பெண்



நீக்ரோ பெண்

திராவிட இனத்திலிருந்து கிளைத்தவர்களே ஆப்பிரிக்க நிக்ரோவர் என்று கே.கே.பிள்ளை பின்வருமாறு கூறுவது இங்கே சிந்திப்பதற்குரியது.

> தென்னிந்தியாவிற்குத் தெற்கில் அமைந்திருந்த லெமூரியாவிற் றான் முதன்முதல் மக்களினம் தோன்றிற்று எனவும், அவ்வினமே தமிழ்நாட்டின் ஆதிகுடிகள் எனவும் லெமூரியாக் கொள்கையினர் கருதுவர். லெமூரியக் கண்டத்தில் வாழ்ந்துவந்த மக்களின் வழிவந்தவர்கள் இப்போது தென்னிந்தியாவிலும் இலங்கையிலும் கிழக்கிந்தியத் தீவுகளிலும் வாழ்ந்து வருகின்றார்கள். இவர்களிடம் இன ஒற்றுமை, மக்கள் உடல்கூறு ஒற்றுமை, மொழி அமைப்பு ஒற்றுமை ஆகியவை பல காணப்படுகின்றன. நியூஜிலாந்தில் வாழும் ஆதிகுடிகளான மேவோரி மக்களும், இத்தீவைச் சுற்றிலும் சிதறுண்டு கிடக்கும் சிறுசிறு தீவுகளில் வாழும் மக்களும் பேசும் மொழிகளுக்கும் தமிழுக்கும் ஒரு தொடர்பு உண்டு. இஃதன்றி, தென்னிந்திய மக்களுள் சில குலத்தினரும் மரபினரும் போற்றும் வழிபாட்டுச் சின்னங்களையும் அவர்களுள் கள்ளர்கள் என்பார் எய்யும் 'பூமராங்' என்னும் மீண்டுவரும் வேட்டைக் கத்தியையும் இந்தோனேசியாவிலும் பாலினீசியாவிலும் வாழும் ஆதி குடிகளிடம் காணலாம். மேலும் போர்னியா தீவின் ஆதிகுடி மக்களான டையாக்குகளும் ஆனைமலையின் பழங்குடிகளான காடர்களும் மரமேறும் முறை ஒரே விதமாக உள்ளது. இக் காடர்களும் தென்னிந்திய ஆதிகுடிகளுள் மற்றோர் இனத்தவரான மலைவேடர்களும் தம் முன்பற்களைத் துணித்துக் கொள்ளும் வழக்கம் ஒன்று உண்டு. மலேசிய நாட்டினரான ஜூகுன்களும் இப்பழக்கத்தை மேற்கொண்டுள்ளனர். மற்றும் <u>தென் ஆப்பிரிக்க வாசிகளான நீக்குரோவர்களின் சாயை தென்னிந்திய ஆதிகுடிகள் சிலரிடம் தோற்றமளிக்கின்றது.</u> பண்டைக் காலத்தில் இந் நீக்குரோவர்களுக்கும் தென்னிந்தியருக்கும் தென்கிழக்கு ஆசியத் தீவினருக்குமிடையே தொடர்ந்த போக்குவரத்தும் இனக் கலப்பும் ஏற்பட்டிருக்க வேண்டும். லெமூரியாக் கண்டம் இருந்ததற்கும், <u>அந்தக் கண்டத்தில் வாழ்ந்த ஆதி மக்கள்வழி வந்தவர்களே தமிழர்கள்</u> என்பதற்கும் மேலே கொடுத்த சான்றுகள் ஆதரவாகக் காட்டப்படுகின்றன [104]

என்பர்.

இதனால், உலகில் முதலில் தோன்றிய மனித இனம் - கறுத்த தமிழர் இனமே என்பதையும், லெமூரியாவில் தோன்றிய தமிழர் இனத்திலிருந்து கிளைத்துச் சென்றவர்களே நீக்ரோவர் என்பதையும் உணரலாம்.

## இலெமூரியாவை விட்டுப் பரவிய தமிழர்

மனித இனம் தோன்றி இலெமூரியாக் கண்டத்தை விட்டும் வடக்கே சென்ற பழந்தமிழர், இயற்கையின் மாற்றங்களாலும் உணவுத் தேடலின் அவசியத்தாலும் இடம்பெயர்ந்து ஆப்பிரிக்காக் கண்டத்திற்குப் பரவினர்.

> இமயத்தின் தெற்குப் பகுதியில் மனிதனின் வழித்தோன்றல்கள் காலநிலையில் குறிப்பாகப் பனிப்பாறைச் சரிவுகளில் ஏற்பட்ட பெரிய மாறுதல்களால் மெதுவாக இடம்பெயர்ந்து இன்றைய ஆப்பிரிக்கக் கண்டத்திற்குக் குடிபெயர்ந்தனர்.

> இதுமான தட்ப வெப்ப நிலைகள் இருந்ததால், அங்கேயே நிலைகொண்டு வாழத் தொடங்கினர். அப்போது சகாரா, கலகாரி பாலைவனங்கள் இன்றுபோல் அல்லாமல் பூத்துக் குலுங்கும் காடுகளுடனும் அலைமோதும் ஏரிகளுடனும் சலசலக்கும் சிற்றாறுகளுடனும் செழித்திருந்தன. [105]

இதனால், முதல் மனிதனின் வழித்தோன்றல்கள் இமய மலையின் தெற்குப் பகுதியில் பரவியிருந்ததையும், அவர்களில் பலர் அங்கிருந்து ஆப்பிரிக்காவிற்குக் குடிபெயர்ந்த உண்மையையும் அறியலாம். ஆப்பிரிக்கக் கண்டத்திற்குக் குடிபெயர்ந்தவர் போக எஞ்சிய பழந்தமிழர் சிந்து, கங்கை நதிக் கரைகளில் வாழ்ந்தனர்.

அப்போது அமெரிக்கா, ஆஸ்திரேலியாக் கண்டங்களில் ஆதிமனிதர் வாழ்ந்திருக்கவில்லை.

> சமீப காலங்களிலேயே - பத்து அல்லது பதினைந்தாயிரம் ஆண்டுகளுக்கு உள்ளாகத்தான் மனிதன் நீர்வழியாக இக்கண்டங்களுக்குச் சென்றிருக்க வேண்டும் [106]

என்பர்.

தென்ஆப்பிரிக்கா, மடகாஸ்கர், இந்தியா, ஆஸ்திரேலியா, அண்டார்டிக், தென்அமெரிக்கா முதலிய பகுதிகள் பலியோசோயிக் காலத்தில் ஒருங்கே இணைந்திருந்தன. கிரிட்டேஷியஸ் காலத்தின் இறுதியில் ஆப்பிரிக்கா, இந்தியா, ஆஸ்திரேலியா ஆகிய பகுதிகள் முற்றிலுமாகப் பிரிந்து சென்றன என்பர். இதனால், பழந்திராவிட மக்களில் கலந்திருந்து, பின் பிரிந்துவந்த மக்களே தென்ஆப்பிரிக்க நீக்ரோவர் என்று தெளியலாம். [107]

ஒரே இனத்திலிருந்து பிரிந்த மக்களே எல்லோரும், நன்மையும் தீமையும் அனுபவித்து அவற்றை எதிர்கொண்டு வாழ்ந்த பட்டறிவாலேயே,

> யாதும் ஊரே யாவரும் கேளிர்
> தீதும் நன்றும் பிறர்தர வாரா (புறம்.192)

என்று பாடினான் பழந்தமிழ்ப் புலவன்.

## உலகம் முழுதும் இலெமூரியத் தமிழர்

இந்துமாக் கடலில் இருந்த இலெமூரியாக் கண்டம் கடல்கோளால் அழியத் தொடங்கிய காலத்தில், அங்கே தோன்றி வாழ்ந்துவந்த பழந்திராவிடர் குமரிக்கண்டம் என்ற பகுதிக்குக் குடிபெயர்ந்தனர். குமரிக் கண்டமும் கடல்கோளால் சிதறுண்டு போக, அங்கிருந்து இஸரேலுக்குச் சென்றவர்கள் யூதர்கள் ஆனார்கள்; எகிப்துக்குச் சென்றவர்கள் சுமேரியர் ஆனார்கள்; கங்கை பாயும் கொல்கத்தாப் பக்கம் சென்றவர்கள் சோழர்கள் எனவும், சிந்துசமவெளியில் குடியேறியவர்கள் சேரர்கள் எனவும், தெற்குப் பகுதியிலே தங்கிவிட்டவர்கள் பாண்டியர்கள் எனவும் ஆனார்கள். அடுத்தடுத்து நடந்த ஆரியப் படையெடுப்புக்களால் கங்கைப் பகுதியிலிருந்த சோழர்களில் பெரும்பகுதியினரும், சிந்துநதிப் பகுதிச் சேரர்களில் பெரும்பகுதியினரும் பாண்டியர் ஆட்சிக்கு உட்பட்ட தெற்குப் பகுதிக்கே வந்து சேர்ந்தனர் என்பர்.[108]

## திராவிடர்களின் சிந்துசமவெளி நாகரிகம்

வடக்கே சிந்து சமவெளியில் இன்றைக்குச் சுமார் 6000 ஆண்டுகளுக்கு முன்னால் வாழ்ந்தவர்கள் தமிழர்; மொகஞ்சதாரோ, ஹரப்பா ஆகிய இடங்களில் அகழ்வாராய்ச்சி நடத்திய முடிவுகள்வழி இவ்வுண்மையை உருஷிய நாட்டவர் கூறுகின்றனர்.[109]



1922இல் இந்திய வடபகுதியில் ஓர் அகழ்வாராய்ச்சியை உலகத் தொல்லியல் துறை நடத்தியது. இன்றைக்குப் பாக்கிஸ்தானில் உள்ள சிந்து மாநிலத்தில் மொகஞ்சதாரோ மற்றும் இதன் வடக்கே மேற்குப் பஞ்சாபில் உள்ள ஹரப்பா ஆகிய இடங்களில் தோண்டி எடுக்கப்பட்ட தடயங்களைக் கொண்டு, அங்கே வாழ்ந்த மக்களின் காலம் கி.மு. 2,500 முதல் கி.மு. 1,500 என்று கணக்கிட்டுள்ளனர். இன்றைக்கு 4,500 ஆண்டுகளுக்கு முந்திய தடயம் அது என்பதால், அந்நாகரிகம் தோன்றி வளர்ந்துவந்த காலம் அதற்கும் சில நூறு ஆண்டுகளுக்கு முன் - இன்றைக்குச் சுமார் 6,000 ஆண்டுகளுக்கு முந்திய நாகரிகம் அது எனக் கருதலாம். அந்த இடம் ஓர் உயர்ந்த நாகரிம் அடைந்த மக்களின் குடியிருப்பு என்றனர். உலகக் கட்டுமானக் கலையில் மொகஞ்சதாரோ நகரின் கட்டுமானத்தோடு ஒப்பிடும்போது, பிரமிடுகளைக் கட்டிய எகிப்தியர்களின் நகரக் கட்டுமானக் கலை மிக அற்பமானது என்பர்.

> சுமேரியா, ஆக்கேட், பாபிலோனியா ஆகியவற்றில் செங்கற்களால் கட்டப்பட்ட நகரங்கள் கிட்டத்தட்ட சிந்து வகையுடன் பொருந்து கின்றன; ஆனால், அவை தாமாகவே வளர்ந்தவை. திட்டமிடப்பட்டு உருப்பெற்றவையன்று. அங்கெல்லாம் தோன்றிய தெருக்கள் ரோம், லண்டன், பாரிஸ் மற்றும் இந்தியாவின் பிற்கால நகரங்களிலும் தோன்றியதைப் போலவே, நேர்பாடற்ற நாட்டுப்புறத் தடங்களைப் பின்பற்றியே எழுந்தன. ஆயின், சிந்து சமவெளி நகர அமைப்பு உண்மையில் பிரமிப்பூட்டுகிறது. நேர் நேராகக் கோடுகளைக் கிழித்தாற் போல வரிசைவரிசையான தெருக்களுடன், மழைநீரை வெளியேற்றும் ஒப்பற்ற வடிகால் அமைப்பும், கழிவுநீரை வெளியேற்றும் சாக்கடைத் தொட்டிகளும் அந்நகர அமைப்பின்கீழ் இடம்பெற்றிருந்தன. இந்த நவீன காலம்வரை தோன்றிய எந்த இந்திய நகரமும் இந்த அளவுக்கு எந்த வசதிகளையுமே பெற்றிருக்கவில்லை[110]

என்று டி.டி.கோசாம்பி இதனைப் பாராட்டுகின்றார். சிந்துவெளி மக்களின் நாகரிக வளத்தைக் காட்டும் அழுத்தமான சான்றாக அத்தடயங்கள் விளங்குகின்றன.

அங்கே வாழ்ந்த மக்களைத் திராவிடர் என்பர் சிலர்; ஆரியர்கள் என்று கூடச் சிலர் கருத்துத் தெரிவித்தனர். அக்கருத்து வலுப்பெறவில்லை.

சிந்துவெளியில் குதிரைச் சின்னம் இருப்பதாக எஸ்.இராஜாராமன் என்பார் ஒரு குதிரைப் படத்தை எடுத்துக்காட்டி நிறுவினார். உண்மையில், கி.மு. 1700க்கு

முன்னால் இங்கே குதிரைகளோ ரதங்களோ இருந்ததில்லை. சிந்து சமவெளியில் மட்டுமின்றி இந்தியப் பகுதியில் வேறெங்கிலும்கூட கி.மு. 2000க்கு முந்தைய காலத்தைச் சேர்ந்த குதிரை எலும்புக்கான ஐயமற்ற ஆதாரம் ஒன்றுகூடக் கிடைக்கவில்லை எனத் தொல்லியல் அறிஞர் நிறுவுகின்றனர். கடைசியில், **M.772A** **என்ற ஒற்றைக்கொம்புக் காளையை ராஜாராமன் முதலியோர் 'கிராஃபிக்ஸ்' செய்து 'குதிரை'யாக மாற்றிய மோசடியே அது** என்று நிரூபணம் ஆனது என்பர்.[111]


Figure 7.1a: The 'Horse Seal' (Mackay 453)


Figure 7.1b: The 'Horse Seal' (Artist's reproduction)


M.772A காளை

ஆரியர்கள் கி.மு. 2500-க்குப் பின்னரே ஈரான், ஆப்கானிஸ்தான் வழியாக இந்தியாவிற்குள் வந்த அயல் தேசத்தவர் என்பது நிரூபிக்கப் பட்டுள்ளது. ஆரியரின் பூர்விகம் பனிப்பிரதேசமான வடதுருவப் பகுதி என்பர் பாலகங்காதரத் திலகர்.

> சூரியன் பல நாட்கள் கழித்து உதித்தான் என்கிற ரிக் வேத (1-76) சுலோகத்தை ஆதாரமாக்கி ரிக் வேத ஆரியர்களின் பூர்வ தாயகம் துருவப் பிரதேசமாக (ஆர்டிக்) இருக்க வேண்டும் என்று திலகர் கருதினார் என்பர்.[112]

கி.மு.1500ஆம் ஆண்டளவில்தான் ஆரியர்கள் இந்துகுஷ் மலையிலுள்ள கணவாய் வழியாக இந்தியாவை அடைந்தனர் என்றும், ஆரம்பக் காலத்தில் புல்வெளிகளைத் தேடி அவர்கள் பஞ்சாபில் அலைந்து நடந்தனர் என்றும், பின்னர்தான் அவர்கள் சிறிய கிராமங்களாக வாழத் தொடங்கினர் என்றும் புகழ்பெற்ற பெண் வரலாற்றாசிரியர் ரொமிலா தாபர் கூறுகின்றார். [113]

வள்ளத்தோளின் 'ரிக் வேத சம்ஹிதை' என்ற நூலின் முன்னுரையில் சர்தார் கே.எம்.பணிக்கர் எழுதிய குறிப்புக்களின் அடிப்படையில்,

> ஆரியர்கள் முதலாவதாக கி.மு. 2500ஆம் ஆண்டளவில் இந்தியாவுக்கு வந்திருக்க வேண்டுமென்று மொகஞ்சதாரோ தடயங்களின் மூலம் தெரிகின்றது. கி.மு. 1500 அளவில் பஞ்சநதத்துக்கு அப்பாலுள்ள ரூபார் முதலிய பிரதேசங்களில் ஹரப்பா நாகரிகம் வீழ்ந்ததற்கான சான்றுகள் உள்ளதாலும் ஆரியர்கள் அங்கே புகுந்து நிலையாகத் தங்கிவிட்டதற்கான தடயங்கள் கிடைத்திருப்பதாலும், கி.மு. 2500ஆம் ஆண்டளவில் ஆரியர்கள் இந்தியாவுக்கு வந்தனரென்றும், கி.மு. 1500 அளவில் அவர்கள் புகழ்பெற்ற தஸ்யூக்களை அடக்கி பஞ்சநதத்தை வென்று யமுனைக் கரையை அடைந்தனர் என்றும் நிர்ணயிக்கலாம்[114]

என்பர் ஜோசப் இடமருகு.

ஆரியப் பண்பாடு குறித்துப் பேசும் டி.டி.கோசாம்பி,

> கி.மு. மூன்றாவது ஆயிரமாண்டுக் காலத்தின் பெருநகரப் பண்பாடுகளுடன் ஒப்பிடும் போது ஆரியர்கள் நாகரிகமற்றவர்கள்; அவ்வுயர்ந்த பண்பாடுகளை அவர்கள் தாக்கியதோடு மட்டுமல்லாமல், அநேகத் தடவைகள் சின்னாபின்னமும் செய்துள்ளனர் [115]

என்று கூறுவது, **சிந்துசமவெளி நாகரிக அழிவுக்கு ஆரியர்களே காரணம்** என்ற கருத்தை மறைமுகமாகச் சுட்டுவதாக உள்ளது.

அவரே பிறிதோரிடத்தில் மொகஞ்சதாரோவின் அழிவைப் பேசும்போது,

> மொஹஞ்சோதாரோவில் அந்நகரம் தீக்கிரையானது. குடிமக்கள் வெட்டிக் கொல்லப்பட்டனர். ... பண்டைய சம்ஸ்கிருத வேதத்தில் கூறப்பட்டுள்ள உருவகங்கள் யாவும் உண்மையோவென எண்ணத் தோன்றும். பகைவர்களைப் பற்றிக் கூறும்போது, போர்க்களத்தில் மிகவும் இரக்கமற்ற முறையில் அடித்து நொறுக்கப்பட்டனர் என்றும், அவர்களுடைய செல்வங்கள் சூறையாடப்பட்டன என்றும், நகரங்கள் கொளுத்தப்பட்டன என்றும் அந்நூல் (வேதம்) விவரிக்கின்றது [116]

என்பதும் கவனிக்கத்தக்கது. இதனால், சிந்துசமவெளி நாகரிகத்தைச் சிதைத்து அழித்தவர்கள் ஆரியர்களே என்பது தெளிவாகும். ஆரியர்களுக்கு எதிரிகளாக இருந்தவர்களே சிந்துசமவெளி நாகரிக மக்கள் என்பதும் தெளிவு.

ரிக் வேதத்தில் 'தஸ்யு' (தாசன் - அடிமை; பணியாள்) என்று சுட்டப்படும் மக்கள் திராவிடர்களே என்பர். இச்சொல் ரிக் வேதத்தில் எண்ணற்ற இடங்களில் வந்துள்ளது. இந்திரன் தன் 'வஜ்ராயுதம்' எனப்பட்ட இரும்பினால் செய்யப்பட்ட (அன்றைய) நவீன ஆயுதத்தின் வலிமையால் தஸ்யுக்களை அழிக்க ஆரியர்களுக்கு உதவினான். அதற்குப் பதிலியாக ஆரியர்கள் இந்திரனுக்கு உயர்ந்த வகைக் குதிரைகளையும் தேர்களையும் சோமபானம் என்னும் கஞ்சாச் செடியிலிருந்து காய்ச்சி வடிக்கப்பட்ட போதைதரும் மதுபானத்தையும் பரிசாக அளித்தனர். இச்செய்தி ரிக் வேதத்தில் பரவலாகக் காணப்படுகிறது.

> போர்களிலே இந்திரன் தேரிலே தன் குதிரைகளை இணைப்பதற்கு முன்பே பகைவர்கள் ஓடுகிறார்கள்; அவனைப் பாடுங்கள். [117]
>
> சோமத்தைப் பருகி இந்திரனுடைய வயிறு கடல்போல் பரவுகிறது. [118]
>
> இந்திரனே! நீ, அவர்கள் (தஸ்யுக்கள்) அழுதாலும் சிரித்தாலும் அவர்களை வானின் கடையெல்லையிலே வீழ்த்திச் செலுத்தினாய். நீ சோதியிலிருந்து தஸ்யுவைத் தள்ளித் தகித்தாய்.[119]

தஸ்யுக்கள் கருப்பு (கிருஷ்ண) நிறத்தவர்கள்; செல்வந்தர்களாக இருந்தார்கள்; வீரத்தில் அசுரர்களைப் போன்ற வலியவர்களாக விளங்கினர். அதனால் இந்திரன் அவர்களை அழிக்கப் பல உத்திகளைக் கையாள வேண்டியிருந்தது. தஸ்யுக்களோடு பகலில் போரிடாமல், கருக்கல் இருட்டில் வந்து இந்திரன் அவர்களைத் தாக்கிச் சூரிய உதயத்தின்போது கொன்றொழித்தான். அவர்களின் இரும்பு போன்ற உறுதிவாய்ந்த

கோட்டைகளை இடித்து, தஸ்யுக்களை அழித்தவன் வச்சிராயுதனான இந்திரன். இது ரிக் வேதத்தில் பல இடங்களில் சொல்லப்பட்டுள்ளது. உதாரணத்திற்குச் சில காட்டுவோம்.

அவன் (இந்திரன்) துன்புறுத்துபவரின் (தஸ்யுக்களின்) **கருப்பான சருமத்தைக்** கிழித்தான். **அசுரனான கிருஷ்ணனின் கருப்பான சருமத்தை** உரித்தான்.[120]

இந்திரனே! நீ, **செல்வந்தனான தஸ்யுவை** கனத்த வச்சிராயுதத்தால் கொன்றாய்.[121]

அவர்கள் (தஸ்யுக்கள்) **பொன்னாலும் நகைகளாலும்** தங்களை அலங்கரித்துக் கொண்டு புவியிலே எங்கும் பரவியிருந்தார்கள். **மிக்க வலியர்களான அவர்கள்** இந்திரனை வெல்ல இயலவில்லை. அவன் **அவர்களைச் சூரியோதயத்தோடு கலைத்தான்.**[122]

அவன் (இந்திரன்) தஸ்யுக்களைக் கொன்றான். **அவன் அவர்களுடைய இரும்புக் கோட்டைகளை இடித்தான்.**[123]

திராவிடர்களது நாகரிக வளமான சிந்துசமவெளியை அழித்தவர்கள் ஆரியர்களே.

செல்வத்திற்காகவும் அதிகாரத்திற்காகவும் நடைபெற்ற கடுமையான போர்களைப் பற்றி ரிக் வேதமே அதிகமாகத் தெரிவிக்கின்றது. இந்தப் போர்களின் முடிவில் தஸ்யூக்கள் தோல்வியடையவும், ஆரியர்கள் சிந்துசமவெளியில் முழுமையான ஆதிக்கத்தை நிலைநாட்டவும் செய்தனர். ரிக் வேதத்தில் கூறப்பட்டுள்ள தஸ்யூக்களையும் அவர்களது நாகரிகத்தையும் அழித்த ஆரியர்கள் போர்களில் மிகவும் உற்சாகம் காட்டிய இனத்தவராவர்[124]

என்பர்.

போரில் அடிமைகைளாக ஆக்கப்பட்ட திராவிடர்களின் பெண்களை ஆரியர்கள் தங்களின் ஆசைநாயகிகளாகவோ அல்லது மனைவிய ராகவோ வைத்துக் கொண்ட காரணத்தால், அந்தத் திராவிடகுலப் பெண்கள் வழியாகவே திராவிட மொழிச் சொற்கள் பல பழைய சமஸ்கிருதத்தில் கலந்தன என்று கூறுவர்.[125]

சிந்து சமவெளி மக்கள், திராவிட இன மக்களே என்பது உறுதிப்பட்ட கருத்தாகும்.

வட இந்தியாவில் வாழ்ந்த மொகஞ்சதாரோ மக்கள் திராவிட மொழியையே பேசினார்கள். அவர்கள் பயன்படுத்திய சொற்கள் பெரிதும் தமிழிற் காணக் கிடக்கின்றன. இப்பொழுது வழங்கும் மொழிகள் எல்லாவற்றுள்ளும் தமிழ் மிகப் பழமையுடையது என்னும் கொள்கையை இது வலியுறுத்துகின்றது

("Being Dravidians, the inhabitants of Mohanjo Daro in Northern India naturally spoke a Dravidian language in which the largest proportion of the words used are found in Tamil. This confirms the common belief that Tamil is the oldest of the present languages.")

என்ற **ஹீராஸ் பாதிரியாரின்** கருத்தை மேற்கோளாக எடுத்தாண்டு கா.சுப்பிரமணிய பிள்ளை,

> மொகஞ்சதாரோ என்னும் இடத்தில் சுமார் 6,000 ஆண்டுகளுக்கு முன் வழங்கிய மொழி, தமிழ்ச் சொற்கள் நிறைந்துள்ளதெனப் பாதிரியார் ஹீராஸ் கூறுகின்றார் [126]

என்பர்.

'பிராகுயி' என்ற திராவிட மொழி பேசும் பழங்குடி மக்கள் இன்றும் அங்கே இருப்பது இக்கருத்தை வலியுறுத்திற்று.




மேலும், திராவிடர் நாகரிகமான தாய்த்தெய்வ வழிபாட்டின் தடயங்கள் சிந்துசமவெளியில் நிறையக் கிடைத்துள்ளன.

> மொகஞ்சதாரோவிலும் ஹரப்பாவிலும் அவர்கள் வழிபட்ட அம்மன் தேவதையின் பல சிலைகள் கிடைத்துள்ளன[127]

என்பர்.



> ஆரியப் பழங்குடி அமைப்பு தந்தைவழி மரபை அடிப்படையாகக் கொண்டது. பழங்குடி ஆரியர் சமூகத்தில், ஆணே ஆதிக்கம் பெற்றுச் சொத்தாளும் உரிமையையும் பெற்றிருந்தான். முற்பட்டு நிற்கும் ஆரியக் கடவுள்கள் யாவும் ஆண்களே [128]

என்பது கவனத்தில் கொள்ளத்தக்கது.

சிந்துசமவெளி மக்கள் தாய்வழிச் சமுதாயத்திலிருந்து தந்தைவழிச் சமூகத்திற்கு மாறிய காலத்தவர்கள். தாய்வழிபாடு இருந்த அதே நேரத்தில் அவர்களிடம் இலிங்க வழிபாடும் இருந்ததைச் சிந்துசமவெளி அகழாய்வுச் சின்னங்கள் நிறுவுகின்றன. இனப் பெருக்கத்தின் குறியீடாகப் (fertility symbolism) பெண்குறியை (யோனியை) ஆரம்பத்தில் தெய்வமாக வணங்கினார்கள்; பின்னர் ஆண்குறியையும் சேர்த்து வழிபடும் வழக்கம் உருவானது.





திராவிடர்களுடைய இலிங்க வழிபாட்டினை ஆரியர்கள் கேவலமாகக் கருதினர். ரிக் வேதத்தில் இதுபற்றிய குறிப்பு உள்ளது. "சிசன தேவர்கள்" [129] என்று தஸ்யுக்களைக் குறித்த தொடர், ரிக் வேதத்தில் வந்துள்ளது இதற்குச் சான்று.

> **சிஷ்னதேவர்** என்றால் ஆண்குறியை தேவனாகக் கருதிப் பூஜிப்பவர்கள். **பூஜிக்கப்பட்ட கல்லாலான ஆண்குறிகள், சமவெளி தாசர்களின் புராதன நகரங்களான மொகஞ்சதாரோ, ஹரப்பாவில் கிடைத்துள்ளன**[130]

என்பார் ராகுல சாங்கிருத்தியாயன்.

பழந்திராவிடர்களின் இலிங்க வழிபாட்டினை ஆரியர்கள் பிற்காலத்தில் தங்களது வழிபாடாக மாற்றிக் கொண்டனர். திராவிடர்களின் மாற்றமுடியாத வழக்குகளோடு ஒத்துப்போய் அவர்களை அடிமையாக்கும் தந்திரத்தை ஆரியர்கள் கையாளத் தொடங்கியதன் அடையாளங்கள்தான், திராவிடக் கடவுள்களைத் தங்கள் கடவுளாக்கிக் கொண்ட மாற்றம் ஆகும்.

வேதத்தில் கூறப்பட்டுள்ள தெய்வங்களான பிரஜாபதி, பிருதிவி, வருணன், பர்ஜயன், இந்திரன் முதலிய கடவுள்கள் காணாமல் போயினர். திராவிடர்களின் கறுப்பு நிறத்துக் கடவுள்களான கிருஷ்ணன், இராமன் என அனைவரும் ஆரியக் கடவுள்களாக மாற்றம் பெற்றனர்.

> ஆரியர்களுடைய வருகைக்கு முன்பு இந்தியாவிலிருந்த மக்களுடைய அம்மன் வழிபாட்டு முறை, பிற்காலத்தில் அவர்களிடம் கலந்ததாகக் காணலாம். தேவி பாகவதத்தில் பூமிதேவியின் தோற்றம், தாம்பத்திய வாழ்க்கை, குழந்தைகள் எனப் பலவற்றையும் பற்றி விவரித்துக் கூறக் காணலாம். அதுதான் பகவதி, காளி, துர்க்கை, பார்வதி, சீதளா தேவி, லட்சுமி முதலிய பல பெண் தேவதைகளை பிற்காலத்தில் தோன்றியுள்ளன. ஆனால், அவற்றைப் பற்றி எதுவும் வேதங்களில் சொல்லப்படவில்லை[131]

என்னும் ஆய்வாளர் கருத்து இதனை அரண்செய்யும்.




உண்மையில் பசுவையும் காளையையும் தெய்வமாகப் போற்றியவர்கள் பழந்தமிழர்தான். சிந்துசமவெளிப் பசு, காளைச் சின்னங்கள் இதற்குச் சான்று.

திராவிடர்களைப் பார்த்தே பசுவைக் 'கோமாதா' என்று ஆரியர்களும் பின்னர்ப் போற்றி வழிபடத் தொடங்கினர். ஆனால், சிந்து சமவெளிக்குப் பிற்பட்ட வேத காலத்தில் ஆரியர்கள் பசுவைக் கொன்று தின்றனர்.

பசுவதை கூடாது என்று இன்றைக்கு வலியுறுத்தும் ஆரியர்களின் வேதத்தில் பசுவைக் கத்தியால் வெட்டுவது வருணிக்கப்பட்டுள்ளது. (ரிக் வேதம்: 10-79-6).

ஆநிரைகளைப் போலக் குதிரைகளை வளர்த்துவந்த ஆரியர்கள், குதிரையை அறுத்து வேகவைத்து மணத்துடன் உண்டனர். அதன் மாமிசத்தைத் தம் உறவினர்க்கும் யாசகமாய் அளித்தனர்.

> குதிரை பாகமாவதைப் பார்த்து - பக்குவப்படுவதைப் பார்த்து - வாசனை வீசுகிறது. எங்களுக்கும் குதிரையின் மாமிசத்தை, யாசகமாகக் கேட்பவர் களுக்கும் கொஞ்சம் அளியுங்கள்.[132]

**ஆரியர்களின் வருகையால் சிந்துசமவெளி மக்களுக்குக் கிடைத்த ஒரே பலன் குதிரை** ஆகும். ஆரியர் வரும் வரை இந்தியாவில் குதிரைகள் இருந்ததில்லை.

சங்க காலத்திலும், குதிரைகள் மேலை நாடுகளிலிருந்து கடல்வழியாக இறக்குமதி செய்யப்பட்ட விலங்குகளாகவே இருந்தன.

> "நீரின் வந்த நிமிர்பரிப் புரவி" (பட்டினப்.185)

என்பது இதற்குச் சான்று. குதிரையைத் தமிழர்க்கு அறிமுகம் செய்தவர்கள் ஆரியர்கள். ஆரியரின் வருகைக்குப் பிறகே, தமிழர் படையில் குதிரைப்படை முதலில் தோன்றியது. அதன்பின் தேர்ப்படையும் உருவாக்கப்பட்டது. இவ்வரலாற்றுக் குறிப்பினைத் தொல்காப்பியப் புறத்திணையியலைக் கூர்ந்து நோக்குவார் அறியலாம்.

## இமயம் வரையிலும் பழந்தமிழர்!

தமிழகத்தின் வடக்கு எல்லை இமயம் என்ற பழஞ்சான்றை மறைத்து, வடக்கு எல்லை வேங்கடமலையே என்ற பொய்யான ஒரு கருத்து, பிற்காலத்தே வந்த ஆரியச் சார்பான தமிழ்ப் புலவர்களால் திட்டமிட்டுப் பரப்பப்பட்டது. இது ஒரு வரலாற்று மோசடி!

> வடவேங்கடம் தென்குமரி
> ஆயிடைத்
> தமிழ்கூறு நல்லுலகத்து...

என்று தொல்காப்பியத்திற்குச் சிறப்புப் பாயிரம் எழுதிய பனம்பாரனார் முதலாகப் பிற்காலச் சிற்றிலக்கிய இலக்கண நூல்களுக்குப் பாயிரம் எழுதிய பல புலவர்களும் இந்த மோசடிக்குத் துணைபோயிருக்கிறார்கள்.

முன்னொரு காலத்தில், பாரதம் முழுவதுமே தமிழ்நாடாக இருந்தது. தமிழகத்தின் எல்லையாகத் தெற்கில் குமரியையும் வடக்கில் இமயத்தையுமே குறித்தனர். தொன்றுதொட்டு வந்த இந்த வரலாறு செவிவழியாகப் பரவிக் கர்ணபரம்பரையாக - இமயப் பகுதியில் ஆரியர் வந்து ஆக்கிரமித்த பிறகும் - சங்க காலம் வரை இவ்வரலாற்று உண்மை நிலைபெற்று வந்தது. இமயம் வரையிலும் தமிழரின் ஆட்சி எல்லை இருந்ததற்குச் சங்க இலக்கியங்களில் பரவலாகச் சான்றுகள் உண்டு.

"தென்குமரி வடபெருங்கல்
குணகுட கடலா எல்லைத்
தொன்றுமொழிந்து தொழில்கேட்ப" (மதுரைக்.70-72)

"ஆரியர் துவன்றிய பேரிசை இமயம்

தென்னங் குமரியொடு ஆயிடை
மன்மீக் கூறுநர் மறம்தபக் கடந்தே" (பதிற்.11)

"கடவுள் நிலைஇய கல்லோங்கு நெடுவரை
வடதிசை எல்லை இமய மாகத்
தென்னங் குமரியொடு ஆயிடை அரசர்
முரசுடைப் பெருஞ்சமம் ததைய ஆர்ப்பெழ" (பதிற்.43)

"வடாஅது பனிபடு நெடுவரை வடக்கும்
தெனாஅது உருகெழு குமரியின் தெற்கும்" (புறம்.6)

"தென்குமரி வடபெருங்கல்
குணகுட கடலா எல்லை" (புறம்.17)

என்பன இதற்குச் சான்றுகள்.

## இமயம் சூழ்ந்த வடக்கிற்கும் சேரர்க்கும் உள்ள தொடர்பு

வடபகுதியில் - சிந்துசமவெளியில் - தமிழர்கள் (சேரர்) கோலோச்சி வந்த காலத்தில்தான் மகாபாரதப் போர் நிகழ்ந்தது. பாண்டவர் ஐவரோடு பொருதிய போர்க்களத்திலேயே கௌரவர் நூற்றுவரும் அழிந்தனர் என்ற செய்தியைச் சங்கச் செய்யுள் பதிவுசெய்துள்ளது.

"ஈரைம் பதின்மரும் பொருதுகளத்து அவியப்
பேரமர்க் கடந்த கொடிஞ்சி நெடுந்தேர்
ஆராச் செருவின் ஐவர் போல" (பெரும்பாண்.415-417)

பாரதப் போர்க்களத்தில் சேரர்களுக்கும் பங்கு இருந்தது. போர்க்களத்தில் படுபிணம் தின்னும் பேய்க்கூட்டங்கள் சூழ்ந்திருக்க, போரில் வென்ற படை மறவர்க்குச் சேரன் உதியன் நெடுஞ்சேரலாதன் என்பான், பெருஞ்சோறு அளித்தான். இந்த வரலாற்றுச் செய்தியைச் சங்கச் செய்யுள்களில் காணலாம்.

"துறக்கம் எய்திய தொய்யா நல்லிசை
முதியர்ப் பேணிய உதியஞ் சேரல்
பெருஞ்சோறு கொடுத்த ஞான்றை, இரும்பல்
கூளிச் சுற்றம் குழீஇயிருந் தாங்கு" (அகம்.233)

"அலங்குஉளைப் புரவி ஐவரொடு சினைஇ
நிலந்தலைக் கொண்ட பொலம்பூந் தும்பை
ஈரைம் பதின்மரும் பொருதுகளத்து ஒழியப்
பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்" (புறம்.2)

சேரர்களின் இமய உரிமைக்கு, இவற்றினும் ஒரு மறைமுகச் சான்றுண்டு.

> தமிழ் மன்னர்கள் - குறிப்பாகச் சேர மன்னர்கள் அவ்வப்போது வடஆரியரை எதிர்த்து வடதிசை நோக்கிப் படையெடுப்பதும், இமயத்தில் தம் விற்கொடியை நாட்டிப் பெருமிதம் கொள்வதுமான அவர்களின் உரிமைப் போராட்டத்தைச் சங்க இலக்கியங்களில் பார்க்க முடிகிறது. பிற்காலச் சிலப்பதிகார வஞ்சிக் காண்டத்திலும் இதற்குச் சான்று உண்டு. இவை, ஒருகாலத்தில் இழந்துவிட்ட தம் உரிமையை மீட்டெடுக்கும் முயற்சியாக - அவ்வப்போது எழுந்த ஆவேச உணர்ச்சியின் அடையாளங்கள் ஆகும். **உரையாசிரியர்கள் வரலாற்றறிவு உடையவரல்லர்** என்பதால், அல்லது வரலாற்றறிவில் பிசகிய கவனக் குறைவால், இச் சுட்டத்தக்க உரிமை மீட்டெடுப்புச் செய்தி அவர்களது உரையில் விளக்கப்படவில்லை!

பாரதப் போரும் ஓர் உரிமைப் போராட்டம்தான்! வஞ்சகமாகத் தம் உரிமையைக் கவர்ந்த கௌரவர்க்குப் பாடம் புகட்டப் பாண்டவர் நிகழ்த்திய போரே பாரதப்போர். பாண்டவரின் அதே உணர்ச்சி நிலையில் ஒத்திருந்தவன் உதியஞ்சேரலாதன்! இந்த உளவியல் காரணமாகத்தான், சேரன் உதியஞ்சேரலாதன் பாரதப் போரில் வென்ற பாண்டவர் படையினர்க்குப் பெருஞ்சோறு அளித்துத் தன் உரிமைப் போராட்ட மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொண்டான். இன்று புரட்சியை வரவேற்கும் போராட்ட வர்க்கம் - நிலத்தால் வேறுபட்டிருந்தாலும் - ஒருவருக் கொருவர் 'இன்குலாப் ஜிந்தாபாத்!' என்று முழங்கித் தங்கள் தோழமையைப் பகிர்ந்து கொள்வதற்கு இணையானதுதான் அப் பெருஞ்சோற்று நாகரிகம்! பாண்டவர் படையினர்க்குப் பெருஞ்சோறு அளிப்பதற்குச் சேரனுக்கு வேறு தேவை என்ன இருக்க முடியும்?...

பெருஞ்சோற்று உதியன் சேரலாதனுக்கும், அவன் தேவி வெளியன் வேண்மாள் நல்லினிக்கும் பிறந்த மகன் நெடுஞ்சேரலாதன். அவன் இமயம் வரையிலும் தன் ஆட்சிப் பரப்பைச் செலுத்திய பெருமையால் **'இமய வரம்பன்'** என்ற சிறப்புப் பட்டம் பெற்றான்! இமயத்தில் தன் அரசுச் சின்னமான வில்லைப் பொறித்து, வடக்கே பெரும்புகழோடு விளங்கிய ஆரிய வேந்தரை ஒடுக்கி வணங்க வைத்து, அவர் பக்கம் கூட்டுச் சேர்ந்திருந்த வன்சொல் யவனரை (கிரேக்கரை)ச் சிறைப்பிடித்து அவர்களின் தலையில் எண்ணெய்யை ஊற்றியும் கைகளைப் பின்பக்கமாகப் பிணைத்துக் கட்டியும் இழிவுறுத்தினான். ஆரியருடைய அரிய பல செல்வங்களை எடுத்துவந்து பிறருக்கு உதவிய வல்லவன் என்று பதிற்றுப்பத்தின் பதிகம் பதிவுசெய்துள்ளது.

> "மன்னிய பெரும்புகழ் மறுவில் வாய்மொழி
> இன்னிசை முரசின் உதியஞ் சேரற்கு
> வெளியன் வேண்மாள் நல்லினி ஈன்றமகன்
> அமைவரல் அருவி இமையம் விற்பொறித்து
> இமிழ்கடல் வேலித் தமிழகம் விளங்கத்
> தன்கோல் நிறீஇத் தகைசால் சிறப்பொடு
> பேரிசை மரபின் ஆரியர் வணக்கி
> நெய்தலைப் பெய்து கைபிற் கொளீஇ
> அருவிலை நன்கலம் வயிரமொடு கொண்டு
> பெருவிறல் மூதூர்த் தந்துபிறர்க்கு உதவி

அமையார்த் தேய்த்த அணங்குடை நோன்தாள்
இமைய வரம்பன் நெடுஞ்சேர லாதனைக்
குமட்டூர்க் கண்ணனார் பாடினார் பத்துப்பாட்டு"
(பதிற். இரண்டாம் பத்தின் பதிகம்)

பதிற்றுப்பத்தின் பதிகங்கள் சோழர்காலக் கல்வெட்டுக்களின் தொடக்கத்தில் அமைந்துள்ள மெய்க்கீர்த்திகளுக்கு இணையானவை என்று கூறுவர் சதாசிவ பண்டாரத்தார்.[133] எனவே, இப்பதிகச் செய்தி கல்வெட்டுக்கு இணையான சத்தியமானது என்பதை அறியலாம்.

வடபுலத்தார் அஞ்சி நடுங்கும் அளவில் வான்தோய்த்த புகழினைப் பெற்றிருந்தான் நெடுஞ்சேரலாதன்.

"வடவர் உட்கும் வான்தோய் வெல்கொடிக்
குடவர் கோமான் நெடுஞ்சேர லாதற்கு"
(பதிற். ஐந்தாம் பத்தின் பதிகம்)

அவன் மேலைக் கடலிலும் வடக்கிலும் ஆரியரை அலறத் தாக்கி, அவர்களை வணங்க வைத்து, இமயத்தில் வில்லைப் பொறித்த செய்தியை மாமூலனார் பாடல்களிலும் பரவலாகக் காண்கிறோம்.

"வலம்படு முரசின் சேர லாதன்
முந்நீர் ஓட்டிக் கடம்பறுத்து, இமயத்து
முன்னோர் மருள வணங்குவில் பொறித்து" (அகம்.127)

"ஆரியர் அலறத் தாக்கிப் பேரிசைத்
தொன்றுமுதிர் வடவரை வணங்குவில் பொறித்து" (அகம்.396)

"ஓங்கிய
வரையளந் தறியாப் பொன்படு நெடுங்கோட்டு
இமயஞ் சூட்டிய ஏம விற்பொறி" (புறம்.39)

என்பன சேர மரபின் வேந்தர், வடபுலத்தின்மீது தமக்குரிய உரிமையை நிலைநாட்டிய அடையாளப் போர்த் தடயங்கள் ஆகும். சேர மன்னர்கள் மட்டுமன்றிப் பிற தமிழ் வேந்தரும் - குமரிமலைப் பகுதியைக் கடல்கோளால் இழந்ததை ஈடுகட்ட - வடக்கே இமயம் வரை சென்று ஆரியரை அடக்கித் தம் அரசுச் சின்னத்தைப் பொறித்த செய்தியைக் கலித்தொகை, சிலப்பதிகாரம் முதலிய இலக்கியங்களிலும் காண்கிறோம்.

"மலிதிரை ஊர்ந்துதன் மண்கடல் வௌவலின்
மெலிவின்றி மேற்சென்று மேலார்நாடு இடம்படப்
புலியொடு வில்நீக்கிப் புகழ்பொறித்த கிளர்கொண்டை
வலியினான் வணக்கிய வாடாச்சீர்த் தென்னவன்
தொல்லிசை நட்ட குடியொடு தோன்றிய
நல்லினத் தாயர் ஒருங்குதொக்கு எல்லாரும்" (கலித்.104:1-6)

"பஃறுளி யாற்றுடன் பன்மலை அடுக்கத்துக்
குமரிக் கோடும் கொடுங்கடல் கொள்ள

வடதிசைக் கங்கையும் இமயமும் கொண்டு
தென்திசை ஆண்ட தென்னவன் வாழி" (சிலப்.11: 19-22)

பழம் பாடல்களில் பதிவுசெய்யப்பட்ட மேற்சுட்டிய செய்திகள் மிகப் பழையன.

ஆரியர்கள்மீது தமிழர்க்கு ஏன் இத்தனை வன்மம்?... **சிந்து சமவெளியில் உயர்ந்த நாகரிக வாழ்க்கையை உருவாக்கி வளமாக வாழ்ந்துவந்த தம் முன்னோரை, ஒரு தந்திர உபாயமாக அழித்துத் தெற்கே விரட்டியவர்கள் ஆரியர்கள்** என்ற வரலாற்று உண்மையை வழிவழியாகக் கேட்டறிந்து, அவர்களைப் பழிதீர்க்க முனைந்த உரிமை வேட்கை வெறியே இதற்கு முதன்மைக் காரணம் எனலாம். அந்த வரலாற்றினை இன்றைய ஆய்வாளர்களும் தெளிவுற விளக்குகின்றனர்.

> ஆரியர்கள், சிந்துசமவெளி மக்கள் சமுதாயத்திற்கு எதிராக ஆக்கிரமிப்புகள் தொடுத்து, நகரங்களை அழித்தார்கள் என்பது அநேகமாக மறுக்க முடியாத உண்மையாகும். எதிரிகளுடன் நடத்திய யுத்தங்கள், அவர்களுடைய சொத்துக்களுக்கும் உயிர்களுக்கும் தாங்கள் ஏற்படுத்திய அழிவுகள் ஆகியவைகளைப் பற்றிய புகழாரங்களை ஆரிய இலக்கியங்களில் ஏராளமாகக் காண முடிகிறது. இது உண்மைதான் என்று நிரூபிக்கக்கூடிய முறையில் சிந்து சமவெளி நகரங்களின் பல பகுதிகளும் தீப்பற்றி அழிந்ததனுடைய தடயங்கள் கிடைத்துள்ளன. ஆகவே, உலக சரித்திரத்தில் மற்ற பல நாடுகளிலும் பல காலங்களிலும் நடந்துள்ளதைப் போலவே, மிகவும் முன்னேறிய ஒரு சமூக நாகரிக வாழ்க்கையை, பின்தங்கிய நிலையிலிருந்த ஒரு மக்கள் கூட்டம், ஆக்கிரமித்து அழிப்பது என்ற நிகழ்ச்சிப்போக்கு சிந்து சமவெளிப் பிரதேசத்திலும் நடந்தது[134]

என்பர்.

இது, சிந்துசமவெளி நாகரிகம் அழிக்கப்பட்ட (கி.மு. 1500) காலத்திற்குச் சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின்வந்த சங்க காலத் தமிழ் மக்களும் மன்னர்களும் நன்கு அறிந்திருந்த வரலாறாகவே இருந்தது.

சங்ககாலமும் அதற்கும் பழமையதான சிந்துசமவெளிக் காலமும் நாகரிகத்தில் செழித்திருந்த காலம். அதற்கும் முந்திய தமிழ்ச் சமூகம் நாகரிக வளர்ச்சியில் படிப்படியாக முன்னேறியது.

460 கோடி ஆண்டுகளுக்குமுன், உலகம் தோன்றிய காலத்திலிருந்து தொடங்கி, சுமார் கி.மு. 30,000 வரையிலுமான கோடிக் கணக்கான ஆண்டுகள் அடங்கிய - வெகு நீண்டகாலப் பகுதியில் தமிழர்கள் தோன்றிய வரலாற்றை மிகமிகச் சுருக்கமாக அறிந்தோம். அதன்பின், தமிழர் சமூகம் பல நிலைகளில் வளர்ந்து வந்த வரலாற்றைத் தொகுப்பது தமிழரின் திணை வரலாறு அறிவதற்கு அடிப்படை ஆகும்.

மனிதன் தோன்றிய தொடக்கத்தில் ஆணும் பெண்ணும் வேண்டியபோது புணர்ந்து திரிந்த தமிழன், வேட்டைச் சூழலில் ஒரு கூட்டமாக - ஒரு சமூகமாக - பற்பல ஆயம் ஆயமாகச் சேர்ந்து வாழத் தொடங்கினான். வேட்டையாடுதல் என்ற தொழில் பல கட்டங்களாக வளர்ந்தது. தனித்த வேட்டை, கூட்டு வேட்டை, தேவைக்கு ஏற்ற

அளவிலான வேட்டை, தேவைக்கு மேலாக வேட்டையில் கிடைத்த ஆநிரைகளை வளர்த்தல், ஆநிரைகளின் பெருக்கம், சொத்து, போர், அரசு, கலைகள், தொழில்கள், வணிகம் எனப் பல்வேறு நாகரிக வளர்ச்சிகளை அவன் படிப்படியாகப் பெற்றான். இப்படித் தமிழன் தொல்காப்பியர் காலம் வரையிலும் வளர்ந்து வந்த சமூக வரலாற்றின் படிநிலைகளைக் கண்டறிந்து தொகுத்துள்ளார் தொல்காப்பியர். தொல்காப்பியப் புறத்திணையியலின் சாரமே அதுதான்!

தமிழர்குல வரலாறு - அதாவது தமிழரின் **திணை வரலாறு** அறிவதற்குத் **தொல்காப்பியப் புறத்திணையியலே முதன்மைத் தரவாக அமையும்.**

# 7. தமிழரின் திணை வரலாறு



'திணை' என்றால் 'நாகரிகம்' என்று பொருள். இதனை முதல் இயலில் அறிந்தோம். திணை வரலாறு தமிழரது நாகரிக வரலாற்றைக் குறிக்கும்.

எப்படியும் வாழலாம் என்ற நிலையிலிருந்து படிப்படியாக வளர்ந்து மாறித் தம் பகுத்தறிவால் காலங்காலமாகப் பண்பட்டு, ஒரு முறையோடு வாழும் வழிமுறை அறிந்த வரலாறே தமிழரின் திணை வரலாறு. ஒரு சமூகமாகக் கூடி வாழ்ந்த தமிழர் தொடக்கத்தில் பல ஆயங்களாகப் பிரிந்து, தம்முள் காதலித்துக் கூடியும் ஊடியும், ஓர் ஆயத்தார் மற்ற ஆயத்தாரோடு உறவாடியும் போரிட்டும், ஆடலும் பாடலும் நிகழ்த்தி மகிழ்ந்தும், பலவாறு உண்டும் உடுத்தியும் தொழிலும் வணிகமும் நடாத்தியும், நல்லவாறு நடக்கத் தெரிந்துகொண்டனரே அந்த நாகரிகம்தான் திணை! தமிழர் தோன்றியது முதலாகப் படிப்படியாக அந்த உயர்ந்த நாகரிகத்தை அறிந்து பண்படுவதற்கு எத்தனை ஆயிரம் ஆண்டுகள் ஆனதோ, அந்த நாகரிகப் பாதையைக் காலவரிசையில் கூற முடிந்தால், அதுதான் தமிழரின் திணை வரலாறு!

தமிழரின் நாகரிக வரலாற்றை முதலில் மொத்தமாகத் தொகுத்தும், அடுத்து, ஒவ்வொரு திணைக் காலவாரியாகப் பகுத்தும் காணலாம்.

## மனிதனும் நெருப்பும்

மனித நாகரிகத்தின் முதல்படி அவன் நெருப்பை அறிந்ததுதான் என்று கூறுவார்கள். நெருப்பு இயற்கையில் உருவாகும் வல்லமை பெற்றது. எரிமலைத் தீ, காட்டில் காய்ந்த மரங்கள் காற்றின் விசையில் வேகமாக உராய்வதால் உருவான காட்டுத்தீ, மின்னலால்

பற்றி உருவாகும் மின்நெருப்பு, மலைக்கற்கள் உருண்டு மோதியதால் பற்றி எரியும் தீ என்று இயற்கை மூலங்கள்வழி தோன்றிய நெருப்பினை மனிதன் தானே தன் முயற்சியால் உருவாக்கக் கற்றுக் கொண்டது ஐந்து இலட்சம் ஆண்டுகளுக்கு முன்னால் என்று நெருப்பு வரலாறு கூறுகின்றது.









'தீக்கடைகோல்' கொண்டு கடைந்தும் 'சிக்கிமுக்கி' (Flint stone) என்று பிற்காலத்தில் அழைக்கப்பட்ட கற்களை உராய்ந்து பொறி ஏற்படுத்தியும் காய்ந்த இலைச் சருகளில் பற்றவைத்து நெருப்பை உருவாக்கினான் ஆதி மனிதன். இரவில் அவன் தங்கி வாழும் குகைகளில் கொடிய விலங்குகள் ஆக்கிரமித்துத் தொந்தரவு அளிப்பதிலிருந்து தப்பிக்கவும் ஒளிமூலமாகவும் ஆரம்பத்தில் நெருப்பு மனிதனுக்குப் பயன்பட்டது.





வலிய விலங்குகளை அச்சுறுத்தி வேட்டையாடும் ஒரு கருவியாகவும் நெருப்பு அவனுக்கு உதவியது. வேட்டையாடிய விலங்குகளைச் சுட்டுத் தின்பதற்கும் அதே நெருப்பு அவனுக்குப் பயன்பட்டது.

ஆதியில் நெருப்பைப் பார்த்துப் பயந்த மனிதன் தன் பகுத்தறிவால் அதனைத் தானே உருவாக்கிப் பயன்படுத்தத் தொடங்கிய காலம் தொட்டே மனித குல நாகரிகம் வளரத் தொடங்கியது.

மனிதக் குரங்கிலிருந்து தோன்றிய குரங்கு-மனிதன் முற்றிலுமாகக் குரங்குகளின் இயல்பிலிருந்து முழு மனித நிலையை அடையப் பன்னெடுங் காலம் ஆயிற்று. மனிதக் குரங்குகளிலிருந்து மனிதன் வேறுபட்டது அவன் கைகளின் செயல்பாட்டால் என்பர்.

"எந்தக் குரங்கின் கையும் எந்தக் காலத்திலும் மிகக் கரடுமுரடான கல்கத்தியைக்கூட உருவாக்கியதில்லை" [135] என்பார் எங்கெல்ஸ். கற்களை ஆயுதமாகப் பயன்படுத்தத் தொடங்கியபோதே குரங்குமனிதன் 'மனிதன்' என்ற உயர்நிலைக்கு மாறத் தொடங்கிவிட்டான்.



மலைகளிலும் காடுகளிலும் வாழ்ந்த முன்னோன் விலங்குகள் தன்னைத் தாக்க வரும்போது தற்காப்பிற்காக எதிர்த்துப் போராடினான். அதில் தன்னால் கொல்லப்பட்ட விலங்கின் இறைச்சியை உண்டு சுவைத்தவன், அதுவே உணவுப் பழக்கமாக மாற, உணவுத் தேடலுக்காக வேட்டை அவன் தொழிலாக மாறியது. கற்களைக் கொண்டு, வேட்டைக்கு உதவும் பல்வேறு கற்கருவிகளைச் செய்வதற்கு முனைந்தான். மனிதர்களின் அக் காலம் 'கற்காலம்' எனப்பட்டது.



பல்வேறு கல்கருவிகள்

உதய கற்காலம் (ESA-Early Stone Age or Paleolithic), மத்திம கற்காலம் (MSA-Middle Stone Age or Mesolithic), பிந்திய அல்லது புதிய கற்காலம் (LSA-Later Stone Age or Neolithic) என்னும் மூன்று வகைக் கற்கால யுகத்தில் உதய கற்காலம்தொட்டே தமிழ்நாட்டில் மனிதர்கள் வாழ்ந்துள்ளனர். அதன் இறுதிக் கட்டம் முப்பத்தைந்தாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட காலமென்று ஆய்வாளர்கள்





கூறுகின்றனர்.[136] இதனால், தமிழில் வேட்டைச் சமூகம் தொடங்கி 35,000 ஆண்டுகள் அல்லது 30,000 ஆண்டுகள் ஆகின்றன என்று கணிக்கலாம். ஆதியில் தனித்தனியாக வாழ்ந்து வந்த மனிதன் ஒரு கூட்டமாக வாழத் தொடங்கிய பிறகே 'சமூகம்' அல்லது 'சமுதாயம்' எனப்பட்டான். எறும்பு, தேனீ, யானை, காட்டுப் பசுக்கள், எருமைகள், மான்கள், குரங்குகள் ஆகிய விலங்குகளும் கூட்டமாகக் கூடி வாழும் இயல்புடையன ஆகும். அவற்றிற்கு இடையே பாலியல் வேட்கை, அருகிருந்து உண்ணுதல், பாதுகாப்பு முதலிய உணர்வுகளும் உண்டு. ஆனால், அவை ஒன்று மற்றொன்றுக்கு உதவுவதோ ஒன்றுக்கொன்று அனுசரணையாக நடந்துகொள்வதோ இல்லை. மனம் (பகுத்தறிவு) உடையவன் மனிதன். மனிதன் மட்டுமே ஒருவனுக்கு மற்றவன் உதவியாக நடந்துகொள்ளும் வழக்கத்தை மேற்கொண்டான். இதுவே மனிதனை ஒரு சமுதாயமாக மாற்றியது.

> தம்மைப் பாதுகாத்துக் கொள்வதும் பண்படுத்திக் கொள்வதும் பண்பாட்டை வளர்த்துக் கொள்வதும் சமூக அமைவால் சாத்தியம் ஆயின. சமூகவியல் ஆய்வில் மிகத் தலைமையானவை இரண்டு கோட்பாடுகள் ஆகும். ஒரு கோட்பாடு, தனி மனிதனை முதன்மைப் படுத்துவது; இன்னொன்று குழு அல்லது சமூகத்தை முதன்மைப் படுத்துவது. மாக்ஸ் வேபர் (Max Weber 1864 - 1920), தனிமனிதன் தான் சமூகத்தின் அடிப்படை அலகு என்று கருதினார். சமூக இயல் விதிகளைக் கண்டுபிடிப்பது இலக்கு அன்று; மனிதர்களைப் புரிந்து கொள்ள உதவும் வழிமுறைகளைக் கண்டறிவதே இலக்கு என்பதே வேபரின் கருத்தாகும். மிதிவண்டிகளில் செல்லும் இருவர் எதிரெதிரே மோதிக்கொண்டால் அது சமூக உறவு ஆகாது; மாறாக மோதிக் கொள்ளுதலைத் தவிர்க்கும் முறையில் இடம் வலமாகப் பயணிப்பதாலோ மோதும் நிலையில் மோதுவதைத் தவிர்த்தலோ மோதிய நிலையில் பண்புடன் நடந்து கொண்டாலோ அது சமூக உறவு எனப்பெறும். இத்தகைய வாய்ப்புகளில் மனிதர்கள் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும் என்பது சமூக எதிர்பார்ப்பு; இச்சமூக எதிர்பார்ப்பை ஒட்டி நடந்து கொள்வதுதான் சமூக ஒழுகலாறு[137]

என்று சமூகவியல் கோட்பாடுகளை விளக்குவர். இத்தகைய உணர்வுகளைத் தமிழர்கள் என்றைக்குப் பெற்றார்களோ அன்று முதலாகவே தமிழ்ச் சமுதாயம் உருவாகிவிட்டது என்று கூறலாம்.

தனித்து வேட்டையாடியவன் வேங்கை, யானை முதலிய வலிய விலங்கினை வேட்டையாடிய நேரத்தில், பலரும் ஒரு கூட்டமாகக் கூடி வேட்டையாடுதல் காலத்தின் தேவையானது. அதுவே மனிதனை ஒரு சமூகமாக மாற்றியது.





ஒற்றுமையும் விட்டுக்கொடுத்தலும் மனிதப் பண்பாக வளர, அன்றைய வேட்டைச் சமூகச் சூழல் அமைந்தது.

## வேட்டைச் சமூகம்

மனிதச் சமூக வரலாற்றில் மிகத் தொன்மையான சமுதாயம் வேட்டைச் சமூகம் ஆகும். வேட்டையாடுதல் வாழ்க்கையின் தவிர்க்க முடியாத தேவை என்று தொடங்கி, அது ஒரு நிறுவனமான தொழிலாக மாறியது. கூட்டு உழைப்பும் முன்னேற்பாடான திட்டமிடுதலும் உருவாயின.



வேட்டையாடிய விலங்கின் இறைச்சி எனக்கு உனக்கு என்ற போட்டிக்கு அன்றைக்கு வழியே இல்லை. அப்போது வயிற்றுக்குத் தேவையானது போக எஞ்சியதை ஒருவர் தம் உடைமையாகக் கொள்ள வழியில்லை. அடுத்த வேளைக்கு இறைச்சியை உப்பிட்டுப் பதப்படுத்தும் முறையை அவர்கள் அன்று அறிந்திருக்கவில்லை. அதனால் அடுத்த வேளைக்குச் சேமித்து வைத்து உண்ணும் ஆசை அவர்களிடம் இல்லை. வேட்டையில் பெற்ற இறைச்சியை உழைத்த அனைவரும் சமமாகப் பங்கிட்டு உண்டனர். அவரவர்க்கு அப்போதைக்கு எவ்வளவு தேவையோ அவ்வளவை மட்டும் எடுத்துக்கொண்டனர். அது ஒருவகையில் காரல் மார்க்சு கனவு கண்ட ஒரு பொதுவுடைமைச் சமுதாயமாக இருந்தது. அதனை 'உதயகாலப் பொதுவுடைமைச் சமூகம்' (Pre-communal society) என்று வரலாற்றறிஞர் அழைத்தனர்.





காலப்போக்கில் வேட்டைக் கருவிகளில் மாற்றங்கள் விளைந்தன. வலிய மரக்கிளையைக் கூர்தீட்டி ஈட்டியாக எய்தனர். அதன் நுனியில் கூரிய கல்லைத் துளையிட்டு இணைத்தும் வேல் என்ற கருவியை உருவாக்கி வேட்டைக்குப் பயன்படுத்தினர்.



பதினைந்தாயிரம் ஆண்டுகளுக்கு முன் தீட்டப்பட்டதாகக் கூறப்படும் ஒரு குகைச் சித்திரம் பிரான்சு நாட்டில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. ஈட்டியை எறிந்து ஒரு காட்டெருமையைத் தாக்கியிருக்கிறான் ஒரு வேட்டைக்காரன். உயிர் துடிக்கும் நிலையிலும் அந்தக் காட்டெருமை தன் வாலைத் தூக்கிச் சீற்றத்துடன் அவனைத் தாக்க, அவன் செத்து விழுகிறான். அவனுக்கும் காட்டெருமைக்கும் நடுவே அந்த ஈட்டி வீழ்ந்து கிடக்கிறது. அருகே ஒரு குச்சியின் மீது ஒரு பறவை எதிர்த்திசை நோக்கிப் பார்த்தவாறு அமர்ந்துள்ளது. இந்த ஓவியத்தோடு இக்காலப் பழங்குடி மக்களின் பழக்க வழக்கங்களை ஒப்பிட்டுப் பார்க்கும்போது, சில உண்மைகள் தெரிய வருகின்றன. இப்படிப் படம் வரைந்தால் தனக்கு ஒரு மந்திரசக்தி கிடைக்கும் என்று அவர்கள் நம்பினார்கள். இப்படி ஒரு விலங்கின் படத்தை வரைவதன் மூலம் அந்த விலங்கை வேட்டையாடும் சக்தி அவனுக்குக் கிடைக்குமாம். இக்காலத்தில் பழங்குடியினரிடையே ஒரு வழக்கம் உண்டு. உடம்பில் எந்தப் பகுதியிலாவது கட்டி வந்தால், அந்தப் பகுதியில் செம்புள்ளி கரும்புள்ளி குத்துவார்கள். இதனால், கட்டி வந்ததற்குக் காரணமான கெட்ட 'ஆவி' பயந்து ஓடிவிடும் என்று நம்புகிறார்கள். இதுபோன்ற ஒரு நம்பிக்கையில் தீட்டப்பட்ட ஓவியமே அது.[138]

அருகிலுள்ள பறவைப் படம், வேட்டை கிடைக்கும் என்று நல்ல நிமித்தம் கூறிய பறவைக்கு நன்றி தெரிவித்தலாக இருக்கலாம்.

வேட்டையாடச் சென்ற ஒருவன், வேட்டையில் கிடைத்த வெற்றியைக் கொண்டாடி ஆடுவதாகவும் குகைச் சித்திரங்கள் கிடைத்துள்ளன.





**வேட்டையில்தான் தனிமனித ஆட்டக்கலை தோன்றியிருக்கிறது என்பதற்கு இது சான்றாகும்.** அந்தப் பழமையான ஓவியங்களில், வேல் (ஈட்டி) வேட்டைக் கருவியாக இருப்பது கவனிக்கத்தக்கது. ஆதியில் குறிஞ்சிநில வேட்டைச் சமூக வாழ்க்கையில், வேட்டைத் தொழிலுக்கு உதவிய துடியைக் கொட்டி ஆடிய

துடிக்கூத்தினைத் தொல்காப்பியப் புறத்திணையியலில் தொடக்கத்தில் காண்பது இதனை அரண்செய்யும். வேட்டையின் மறத்தொழிலை முடித்து ஆடிய கூத்தே 'துடிநிலை' எனப்பட்டது. வேட்டையின் கொற்றத்தைக் கொண்டாடி ஆடிய கூத்துக் 'கொற்றவை நிலை' எனப்பட்டது. தொல்காப்பியப் புறத்திணையியலில், வெட்சித் திணையின் ஈரேழ் திணைகளை அடுக்கிக் கூறியபின்,

"மறம்கடைக் கூட்டிய துடிநிலை, சிறந்த
கொற்றவை நிலையும் அத்திணைப் புறனே" (தொல். புறத்.4)

என்று தனித்த நூற்பாவாகத் துடிநிலை, கொற்றவைநிலை ஆகிய இரண்டை மட்டும் சிறப்பாகத் தனித்துக் கூறியது ஏன் என்று சிந்திக்க வேண்டும். வேட்டைச் சமூகத்தில் தனிமனித நிலையில் தோன்றிய ஆதிக்கூத்துகள் இவை என்ற உண்மையை உணரமுடிகின்றது.

ஆதி வேட்டைச் சமூகத்தில் பயன்பாட்டிலிருந்த முதல் பறை 'துடி' ஆகும்; அப்போது வழக்கத்திலிருந்த வேட்டைக் கருவி 'வேல்' ஆகும். வேட்டைச் சமூகத்தின் வளர்ச்சிக் கட்டத்தில் - ஆநிரை சொத்தாகக் கருதப்பட்ட ஒருகாலத்தில் - உருவான முதல்போர் வெட்சி. வெட்சிப் போரில் பயன்பாட்டிலிருந்த போர்க்கருவியும் வேலாக இருந்தது.

போர்களைப் பேசும் தொல்காப்பியப் புறத்திணையியலில் கற்கருவிகளை நாம் காண முடியவில்லை. தொல்காப்பியப் புறத்திணையியலில் முதல் திணையான வெட்சித் திணையில் முதலில் அறியப்படும் போர்க்கருவி வேல் ஆகும். வில்லை வைத்திருப்பவன் 'வில்லன்'. "கண்ணியன் வில்லன் வரும்என்னை நோக்குபு" (கலித்.37). அதுபோலக் கையில் வேலை வைத்திருப்பவன் 'வேலன்'. அவன் மறவர்க்குப் போர் வெறியை ஊட்டுவதற்காக வெறியறி சிறப்பின் 'வெறியாட்டயர்ந்த காந்தள்' என்ற கூத்தினை நடத்தினான் என்று தொல்காப்பியம் கூறுகின்றது.





"வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்
வெறியாட் டயர்ந்த காந்தளும்..." (தொல். புறத்.5)

கல்லும் கவணும் எயினரின் வேட்டைக் கருவிகளாக இருந்ததைக் கலித்தொகையில் பார்க்கிறோம்.

"கடுவிசைக் கவணையில் கல்கை விடுவலின்" (கலித்.41: 10)

வில்லும் அம்பும் வேட்டைக் கருவிகளாக இருந்த செய்தியைப் புறநானூறு தருகிறது.

"வல்வில் வேட்டம் வலம்படுத் திருந்தோன்
புகழ்சால் சிறப்பின் அம்புமிகத் திளைக்கும்" (புறம்.152)

வேட்டையாடுபவர் சங்க இலக்கியங்களில் துடியர், வேட்டுவர், எயினர், கானவர் என்ற பெயர்களால் சுட்டப்பட்டனர். வேட்டைச் சமூகத்தினரை இன்றைக்கு 2000 ஆண்டுகளுக்கு முந்திய சங்க காலத்திலும் பார்க்கிறோம் என்றாலும், இவர்கள் ஆதித் தமிழ்க் குடிகள் ஆவர். இன்றைக்கு 30,000 ஆண்டுகளுக்கும் முந்திய சமூகத்தினர் அவர்கள்!

"துடியன் பாணன் பறையன் கடம்பன்என்று
இந்நான்கு அல்லது குடியும் இல்லை" (புறம்.335)

என்பதால் துடியரின் தொன்மையை அறியலாம்.

துடியன் - துடி கொட்டி வேட்டையாடிய வேட்டுவன்
பாணன் - யாழ் இசைத்துப் பாடி ஆடும் துடியன்வழி வந்தவன்
பறையன் - பறை கொட்டி ஆடிய கூத்தன்
கடம்பன் - காட்டை உழுது பயிர்செய்த பள்ளன்



துடி கொட்டி ஆடுபவர் துடியர். வேட்டையில் விலங்குகளை அச்சுறுத்திச் சிதறி ஓடச்செய்து வேட்டையை எளிதாக்கும் இசைக்கருவி துடி ஆகும். துடியர் ஆதி வேட்டைச் சமூகத்துப் பழங்குடி மக்கள். துடியரின் கையில் துடி இல்லாதபோது, எப்போதும் வேல் (எறிகோல்) இருக்கும்.

"துடியன் கையது வேலே" (புறம்.285)

"துடியெறியும் புலைய
எறிகோல் கொள்ளும் இழிசின" (புறம்.287)





வேட்டையில் துடிகொட்டி விலங்குகளை வெருட்டி, அதன்வழிப் பெற்ற வெற்றியைக் கொண்டாடும் முகத்தான், துடிகொட்டி ஆடுவர்; பாடுவதிலும் வல்லவராவர் (புறம்.291). ஆதிப் பழங்குடியினர் துடியர் என்பதால், இவர்களை இழிபிறப்பாளன் (புறம்.170), புலையன் (புறம்.287), இழிசினன் (புறம்.287) என்று கூறினர்.



ஆதித் தமிழ்க் குடியினர் துடியர் ஆவர். அவர்களை மதிக்கும் குறிப்பாகத் தான் நம் கோயில்களில், துர்க்கை அம்மனுக்கு நிகராக அவர்களுக்குச் சிலை நிறுவிப் போற்றி வரும் வழக்காறு இன்றும் நிலவி வருகிறது.



சிந்துசமவெளி நாகரிகத் தடயங்களில் கிடைத்துள்ள 'ஒற்றைக்கொம்பன்' காளையின் தலைக்குக் கீழே உள்ள படம், 'துடி' போலத் தோன்றுகிறது. ஆதியில் வேட்டைக்கு உதவிய துடியை வழிபாட்டுச் சின்னமாகப் பழந்தமிழர் வைத்துக் கொண்டாடிய வழக்கத்தையே இது காட்டுகிறது என்பது என் தாழ்மையான கருத்து. இது மேலாய்வுக்கு உரியதாகும்.

தமிழரின் தொன்மைத் தெய்வமான கொற்றவை (துர்க்கை) கையிலும் துடி இடம்பெற்றது. தாய்வழிச் சமூகத்தின் பின்னர், கொற்றவையை அடுத்துச் செல்வாக்குப் பெற்ற சிவன் கையிலும் துடி இடம்பெற்றது. காளியின் கையிலும் சிவனது கையிலும் துடி வந்த வரலாற்றினை அறிந்தோர், துடியரின் பழஞ்சிறப்பை உணர முடியும்.

## 'ஆயம்' என்ற தாய்வழிச் சமூகம்

வேட்டைச் சமூகம் பல ஆயிரம் ஆண்டுகள் நிலைத்தது. நெருப்பின் பயன்பாட்டை ஆதித் துடியினர் அறிந்தனர். மண்பாண்டம் செய்யும் கலையையும் அவர்கள் அறிந்தனர்.

> கூடைகளும் மரக்கலயங்களும் நெருப்புப் படுவதால் எரிந்து போகாமல் இருப்பதற்காக அவற்றின் மீது களிமண்ணைப் பூசுவதிலிருந்து இந்தக் கலை தோன்றியிருக்கிறது 139

என்பர் எங்கெல்ஸ். ஆதி மனிதச் சமூகத்தில் பெண்கள் முதன்மை பெற்ற தாய்வழிச் சமூகத்திலேயே மண்பாண்டத் தொழில் தோன்றியது என்பர்.

ஆணும் பெண்ணும் புணர்ந்து, பிள்ளைப் பேறுகள் நடந்தன. அதற்கு ஆணும் காரணம் என்ற அறிவியலைப் பழந்தமிழர் அறிந்திருக்கவில்லை. தாய்தான் பிள்ளைப் பேற்றுக்கு உரிய சக்தி பெற்றவள்; அவளே தலைவி என்ற கருத்தாக்கம் உருவானது.




ஒரு தாயிலிருந்து கிளைத்த ஆண்களும் பெண்களும் ஒரு கூட்டமாகச் சேர்ந்து வாழ்ந்தனர். அக்கூட்டத்திற்குத் தாய்தான் தலைமை வகித்தாள். இவ்வாறே பல கூட்டத்தினர் ஆங்காங்கே பல சமூகமாக வாழ்ந்தனர். அது தாய்வழிச் சமூகம் எனப்பட்டது. தக்கவாறு தலைமையேற்றுச் சிறந்த ஒரு தாய் இறந்துபோன பிறகு, அவளையே தெய்வமாகப் போற்றி வழிபடும் வழிபாட்டு முறை வழக்கிற்கு வந்தது. 'யக்ஷி' வழிபாடு, 'யோனி' வழிபாடு என்று இன்றும் அது வழக்கில் உள்ளது. சிந்து சமவெளி மற்றும் உலகின் பல இடங்களில் தாய்வழிபாட்டுச் சின்னங்கள் கண்டெடுக்கப்பட்டுள்ளன.



Terracotta Crafts of Harappa


தமிழில் 'யாய்', 'ஆய்' என்றால் 'தாய்' என்று பொருள். ஆயைத் தலைவியாகக் கொண்ட சமூகம் 'ஆயம்' எனப்பட்டது.

*"சிறைகொள் பூசலின் புகன்ற ஆயம்" (பதிற்.30)*

*"துணைபுணர் ஆயமொடு தசும்புடன் தொலைச்சி" (புறம்.224)*

ஓர் ஆயத்தில் இருந்தவர்கள் அனைவரும் ஆயர், ஆய்ச்சியர் (ஆய்த்தியர்) எனப்பட்டனர். 'ஆயர்' என்ற சொல் தொல்காப்பியத்தில் ஒரிடத்திலும் புறநானூற்றில் ஒரிடத்திலும் வந்துள்ளது. ஆனால் 'ஆயர்' என்ற சொல் கலித்தொகையில் பல இடங்களில் வந்துள்ளதைக் காண முடிகிறது.

*"**ஆயர்** வேட்டுவர் ஆடூஉ திணைப்பெயர்" (தொல். அகத்.21)*

*"அறவை நெஞ்சத்து **ஆயர்** வளரும்" (புறம்.390)*

*"அணிமாலைக் கேள்வற் றரூஉமார் **ஆயர்**" (கலித்.101: 34)*

*"ஏறும் வருந்தின **ஆயரும்** புன்கூர்ந்தார்" (கலித்.101: 47)*

*"மடவரே நல்**ஆயர்** மக்கள் நெருநை" (கலித்.102: 30)*

*"கோட்டினத்து **ஆயர்**மகனன்றே மீட்டொரான்" (கலித்.103: 33)*

*"கோட்டினத்து **ஆயர்** மகனன்றே ஓவான்" (கலித்.103: 37)*

*"புல்லினத்து **ஆயர்** மகனன்றே புள்ளி" (கலித்.103: 47)*

*"விலைவேண்டா எம்மினத்து **ஆயர்** மகளிர்" (கலித்.103: 71)*

*"நல்லினத்து **ஆயர்** ஒருங்குதொக்கு எல்லாரும்" (கலித்.104: 6)*

*"அறைவனர் நல்லாரை **ஆயர்** முறையினால்" (கலித்.104: 26)*

*"உற்றீயாள் **ஆயர்** மகள்" (கலித்.104: 68)*

*"தருக்கன்றோ **ஆயர்** மகன்" (கலித்.104: 72)*

*"வீவில் குடிப்பின் இருங்குடி **ஆயரும்**" (கலித்.105: 7)*

*"கோட்டினத்து **ஆயர்** மகனொடுயாம் பட்டதற்கு" (கலித்.105: 58)*

*"அன்புறு காதலர் கைபிணைந்து **ஆய்ச்சியர்**" (கலித்.106: 32)*

*"போரேற் றருந்தலை அஞ்சலும் **ஆய்ச்சியர்**" (கலித்.106: 40)*

*"**ஆயர்** மகனாயின் **ஆயமகள்** நீயாயின்" (கலித்.107: 19)*

*"**ஆயர்** மகனையும் காதலை கைம்மிக" (கலித்.107: 24)*

*"**ஆயர்** எமரானால் **ஆய்த்தி**யேம் யாம்மிக" (கலித்.108: 9)*

*"மாமருண் டன்ன மழைக்கட்சிற் **றாய்த்தியர்**" (கலித்.108: 46)*

*"கண்ணளோ **ஆயர்** மகள்" (கலித்.109: 12)*

*"கடிகொள் இருங்காப்பிற் புல்லினத்து **ஆயர்**" (கலித்.110:1)*

*"நிச்சம் தடுமாறு மெல்லியல் **ஆய்மகள்**" (கலித்.110: 9)*

*"புல்லினத்து **ஆயர்** மகளிரோ டெல்லாம்" (கலித்.111: 5)*

*"**ஆயர்** மகளிர் இயல்புரைத்து எந்தையும்" (கலித்.111: 22)*

*"புல்லினத்து **ஆயர்** மகனேன் மற்றியான்" (கலித்.113: 7)*

*"புல்லினத்து **ஆயனை** நீயாயிற்" (கலித்.113: 9)*

*"நல்லினத்து **ஆயர்** எமர்" (கலித்.113: 10)*

*"அருநெறி **ஆயர்** மகளிர்க்கு" (கலித்.114: 20)*

*"புல்லினத்து **ஆயர்** மகன்சூடி வந்ததோர்" (கலித்.115: 4)*

*"அறவை **ஆயர்** அகன்தெரு அடைந்தன" (சிலப்.22: 116)*

*"செறிவளை **ஆய்ச்சியர்** சிலர்புறஞ் சூழ" (சிலப்.15: 206)*

ஆயம், ஆயர், ஆய்ச்சியர் என்ற சொற்கள், தாய்வழிச் சமூகம் மாறித் தந்தைவழிச் சமூகம் வந்த பின்னரும்கூட, சங்க காலத்திலும் அதன்பின் காப்பிய காலத்திலும் வழக்கில் இருந்ததைப் பார்க்கிறோம்.

## மேய்ச்சல் சமூகம்

மிகுதியாக வேட்டையாடிய நாள்களில் உண்டது போக எஞ்சிய உபரி ஆநிரைகளைச் சேமிக்கும் வழக்கம் தாய்வழிச் சமூகத்தில் உருவானது. அவ்வாறு சேமித்த ஆநிரைகளை மேய்த்து வளர்க்கும் தேவை ஏற்பட்டது. அந்த மேய்ச்சல் சமூகத்தில் ஆநிரைகள் பெருகின. அதுவே மனித குலத்தின் முதல் சொத்து என்றானது! சொத்துடைமை என்பது உருவானதும், அதை அடுத்தவர் பறிக்கும் வன்செயலும் தோன்றியது. அதனால் பூசலும் போரும் மேய்ச்சல் சமூகத்தில் உருவெடுத்தன!





"மனிதன் கால்நடை மேய்ச்சலை மேற்கொண்ட பொழுது அவனுக்கு ஓய்வு மிகுதியாகக் கிடைத்தது. அந்த ஓய்வு நேரத்தில் அவன் இசைமுதலிய கலைகளில் தன் மனத்தைச் செலுத்தலானான்"[140] என்பர். வேட்டைத் தொழிலின் அனுபவப் பயனாகப் பறையும் யாழும் அன்றைய இசைக்கருவிகளாக வழக்கத்திற்கு வந்தன.





தொல்காப்பிய அகத்திணையியலில் வரும் கருப்பொருள் வரிசையில் பறையும் யாழும் இடம்பெற்றுள்ளன; குழல் இல்லை. இதனால், பறை, யாழ் முதலிய இசைக்கருவிகள் முதலில் கண்டறியப்பட்டன; பின், குழல் கண்டறியப்பட்டது எனக் கருதலாம். வேட்டையில் கொன்ற விலங்கின் தோலைப் பறையாக்கினர். வேட்டைக் கருவியான வேலுக்குப் பிறகு வில் கண்டறியப்பட்ட பின்னர், வில்யாழ் கண்டுபிடிக்கப்பட்டது.

"வில்யாழ் இசைக்கும் விரலெறி குறிஞ்சி" (பெரும்பாண்.182).

இடையர் எனப்பட்ட மேய்ச்சல் சமூகத்து மக்கள் தம் அரையில் 'ஒன்றமர் உடுக்கை' என்னும் ஒட்டுக் கோவணம்தான் அணிந்திருந்தனர்.

"ஒன்றமர் உடுக்கைக் கூழார் இடையன்" (பெரும்பாண்.175).

ஒன்றமர் உடுக்கையராயினும், அவர்கள் மேய்த்த ஆநிரைகள் பெரிய செல்வமாகக் கருதப்பட்டன. 'மாடு' என்ற சொல் 'செல்வம்' என்ற பொருளில் (குறள்.400)

திருவள்ளுவர் காலம் வரையிலும் விளங்கியது. தொன்மைக்காலச் சொத்தாக விளங்கிய ஆநிரைகளைக் கவரும் போர் உருவானது. ஓர் ஆயத்தார், வேற்று ஆயத்தாருடைய ஆநிரைகளைப் போரிட்டுக் கவர்ந்து வந்தனர். அது வெட்சிப் போர் எனப்பட்டது.

"வேந்துவிடு முனைஞர் வேற்றுப்புலக் களவின்
ஆதந்து ஓம்பல் மேவற் றாகும்" (தொல். புறத்.2)

இங்கே 'வேந்து' என்றது வேந்தனை என்பர் நச்சினார்க்கினியர். ஆனால் தொன்மை மேய்ச்சல் சமூகத்தில் அரசு என்ற அமைப்பும் இல்லை; வேந்தனும் அல்லன். வேட்டைச் சமூகத்துத் தலைவனே ஆதியில் வேந்து எனப்பட்டான். மேய்ச்சல் சமூகத்திலேயே வெட்சிப் போர் நடந்தது. மேய்ச்சல் சமூகம் ஒரு நாடோடிச் சமூகமாகவே இருந்தது எனலாம். மக்கள் நிலையாக ஓரிடத்தில் வீடுகள் கட்டி ஊராக வாழத் தொடங்கியது உழவுத் தொழிலைக் கண்டுபிடித்த பிறகுதான். அதுவரையிலும் மேய்ச்சல் சமூகம் மிக நீண்ட காலமாகத் தொடர்ந்தது.

> கால்நடைகளுக்குத் தீவனம் என்பது பொருட்டே முதலில் விவசாயம் கண்டறியப்பட்டது. "கால்நடைகளுக்குத் தீவனம் போட வேண்டிய அவசியத்தை முக்கியமாக முன்னிட்டுத்தான் இங்கே தானிய வகைகளைச் சாகுபடி செய்வது கொண்டுவரப்பட்டது. கொஞ்ச காலத்திற்குப் பிறகுதான் அது மனித ஊட்டத்துக்கு முக்கியமான தாயிற்று என்பதே அனேகமாக உண்மையாகவிருக்கும்[141]

என்று கூறுகிறார் எங்கெல்ஸ்.

## நிலவுடைமைச் சமூகம்

மேய்ச்சல் சமூகத்தின் வளர்ச்சியாக உருவானது நிலவுடைமைச் சமூகம். நிலத்தைக் கொத்தியோ உழுதோ தானியங்களைப் பயிரிடும் முறையை மேய்ச்சல் சமூக மக்கள் தெரிந்திருக்கவில்லை. தானியங்களை நிலத்தில் விதைத்துப் பார்த்தனர். அவை காற்றாலும் நீராலும் அடித்துச் செல்லப்பட்டன. காட்டு விலங்குகள் வழியாக, உழும் இரகசியத்தைக் கடைசியாக அறிந்தார்கள். பன்றிகள் மண்ணில் புதைந்த கிழங்குகளைப் பறிக்கக் கொம்புகளால் உழுத குழிகளில் விழுந்த விதைகள் வளர்ந்தன. அதைக் கண்ட மக்கள் உழுதல் என்ற முறையைக் கற்றுக் கொண்டனர். இது சுமார் பத்தாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரேயே உருவாகிவிட்டது. என்றாலும், கிழங்கு பறிக்கப் பன்றி உழும் வழக்கினைப் பிற்காலத்தில் வந்த சங்கச் செய்யுள்களிலும் காண முடிகிறது.

"கிழங்ககழ் கேழல் உழுத சிலம்பில்
தலைவிளை கானவர் கொய்தனர் பெயரும்" (ஐங்.270)

"கொழுங்கிழங்கு மிளிரக் கிண்டிக் கிளையோடு
கடுங்கட் கேழல் உழுத பூழி
நன்னாள் வருபதம் நோக்கிக் குறவர்
உழாஅது வித்திய பருஉக்குரல் சிறுதினை
முந்துவிளை யாணர் நாட்புதிது உண்மார்" (புறம். 168)

என்பன இதற்குச் சான்றுகள். கேழல் தன் கொம்பால் உழுததைக் கொண்டு, பழந்தமிழர்

கூரிய மரக்கிளைகளை வைத்தும் மூங்கில் கழிகளில் கூரிய கற்களை இணைத்தும் நிலத்தைக் கிள்ளிப் பள்ளம் தோண்டினர். மரத்தாலும் கற்களாலும் நிலத்தைக் கிள்ளும் கருவிகளை உருவாக்கினர். அவற்றைக் கொண்டு நிலத்தைப் பள்ளமிட்டு உழவுத் தொழிலை மேற்கொண்டனர். இதுவே பழைய உழும் முறையாகும். நிலத்தைப் பள்ளம் இடுவதே பழைய உழும் முறையாக இருந்ததால், பள்ளமிட்ட அம்மக்கள் 'பள்ளர்' எனப்பட்டனர்.





**கிள்ளி** (வளவன்), **பள்ளர்** என்ற சொற்கள், உழுதல் என்பதற்கு மாற்றுச் சொல்லான கிள்ளுதல், பள்ளமிடுதல் வழி உருவான காரணப் பெயர்களாகும். வெகுகாலத்திற்குப் பிறகே, மனிதர்களை - அதாவது, அடிமைகளைப் பூட்டி உழுதனர். பிறகு ஏரில் எருதுகளைப் பூட்டி நாகரிகமாக உழும் முறையை அறிந்தனர்.





> நிலத்தைச் செம்மைப்படுத்தப் பலவிதமான உழவுக் கருவிகளைக் கண்டு பிடித்தான். பழக்கப்பட்ட மாடுகளைக் கொண்டு இக்கருவிகளை இலகுவாகப் பயன்படுத்தினான். செம்மையான முறையில் மனிதன் விவசாயம் செய்ய ஆரம்பித்தது, சுமாராகப் **பத்தாயிரம் ஆண்டுகளுக்கு முன்புதான்** எனலாம்[142]

என்று புவியியல் ஆய்வாளர் கூறியுள்ளார்.

> "உணவெனப் படுவது நிலத்தொடு நீரே
> நீரும் நிலனும் புணரியோர் ஈண்டு
> உடம்பும் உயிரும் படைத்திசி னோரே" (புறம்.18)



என்ற உண்மை மக்களுக்கு உறைத்தது. சாதாரணமாகக் காலடியில் கிடந்த மண், பொன் விளையும் பூமி ஆனது; மகத்தான சொத்தானது! இனக்குழு மக்கள் அவரவர் ஆக்கிரமித்த மண், அவரவர்க்குச் சொந்தம் ஆயின. இப்படி ஒருவர்க்குச் சொந்தமான மண்ணை மற்றவர் பறிக்க முற்பட்டனர். ஆநிரை பறிக்க எழுந்த போரைப் போல மண்ணுக்காகவும் போர் உருவானது. அது 'வஞ்சி' எனப்பட்டது.

"எஞ்சா மண்நசை வேந்தனை வேந்தன்
அஞ்சுதகத் தலைச்சென்று அடல்குறித் தன்றே" (தொல். புறத்.7)

ஆநிரைகள் மனித குலத்தின் முதல்சொத்தாக நெடிய காலம் இருந்து வந்தன. மனிதன் உழவுத்தொழிலை அறிந்ததும் விளைநிலம் மனிதனின் இரண்டாவது சொத்தாக ஆனது.

செம்மையான முறையில் மனிதன் விவசாயம் செய்ய ஆரம்பித்தது, சுமாராகப் பத்தாயிரம் ஆண்டுகளுக்கு முன்புதான்

என்று மேலே நாம் கண்டபடி, உழவுத்தொழில் வழக்கிற்கு வந்து பத்தாயிரம் ஆண்டுகள் ஆகின்றன எனத் தெரிகிறது. இதனால் வஞ்சிப் போர் உருவான காலம் பத்தாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் - அதாவது கி.மு. 8000 என்று கணித்துக் கூறலாம்.





உழுதொழிலின் வளத்தால் நெசவுத் தொழிலும் உலோகத் தொழிலும் தோன்றின. தங்கம், வெள்ளி எனக் கனிம வளங்கள் பெருகின. இதனால் பண்டமாற்று வாணிகமும் வெளிநாட்டு வாணிகமும் செழித்தன.

"தமவும் பிறவும் ஒப்ப நாடிக்
கொள்வதூஉம் மிகைகொளாது கொடுப்பதூஉம் குறைகொடாது
பல்பண்டம் பகிர்ந்துவீசும்" (பட்டினப்.209-211)

"யவனர் தந்த வினைமாண் நன்கலம்
பொன்னொடு வந்து கறியொடு பெயரும்" (அகம்.149)

உள்நாட்டு வணிகமும் வெளிநாட்டு வணிகமும் செழித்தமைக்கு இவை சான்றுகள்.

தங்கமும் வெள்ளியும் நகையணிகளுக்காக, அலங்காரத்துக் காகப் பயன்படத் தொடங்கின. செம்பு, வெண்கலத்தைவிட அவை ஏற்கெனவே அதிக விலைமதிப்புள்ளவையாக இருந்திருக்க வேண்டும்[143]

என்று எங்கெல்ஸ் கூறுவர். விலைமதிப்புள்ள தங்கம் முதலியவற்றைப் பறிக்கும் நோக்கமாகவும் போர்கள் உருவாயின.

பொன் முதலிய கனிமவளத்தில் சிறந்திருந்தவர் திராவிடர். அவர்கள் இமயம் வரையிலும் பரவி இருந்தனர்.

> மிகமிக முற்காலத்தில் இந்திய நாடு முழுமையிலும் தமிழ் இனத்தைச் சேர்ந்த மக்கள் வாழ்ந்தார்கள். கி.மு. 2000 வரையில் ஒரு புதிய சாதியார் இந்தியாவை அடைந்தார்கள். இவர்கள் ஆரியர் எனப்பட்டார்கள். இவர்கள் வரும்போது, அங்கு உயர்ந்த நாகரிகம் படைத்த மக்கள் வாழ்ந்து கொண்டிருந்தார்கள். அரப்பா, மொகஞ்சதாரோ நாகரிகக் காலம் கி.மு.3500 முதல் கி.மு.2000 வரை[144]

என்று ந.சி.கந்தையா பிள்ளை கூறியுள்ளார். சிந்துசமவெளியில் வாழ்ந்த மக்களை வேதங்கள் 'தஸ்யு' என்று சுட்டும்.

> வேதங்களில் சொல்லப்படும் தஸ்யூக்கள் திராவிடர்களே எனப் பரவலாகக் கூறப்படுகின்றது[145]

என்பர்.

ஆரியர்களிடம் பித்தளை மற்றும் இரும்பும் இருந்தன.[146] சிந்துசமவெளி மக்களிடம் தங்கம் நிறைய இருந்தது. பொன்னும் மணியும் பெருகப் பெருக, அவற்றை எதிரிகளிடமிருந்து பாதுகாப்பதும் தேவையானது. இதன் காரணமாகவே கோட்டை கட்டி வாழும் நாகரிகம் தோன்றியது. அதன் எதிர் விளைவாக, கோட்டையை முற்றுகையிட்டு அதனைத் தனதாக்கிக் கொள்ளும் போர்களும் தோன்றின.

> "முழுமுதல் அரணம் முற்றலும் கோடலும்
> அனைநெறி மரபிற் றாகும் என்ப" (தொல். புறத்.10).



சிந்துசமவெளியில் திராவிடர் கோட்டைகள் கட்டிச் செழிப்பாக வாழ்ந்திருந்தனர். ஆடல் பாடல் கலைகளும் பெருகியிருந்தன. ஆடல் மகளிர்க்குப் பொன்னாலான இழைகளைப் பரிசாக அளித்துச் செல்வச் செருக்குடன் வாழ்ந்தனர் சிந்துசமவெளித் தமிழரசர். சிந்துசமவெளி அகழ்வாய்வில் ஆடல்கலைஞரின் கற்சிலைகள் கிடைத்துள்ளன. அவை அக்கால நிலவுடைமைச் சமூகத்தில் - சிந்து சமவெளித் திராவிட மக்கள் ஆடல் பாடலில் மகிழ்ந்து வாழ்ந்ததைக் காட்டும் சான்றாகும். அங்கு கண்டெடுக்கப்பட்ட ஆடல் கலைஞரின் சிலைகளைக் கீழே காணலாம்.




சிந்துசமவெளித் தமிழர் காலம் கி.மு. 4000 அல்லது அதற்கும் முன்னர்த் தொடங்கி, உழவும் வணிகமும் பெருக, வளமாக வாழ்ந்து வந்த காலக் கட்டத்தில் - கி.மு.2500இல், ஆரியர்கள் சிந்துசமவெளிக்கு வந்தனர்.

> ஆரியர்கள் இந்தியாவை வந்தடைந்தது வெண்கல யுகத்திலேயே என்று தொல்பொருள் ஆய்வாளர்களும் மனித இயல் வல்லுநர்களும் அதிகாரப் பூர்வமாகக் கூறுகின்றனர். அவர்களிடம் இந்தியாவில் வாழ்ந்த ஆதிவாசிகளிடம் இருந்ததைவிடச் சிறந்த அம்பும் வில்லும் இருந்தன. போரில் அவர்கள் குதிரைகளைப் பயன்படுத்தினர்[147]

என்பர். ஆரியர்கள் வந்து ஆயிரம் ஆண்டுகளில் - அதாவது கி.மு. 1500இல், தமிழரின் கோட்டைகளை இடித்தும் நெருப்பிட்டு அழித்தும் சிந்துசமவெளி நாகரிகத்தையே சிதைத்துத் தரைமட்டம் ஆக்கினர். யார் வலியர் என்ற மைந்து பொருளாக வந்த வேந்தரை எதிர்க்கும் தும்பைப் போர் இத்தருணத்தில்தான் தோன்றியது.

> "மைந்து பொருளாக வந்த வேந்தனைச்
> சென்று தலையழிக்கும் சிறப்பிற் றென்ப" (தொல். புறத்.15).




ஆரியர்களின் வருகைக்குப்பின் திராவிடர்களும் போரில் குதிரைகளைப் பயன்படுத்தத் தொடங்கினர் எனத் தெரிகிறது. குதிரைப் படையைத் தும்பைப் போர்க்களத்தில்தான் முதன்முதலாகப் பார்க்க முடிகின்றது.

> "தானை, யானை, குதிரை என்ற
> நோனார் உட்கும் மூவகை நிலையும்" (தொல். புறத்.17)

அதன் பிறகு வரும் வாகைத் திணைக் காலத்திலேயே, குதிரைகளைப் பூட்டிய தேர்ப்படை பற்றிய செய்தி தொல்காப்பியத்தில் வருவதைப் பார்க்கிறோம். தேர்ப்படையை வெல்லுதல் அரிய செயல். எனவே, தேரோரை வென்றதைப் பலவாறு ஆடிக் கொண்டாடி மகிழ்ந்தனர்!





*"தேரோர் தோற்றிய வென்றியும், தேரோர்*
*வென்ற கோமான் முன்தேர்க் குரவையும்*
*ஒன்றிய மரபின் பின்தேர்க் குரவையும்" (தொல். புறத்.21)*

தமிழரின் போரில் தானைப்படை, யானைப்படை, குதிரைப்படை, தேர்ப்படை என்று வெவ்வேறு காலக்கட்டங்களில் படிப்படியாக உருவாகி, காலவாரியாக வளர்ந்துவந்த வரலாற்றை - குதிரைகளைத் தமிழர்க்கு அறிமுகப்படுத்திய ஆரியர் வருகையோடு ஒப்பிட்டுப் பார்த்தால்தான், தமிழரின் திணை வரலாற்றினைத் தெளிவாகப் புரிந்து கொள்ள முடியும்.

**தமிழரின் திணை வரலாறு தொல்காப்பியப் புறத்திணையியலில் நுண்மைச் சுருக்கமாகப் பதிவாகியுள்ளது.** வரலாற்று விழிப்புணர்வு இன்மையால் அதை உரையாசிரியர்கள் சொல்லவில்லை.

உரையாசிரியர்கள்வழி நாம் தொல்காப்பியப் புறத்திணையியலை அறிந்து கொண்டது மிகக் குறைவான செய்திகளே ஆகும். உரையாசிரியர்வழி அறிந்த செய்திகளைச் சுருக்கமாகக் கூறுவதானால் இப்படிக் கூறலாம்:

> ஏழு புறத்திணைகளையும் அவற்றின் துறைகளையும் விளக்குவது புறத்திணையியல். புறத்திணைகள் ஏழனுள் வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை என்னும் நான்கும் தமிழர்களின் போர் வகைகள் ஆகும். தத்தம் தகுதிப்பாட்டை மிகுதிப்படுத்துவது வாகை. நிலையாமை பற்றியது காஞ்சி. அரசனைப் பரவலும் புகழ்ச்சியும் பாடாண் ஆகும்.

இவற்றின் துறைகள் பற்றிய விரிவினையும் பலவாறு விளக்கிச் சென்றனர் உரையாசிரியர். ஆனால், புறத்திணையியல் நூற்பாக்களின் வரிகளுக்கு இடையே வாசித்து, அவற்றில் புதைந்துள்ள வரலாற்றுத் தடயங்களைக் கண்டறிந்து விளக்கிக் கூறும் வரலாற்றறிவோ அது குறித்த முயற்சியோ உரையாசிரியர்களுக்கு இல்லை.

தொல்காப்பியர் ஒரு வரலாற்றிஞர்; உயிரியல் ஆய்வாளர்; மானுடவியல் அறிஞர்; மனிதகுல வரலாற்றுப் பாதையில் இலக்கணம் வகுத்தவர். அவர் தம் நூலினுள் - குறிப்பாகப் புறத்திணையியலில் - கூறியுள்ள வைப்பு முறையில், முதலில் சொன்னது முதலில் நடந்தது; அடுத்துக் கூறியது அடுத்த காலத்தில் நடந்தது. வரலாற்றுப் பார்வையின் அடிப்படையிலேயே அவர் இலக்கணம் வகுத்தார். ஆனால், அவருடைய வரலாற்றுப் பார்வை உரையாசிரியர்களுக்கு இல்லை. இன்றைய சிறிய அளவு வரலாற்று அறிவு கொண்டு, புறத்திணையியல் நூற்பாக்களைக் கவனித்தாலே, சில

புதிய உண்மைகள் கிடைக்கும். எடுத்துக்காட்டாக, ஒருசில உண்மைகளைக் கீழே தருவோம். இவை புதிய செய்திகள்!

வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை என்னும் நான்கு போர்களும் வேறு வேறு காலங்களில் ஒன்றன்பின் ஒன்றாகத் தோன்றின!

இன்றைக்குச் சுமார் முப்பதாயிரம் ஆண்டுகட்முன் தோன்றியது வெட்சிப்போர். அது தோன்றி ஏறத்தாழ இருபதாயிரம் ஆண்டுக் காலம் வேறுவகைப் போரே இல்லை. காரணம், ஆநிரை தவிர வேறுவகைச் சொத்து மனித வரலாற்றில் தோன்றியிருக்கவில்லை. உழவுத் தொழிலை அறிந்து - நிலத்தின் பயன்பாட்டை உணர்ந்து - நிலத்தைச் சொத்தாகக் கருதத் தொடங்கிய காலம் வரையிலும் வஞ்சிப் போர் உருவாக வாய்ப்பே இல்லை!

வெட்சித் திணையின் துறைகள் 'ஈரேழ் துறைத்தே' என்று முதலில் கூறிய தொல்காப்பியர், அதனை அடுத்துத் துடிநிலை, கொற்றவைநிலை என்று இரண்டை மட்டும் ஒரு நூற்பாவாகக் கூறிய பின்னும் தனியே 'எழுமூன்று துறைத்தே' என ஒரு நூற்பா அமைத்தார். இப்படி மூன்று நூற்பாக்களாகப் பிரித்து அமைத்தது ஏன்?... 'ஈரேழ் துறைத்தே' என்று முதலில் வரையறுத்துக் கூறியவர் பின்னர் இன்னும் பல துறைகளை அடுக்கிக் கூறியது ஏன்?... என்ற கேள்விக்கு உரையாசிரியர்கள் எவரும் விளக்கம் அளிக்கவே இல்லை. பின்னர் இன்னும் பல துறைகளை அடுக்கிக் கூறிய அவை அனைத்தும், வெட்சித் திணைக் காலத்துக் கூத்து வகைகள் ஆகும்.

எழுத்து வடிவில் இலக்கியங்கள் தோன்றுவதற்குப் பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னதாகவே அவை மொழியின்றி மௌனக் கூத்தாகவும், பின்னர் மொழி வந்த பிறகு வாய்மொழிப் பாடல் பின்னணியில் ஆடும் கூத்து வடிவிலும் நிகழ்ந்து நிலைபெற்று வந்தன என்று தமிழறிஞர்கள் ஆராய்ந்து கூறியுள்ளனர்.

"நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
பாடல் சான்ற புலனெறி வழக்கம்" (தொல். அகத்.53)

என்ற நூற்பாவினை உரையாசிரியர் கருத்துக்களுடன் ஆராய்ந்த தமிழண்ணல்,

தமிழ் இலக்கியம் கூத்தினின்றும் பிறந்ததாகவே தோன்றுகிறது. அதன் கோட்பாடுகளில் அடிப்படையானவை பலவும் கூத்தின் வழிப்பட்டனவாக உள்ளன. தொடக்கக் காலத்தில், வாய்மொழியாக இருந்தபோது, மனிதன் ஆடிப்பாடக் கற்றிருந்தான். காலஞ் செல்லச் செல்ல, குழு நடனங்கள் கூத்தாக மாறின. தலைவன், தலைவி, தோழி, பாங்கன், தாய், பாணன் என இவ்வாறு பாவித்துக் கொண்டு குழுவாக நின்று ஆடினர். கவிதை நடையிலேயே கூற்று முறை, உரையாடல் முறையாகவும் பிறந்தன. பின்னர் வரிவடிவம் தோன்றி, இலக்கியம் எழுத்தில் வடிக்கப்பட்ட காலத்தில், இந்நாடகப் பண்புகள் பல இலக்கியத்தில் படிந்தன. 'மெய்ப்பாடு' அவிநயமாய்க் கூத்திற்கே உரியது. அது பொருள் புலப்பாட்டுக் கோட்பாடாய் இலக்கியத்தில் இடம்பெறலாயிற்று. இவற்றால் 'நாடக வழக்கு' என இலக்கிய வழக்கைச் சுட்டியதன் ஒட்பம் புலனாகும். இலக்கியத்திற்கு நாடகத் தன்மையே - புனைந்துரை மரபே சிறந்ததாகலின் அதனை முதலிற் கூறி, அதற்கு மூலப் பொருளாய்ப்

பெறப்படும் வாழ்க்கை மரபாம் உலக வழக்கைப் பின்னர்க் கூறினாரென உரையாளர் கூறுவர்[148]

என்று விளக்குவது, இலக்கிய வடிவம் முன்னொரு காலத்தில் கூத்து வடிவமாக இருந்து மாறிய உண்மையை உணர்த்துவதாகும்.

மொழியில்லாக் காலத்தே மௌன அசைவுகளே கூத்தாக - நாடகத் தமிழாக இருந்த நிலை, பின்னர் இசைத் தமிழாகவும் பின்னர் இயற்றமிழாகவுமாக வளர்ந்தாலும், மூன்றும் ஒருசேர நின்றே பிற்காலக் கூத்து நிகழ்ந்தது என்பதனை மதுரைக்காஞ்சி காட்டுகின்றது.

> "மன்றுதொறும் நின்ற குரவை சேரிதொறும்
> உரையும் பாட்டும் ஆட்டும் விரைஇ" (மதுரைக்.615-616)

என்ற அடிகளில் உரையும் (இயற்றமிழும்) பாட்டும் (இசைத் தமிழும்) ஆட்டும் (நாடகத் தமிழும்) ஒருசேரக் கலந்தே குரவைக் கூத்து முதலிய 'சேரிவிழவு' நிகழ்ந்ததை அறிகிறோம். தொன்மை வேட்டைச் சமூகத்து வெட்சித் திணைக் காலத்தில் இலக்கியம் தோன்றியிருக்கவில்லை; ஆனால் கூத்துவகைகள் இருந்தன.

வெட்சியை ஏனைய போர்களுக்கு முந்துற நடத்தி எச்சரிக்கை செய்யும் அடையாளப் போர் என்று இளம்பூரணர் கருதினார். அக் கருத்தினை நச்சினார்க்கினியரும் ஏற்று, "ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்" (புறம்.9) என்ற பாடலை மேற்கோள் காட்டி, அறம் நிகழ, முந்துற நடத்தும் ஓர் அடையாளப் போரே வெட்சி என்பதை வலியுறுத்தினார். இக்கருத்து பிழையானது. தமிழ் நாகரிக வரலாற்றில் வெட்சிப்போர் முதன்முதலில் உருவான போர். அது முழுமுதல் போரே ஆகும்; பிற போர்களுக்கு முந்துற நடத்தும் அடையாளப் போர் அன்று என்பதைத் தெளிதல் வேண்டும்.

மனிதச் சமூக வரலாற்றில் சாகுபடி, உழவு என்ற வழக்காறு தோன்றிச் சுமார் பத்துப் பன்னிரண்டு ஆயிரம் ஆண்டுகள் ஆகின்றன என்பது வரலாறு கூறும் உண்மை. அவ்வாறாயின், வஞ்சிப் போர் வழக்கிற்கு வந்து 10,000 ஆண்டுகளே ஆகின்றன. வஞ்சிப் போர் வந்த பின்னும் ஆநிரைகளைப் பறிக்கும் வெட்சிப் போரும் வழக்கில் இருந்து வந்தது. வஞ்சிப் போர் வளர வளர வெட்சிப் போர் மெள்ள மெள்ள அருகத் தொடங்கியது. சங்க காலத்தில் வெட்சிப் போரே இல்லை என்று சொல்லும் அளவிற்கு அருகிப்போனது! உண்டாட்டு என்ற ஒரு துறையில் கிடைத்துள்ள ஐந்து பாடல்களைத் தவிர, ஏனைய வெட்சித் துறைகளுக்கு எடுத்துக்காட்டச் சங்க இலக்கியங்களில் பாடல்களே இல்லை!

மனித வரலாற்றில் பொன்னும் மணியும் கண்டறிந்து அவை மனிதரின் மூன்றாவது சொத்து என்ற நிலை உருவான பிறகுதான், அவற்றைப் பாதுகாக்கும் முயற்சியாகக் கோட்டை கட்டி வாழ்ந்த நாகரிகம் தோன்றியது. மனித வரலாற்றில் தங்கம் கண்டறியப்பட்டு ஆறாயிரம் ஆண்டுகள் ஆகின்றன என்பர். எனவே, முழுமுதல் அரணம் முற்றலும் கோடலுமான உழிஞைப் போர் வழக்கிற்கு வந்து 6,000 ஆண்டுகள் ஆகின்றன எனலாம். கோட்டையை

இடிப்பதற்கு யானைப்படை தேவை. தானை என்ற காலாட்படை மட்டுமே வஞ்சிப் போர்க் காலம் வரையிலும் தமிழர் போரில் இடம்பெற்றிருக்க, உழிஞைப் போரில் யானைப்படை வழக்கிற்கு வந்தது என உய்த்துணரலாம். தும்பைத் திணையிலேயே யானைப் படை முதலில் பேசப்படுகிறது என்றாலும், அதை உழிஞைப் போரிலேயே பயன்படுத்தத் தொடங்கினர் தமிழர் எனலாம்.

குதிரைப் படை அப்போது தமிழர்க்கு இல்லை. குதிரையே இந்திய மண்ணில் இல்லாத காலம் அது. கைபர் கணவாய் வழியாக ஆரியர்கள் தங்கள் குதிரைகள், ஆநிரைகளோடு இந்தியாவிற்குள் வந்த காலம் கி.மு.2500 என்பர். வணிக முறையில் ஆரியர்களிடமிருந்து குதிரைகளைத் தமிழர் பெற்றனர். சிந்து வெளிக்கு வந்த ஆரியர் மைந்து பொருளாகத் தமிழரை எதிர்த்து அழிக்க முயன்றனர். மைந்து பொருளாக வந்த வேந்தரை அஞ்சுதகத் தலைச்சென்று அடல்குறித்த தும்பைப் போர் இக்காலத்திலேயே தோன்றியது. தும்பைப் போர்க் களத்தில்தான் தானை, யானையோடு குதிரைப் படையை முதன்முதலாகப் பார்க்க முடிகிறது. அப்போது தேர்ப்படை தமிழர்களிடம் இல்லை.

ஆரியர்கள் சிந்துநதிப் பாலத்தை நொறுக்கியும் தமிழர்களின் கோட்டைகளை இடித்தும் நெருப்பிட்டுப் பொசுக்கியும் அழித்த காலம் கி.மு. 1500 என்று வரலாறு கூறுகிறது. தமிழர் ஆரியரிடம் தோற்றுச் சிதறுண்டு தத்தம் தகுதியை மிகுதிப்படுத்த வேண்டிய கட்டாயத்திற்கு ஆளாயினர். அதுதான் வாகை ஒழுக்கம். 3500 ஆண்டுகளுக்கு முன்னரே வாகை தோன்றியது. வாகைத் திணைக் காலத்தில் நடந்த போர்களில் தமிழரிடம் தேர்ப் படையும் வழக்கிற்கு வந்ததை அறிய முடிகிறது.

பெருந்திணை ஒழுக்கம் மிகுந்த காலத்தில், அதன் மறுதலையாக உலக இன்பங்கள் எல்லாம் நிலையற்றவை என்ற உண்மையை உணர்த்த வேண்டிய தேவை ஏற்பட்டது. அதுதான் காஞ்சி ஒழுக்கம். இது உருவான காலம் வாகைக் காலத்திற்குப் பிந்திய இன்றைக்கு 3000 ஆண்டுகளுக்கு முந்திய காலம் எனலாம்.

கைக்கிளை இன்பத்தில் திளைத்த மன்னர்கள் அச் சிறுமையை மாற்றும் முயற்சியாகத் தம்மைப் புலவர்கள் பெருமைப்படுத்திப் பரவலும் புகழ்தலும் செய்யும் பொருட்டு ஆற்றலும் கொடையுமான செயற்கரிய செயல்கள் புரிந்தனர். அதுவே பாடாண் ஒழுக்கம். காஞ்சித் திணைக் காலத்திற்குப் பின் தோன்றிய ஒழுக்கமே பாடாண் என்பது வைப்புமுறையால் தெரிகிறது.

இப்படி வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் என்னும் ஏழு திணைகளும் ஒன்றன்பின் ஒன்றாகத் தோன்றிய காலங்களைக் கணித்துக் காலவாரியாக நிரல்படுத்திக் கூற முடியும். இதற்குத் தொல்காப்பியப் புறத்திணையியலில் தடயங்கள் உண்டு.

வெட்சிப்போர் பற்றிக் கூறும்போது யானைப்படை, குதிரைப்படை என எதுவும் சுட்டப்படவில்லை. இதை வைத்துப் பார்க்கும்போது, அக்காலம் யானையும் குதிரையும் அறிமுகமில்லாத தொல்பழங் காலத்துப் போர் ஆகும் என்ற உண்மையை அறியலாம்.

எதிரியின் தொல்லெயிற்று இவர்தல் என்னும் செயலுக்குக் களிறுகள் தேவை என்பது கொண்டு, யானைப்படை அறிமுகமான காலம் உழிஞைப்போர்க் காலம் என உய்த்துணரலாம்.

தும்பைப் போரில் தானை, யானைப் படைகளோடு குதிரைப்படையும் பேசப்படுவதால், ஆரியர்கள் இந்தியாவிற்கு வந்து கலந்தபின் அவர்களால் தமிழர்க்கு அறிமுகமான குதிரைகள் வந்துவிட்ட காலம் அது என்ற வரலாற்றை அறியலாம்.

வாகைத்திணைக் காலத்திலேயே முன்தேர்க்குரவை, பின்தேர்க்குரவை என்று தேர்ப்படை முதன்முதலாகப் பேசப்படுவதை வைத்து, வாகைத்திணைக் காலம் தும்பைப்போர்க் காலத்தினும் வளர்ச்சி அடைந்த பிற்காலம் என்பதை உய்த்தறியலாம்.

இத்தகைய நுண்ணிய பார்வையோடு அணுகினால், காலவாரியான திணை வரலாற்றுப் பதிவைத் தொல்காப்பியப் புறத்திணையியலில் நாம் தெளிவாகக் கண்டறிய முடியும்.

இனி, தொல்காப்பிய அகத்திணையியல் மற்றும் புறத்திணையியல் அடிப்படையில், தமிழரின் திணை வரலாற்றைத் தொன்மை வேட்டைச் சமூகக் காலம் முதலாகக் காலவாரியாகக் காண்போம்.

## 1. குறிஞ்சி-வெட்சித் திணைக் காலம்





“காதல்தான் அனைத்தின் ஆரம்பமாக இருக்கிறது” (Love is the key for everything) என்று கூறுவார்கள். ‘காதல்’ என்பது வெறும் பாலியல் உணர்ச்சி அன்று. அறன்வழிப்பட்ட பாலியலே தமிழில் காதல், களவு எனப்பட்டது. தமிழர் வாழ்க்கையில் மலையில் வாழ்ந்த தொல்பழங் காலத்தில் உருவான அந்த உயரிய காதல், மலையின் மலர்களில் சிறந்த மலரான ‘குறிஞ்சி’ என்ற பெயரில் உருவகமாகச் சுட்டப்பட்டது.

குரங்குமனிதன் நிலையிலிருந்து மனிதனாகி, அவன் பழக்கவழக்கத்தில் பண்பட்ட காலத்தில் தொடங்கிய நாகரிகமே குறிஞ்சியும் வெட்சியும்.

‘குறிஞ்சி’ என்பது ஆணும் பெண்ணும் காதலில் புணர்ப்பது. குரங்கு நிலையிலும் காதலின்பம் உண்டு. இன்பம் துய்ப்பது என்பது உலகில் எல்லா உயிர்களுக்கும் இயல்பாகவுள்ள பொதுவான வேட்கை.

> “எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது
> தான்அமர்ந்து வரூஉம் மேவற் றாகும்” (தொல். பொருள்.29)

ஆனால், அது அறன் இல்லாத இன்பம். அது குறிஞ்சி எனப்படாது.





"இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு
அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்
காமக் கூட்டம் காணுங் காலை" (தொல். களவி. 1)

என்பதால், அறம் சார்ந்த களவின்பமே 'குறிஞ்சி' எனப்பட்டது என்ற உண்மையை உணர வேண்டும். மனித இனம் தோன்றி அறம் சார்ந்த குறிஞ்சி என்ற உயர் ஒழுக்கம் உருவாவதற்குப் பன்னெடுங்காலம் ஆகியிருக்கும். தமிழர் தொடக்கத்தில் மலையில் வாழ்ந்த குறிஞ்சி நில வாழ்க்கைச் சூழலிலேயே இந்த அறம் சார்ந்த குறிஞ்சிக் களவொழுக்கம் தோன்றியது. அதனால்தான் அந்நாகரிகம், அது பிறந்த நிலத்தின் பெயரால் 'குறிஞ்சி' என்று அழைக்கப்பட்டது. குறிஞ்சி என்ற நாகரிகம் தோன்றிய காலம் எதுவாக இருக்கும்?...



குரங்கு நிலையிலிருந்து முழுமையான மனவளர்ச்சி பெற்ற மனிதன் தோன்றி 35,000 ஆண்டுகள் ஆகின்றன என்று வரலாறு கூறுவதால், குறிஞ்சி ஒழுக்கம் தோன்றிய காலம் கி.மு. 30,000 என்று கணிக்கலாம்.

உணவுக்காக ஒவ்வொரு நாளும் அலைந்து திரிந்து வேட்டையாடுவதில் இடர்ப்பாடு கண்ட தமிழனுக்கு, ஒரே நாளில் நிறைய ஆநிரைகளை வேட்டையாடி வந்தால், காதலியோடு கூடிக் களித்தபடி அவற்றைப் பலநாள் உண்ணலாமே என்ற 'சேமிப்புச் சிந்தனை' பிறந்தது. அவ்வாறே செயலில் இறங்கினான். உண்டது போக எஞ்சிய ஆநிரைகளை வளர்த்தான். ஆநிரை சொத்தாக மாறியது. ஆதித் தமிழரின் முதல் சொத்து ஆநிரை! சொத்து என்பது உருவானதும், சொத்தைப் பறிக்கும் எதிர்வினையும் உருவானது. ஓர் ஆயத்தாரின் ஆநிரைகளை அடுத்த ஆயத்தார் போரிட்டுப் பறித்தல் என்பது உருவானது. தமிழ் இனத்தின் முதல் போர் ஆநிரை கவர்தல். அதுவே வெட்சி!

'வெட்சி' என்பது ஆநிரை கவர்தல். அதாவது, ஒரு கூட்டத்தின் ஆடுமாடுகளை மற்றொரு கூட்டத்தினர் போரிட்டுப் பறித்தல் ஆகும். ஆநிரைகள் மட்டுமே சொத்தாக

இருந்த தொன்மை வேட்டைச் சமூகத்தில் (புதிய கற்காலத்தில்) தமிழரின் வழக்கத்திலிருந்த ஒரே போர் வகைதான் வெட்சி! வேட்டையாடித் திரிந்த தமிழர், ஆநிரைகளைத் தம் உடைமை எனக் கொண்டு அவற்றை வளர்க்கத் தொடங்கிய நாகரிகமும் அதனால் உருவான வெட்சிப் போரும் தொடங்கிய காலம் சுமார் கி.மு.30,000 என்பது தோராயமான ஒரு கணக்கு.

ஆணும் பெண்ணும் காதலில் புணர்ந்த **குறிஞ்சி** என்ற அக ஒழுக்கம் தோன்றிய அதே நிலத்தில், அதே காலக்கட்டத்தில் குறிஞ்சியின் இணை ஒழுக்கமாக **வெட்சி** என்ற புற ஒழுக்கம் தோன்றியது. இந்த விரிவான திணை வரலாற்றையே தொல்காப்பியர் இரத்தினச் சுருக்கமாக,

> "வெட்சி தானே குறிஞ்சியது புறனே" (தொல். புறத்.1)

என்று கூறினார். இம் மாட்டேற்று நூற்பாவிற்கு உரையாசிரியர்கள் கூறும் உரைகள் இலக்கணப் பொருளவாக இல்லை.

இந்நூற்பாவுக்கு இளம்பூரணர்,

> வெட்சி குறிஞ்சிக்குப் புறனாயது எவ்வாறெனின், நிரைகோடல் குறிஞ்சிக்கு உரிய மலைசார்ந்த நிலத்தின்கண் நிகழ்தலானும், அந்நிலத்தின் மக்களாயின் பிறநாட்டு ஆநிரையைக் களவிற்கோடல் ஒருபுடை குறிஞ்சிக்கு உரித்தாகிய களவோடு ஒத்தலானும், அதற்கு அது புறனாயிற்றென்க [150]

என்பர். இவ்விளக்கம் தொல்காப்பியர் கருத்தாகத் தோன்றவில்லை. வரலாற்று ஆசிரியரான தொல்காப்பியர் திணைவரலாற்றுப் பதிவாகக் கூறிய நுட்பமான வரலாற்றைப் புரிந்துகொள்ளாத உரையாசிரியர் இளம்பூரணர் இரு திணைகளுக்கும் எப்படியோ ஒப்புமை கூறி, ஏதோ விடுகதைக்கு விடை தேடுவதைப் போலத் தோன்றுகிறது. இக்கருத்தையா ஆசிரியர் இந்நூற்பாவில் கூறப்போந்தார்? நம் அறிவு ஏற்கவில்லை. இதற்குத் தக்க உரை கூற இயலாத நச்சினார்க்கினியரும் இளம்பூரணரைத் தழுவியே இந்நூற்பாவிற்கு உரையெழுதியுள்ளார்.

'வஞ்சி முல்லையது புறனே' என்பதற்கு இளம்பூரணர், வஞ்சிப் போர் நிகழ்வதற்கு முல்லைக்கு உரிய காடுதான் ஏற்ற இடம் எனவும், கார் காலமே ஏற்ற காலம் எனவும் எந்தக் காரண காரியப் பொருத்தமோ இலக்கியச் சான்றோ இன்றித் தமக்குத் தோன்றியவாறு உரை கூறினார். இன்ன நிலத்தில் இன்ன காலத்தில்தான் இன்ன வகைப் போரை நிகழ்த்துதல் வழக்கம் என்று எங்கேயும் சொல்லப்பட்டுள்ளதா?.. அப்படி எதுவும் இல்லை!

இக்கருத்தை நச்சினார்க்கினியர் ஏற்கவில்லை. ஆயினும், அவர் பங்கிற்கு வேறு வகையில் பொருந்தாத உரையெழுதிச் செல்கிறார்.

> அரசன் பாசறைக்கட் தலைவியைப் பிரிந்திருத்தலும், அவன் தலைவி அவனைப் பிரிந்து மனைவயின் இருத்தலுமாகிய உரிப்பொருளும் ஒப்பச் சேறலின் வஞ்சி முல்லைக்குப் புறனாயிற்று [152]

என்று கூறுகிறார். அரசன் தலைவியைப் பிரிந்திருத்தல் வஞ்சிப் போரில் மட்டும்தானா?... போர்வயின் பிரிவு என்பது எல்லா வகைப் போர்களிலுமே நடப்பதுதான்! நச்சினார்க்கினியரின் இக்கருத்தும் ஏற்கக் கூடியதன்று.

வெட்சிப் போர் பற்றிய உரையாசிரியர்களின் மற்றொரு கருத்தும் பிழையானது. "போர்க்கு முந்துற நிரைகோடல் சிறந்ததாகலானும்" என்பதால், வஞ்சி, உழிஞை, தும்பை முதலிய பிற போர்களுக்குமுன் எச்சரிக்கை செய்யும் அடையாளக் குறிப்பாக வெட்சியை இளம்பூரணர் கருதுவதை உணரலாம். இதற்கு என்ன ஆதாரம்?...

நச்சினார்க்கினியரும் இதே கருத்தினை உரைப்பர். அதற்கு அவர்,

"ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்" (புறம்.9)

என்று தொடங்கும் புறநானூற்றுப் பாடலை ஆதாரமாகக் காட்டுவர். அப்பாடல் பாடாண் திணைப் பாடல் ஆகும். தமிழ்ப் போர்முறையில் பிற்காலத்தில் உருவான உயர்ந்த நாகரிகத்தை அப்பாடல் காட்டுகிறதே யன்றி, அது முந்துற நடத்தும் அடையாளக் குறிப்பான வெட்சி அன்று என்பதை அறிஞர் உணர வேண்டும்.

**மாட்டேற்று நூற்பாக்கள் ஏழும், காலந்தோறும் தமிழர் நாகரிகம் வளர்ந்து வந்த வரலாற்றைக் கூறும் திணை வரலாற்றுப் பதிவுகள்! அவை ஏழும் உரையாசிரியர்களுக்குப் புரியாத புதிர்களாகவே இருந்தன.** அதனால் அவர்கள், ஏதோ விடுகதைக்கு விடை தருவது போலப் பொருத்தமற்ற உரையெழுதிச் சென்றனர். மாட்டேற்று நூற்பாக்கள் ஏழனுக்கும் அவர்கள் வலிந்து கூறுகிற - அறிவுக்குப் பொருந்தாத - அவ் உரைகளைப் புறந்தள்ளுவதே தக்கது.

கி.மு. 30,000 ஆண்டுக் காலத்தில் தொடங்கிய நாகரிகமே குறிஞ்சியும் வெட்சியும் என்ற வரலாற்று உண்மையைத் தெளிதல் தக்கதாம்.

## 2. முல்லை-வஞ்சித் திணைக் காலம்





தொன்மை வேட்டைச் சமூகத்தில், ஒருத்தி தன் மனமொத்த ஆணுடன் காதலில் புணர்ந்த **குறிஞ்சி** என்ற அக ஒழுக்கம் தோன்றிய அதே நிலத்தில், அதே காலக்கட்டத்தில் குறிஞ்சியின் இணை ஒழுக்கமாக **வெட்சி** (ஆநிரை கவர்தல்) என்ற புற ஒழுக்கம் தோன்றியது. குறிஞ்சியும் வெட்சியும் தோன்றி நிலைத்த வெகுகாலத்திற்குப்பின், ஒரு குறிப்பிட்ட காலத்தில், உழவுத் தொழில் தோன்றி, நிலம் என்ற இரண்டாவது சொத்து உருவான பிறகு - அரசும் திருமணமும் தோன்றிய காலத்தில் - **முல்லை** என்ற அகஒழுக்கமும் **வஞ்சி** என்ற புறஒழுக்கமும் தோன்றின.

முல்லைத் திணையின் உரிப்பொருள் 'இருத்தல்' என்பர். 'இருத்தல்' என்ற சொல் இக்காலத்தில் அமர்தல், உட்கார்தல் என்ற பொருளைத் தருவதால் இதனை நம்மில் சிலர் பிறழப் பொருள் கொள்ளக் கூடும். எனவே, இதன் பொருளைத் தெளிவுற விளக்குவது தேவையாகிறது.

மக்கள் நுதலிய அன்பின் ஐந்திணைகளின் உரிப்பொருள்கள் ஐந்தும் தலைவியை மையப்படுத்திக் கூறப்பட்ட செயல்கள் என்பதை முதலில் உணர்தல் வேண்டும்.

"புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்
ஊடல் இவற்றின் நிமித்தம் என்றிவை
தேருங் காலை திணைக்குரிப் பொருளே" (தொல். அகத். 14)

புணர்தல் - தலைவி (தலைவனோடு) புணர்தல் - காதலில் இணைதல்
பிரிதல் - தலைவி (தலைவனைப்) பிரிதல்

இருத்தல் - தலைவி (தலைவனுக்காக) இருத்தல்
இரங்கல் - தலைவி (தலைவனுக்காக) இரங்கல்
ஊடல் - தலைவி (தலைவனோடு) ஊடுதல்

என்ற தெளிவினை முதலில் பெறுதல் வேண்டும். மேற்சுட்டிய ஐந்து உரிப்பொருள்களில் புணர்தல், பிரிதல், ஊடல் ஆகிய மூன்றும் எளிமையாகப் பொருள் தருவதைப்போல இருத்தலும் இரங்கலும் எளிதில் பொருள் தரவில்லை.

'இருத்தல்' என்பதற்கு இளம்பூரணர், "இருத்தலாவது, தலைமகன் வருந்துணையும் ஆற்றியிருத்தல்" என்று பொருள் கூறியுள்ளார். நச்சினார்க்கினியர், "பருவம் வருந்துணையும் ஆற்றியிருந்தமை" என்று பொருள் கூறினார். தலைவி தன் பாலியல் வேட்கையை ஆற்றி இருத்தல் என்னும் கற்பொழுக்கமே இருத்தல் என்று உரையாசிரியர்கள் இருவரும் பொருள் கொண்டது பொருத்தமே. பிரிந்து சென்ற தலைவன் திரும்பி வரும் வரையிலும் தன் புலன் அடக்கி ஆற்றியிருத்தலே 'இருத்தல்' என்ற ஒழுக்கம் என்பது தெளிவாகிறது.

'முல்லை' ஒழுக்கம் 'கற்பு' என்பதோடு தொடர்புடையது. தலைவியின் கற்பு என்பதனைக் குறிக்கும் இடங்களில் பெரும்பாலும் புலவர்கள் 'முல்லை சான்ற கற்பு' என்று குறிப்பிடுவதைக் காண முடிகிறது.

"முல்லை சான்ற கற்பின் மெல்லியல்
மடமான் நோக்கின் வாணுதல் விறலி" (சிறுபாண்.30-31)

"அல்லில் ஆயினும் விருந்துவரின் உவக்கும்
முல்லை சான்ற கற்பின்
மெல்லியல் குறுமகள் உறைவின் ஊரே" (நற்.142)

"முல்லை சான்ற கற்பின்
மெல்லியல் குறுமகள் உறைவின் ஊரே" (அகம்.274)

சங்க காலத்தில் 'கற்பு' என்ற சொல் 'நிறை' என்ற பொருளைத் தந்தாலும் தொல்காப்பியர் காலத்தில் அது 'திருமணம்' என்ற பொருளைத் தந்தது.

"கற்புஎனப் படுவது கரணமொடு புணரக்
கொளற்குரி மரபின் கிழவன் கிழத்தியைக்
கொடைக்குரி மரபினோர் கொடுப்பக் கொள்வதுவே" (தொல். கற்.1)

தமிழர் வரலாற்றில் அரசு என்ற அமைப்பு உருவான பிறகு, அரசனுக்குப் பிறகு அவன் மகன் என்ற வாரிசு உரிமை என்ற முறை உருவாக்கப்பட்ட காலத்தில் - ஒருத்தியின் பிள்ளைப்பேற்றுக்கு அவளோடு புணர்ந்த ஆணும் காரணமாவான் என்ற அறிவியலறிவு நிலைபெற்ற காலத்தில் - 'அவனுக்குமட்டும் ஒருத்தி' என்ற திருமண முறை வலியுறுத்தப்பட்டது.

'கரணம்' என்பது திருமணச் சடங்கு. இல்லறம் நடத்தும் அவனும் அவளும் கணவன்-மனைவி என்ற உண்மையை ஊருக்கு உணர்த்தும் சடங்கு முறை கரணம் எனப்பட்டது. ஆதியில் காதலர் கரணம் இன்றியே இல்லறம் துய்த்தனர். இம்முறையில் சிக்கல் எதுவும் இன்றிப் பல காலம் கழிந்தது. (துஷ்யந்தன்-சகுந்தலை கதையில் வருவது போல) மணந்த நிகழ்வை மணந்தவன் மறுக்கும் பொய்யும் வழுவும் தோன்றியது கண்ட பெரியோர், கரண முறையை வகுத்தனர் என்று கூறுவர்.

"பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்
ஐயர் யாத்தனர் கரணம் என்ப" (தொல். கற்.4)

தமிழ்த் திருமணச் சடங்குகள் தொடக்கத்தில் எளிமையானவையாக இருந்தன. புரோகிதர் இல்லை. வேதத்தை முன்வைத்து நடக்கவில்லை. அக்கினி (நெருப்பு) சாட்சியாக வைக்கப்படவில்லை. இத்தகைய தமிழ்த் திருமண முறையைச் சங்ககாலப் பாடல்களிலேயே காண முடிகின்றது. அகநானூறு 86, 136 ஆகிய இரண்டு பாடல்களும் இதற்குச் சான்று.

"உழுந்துதலைப் பெய்த கொழுங்களி மிதவை
பெருஞ்சோற் றமலை நிற்ப நிரைகால்
தண்பெரும் பந்தர்த் தருமணல் ஞெமிரி
மனைவிளக் குறுத்து மாலை தொடரிக்
கனைஇருள் அகன்ற கவின்பெறு காலைக்
கோள்கால் நீங்கிய கொடுவெண் திங்கள்
கேடில் விழுப்புகழ் நாள்தலை வந்தென
உச்சிக் குடத்தர் புத்தகல் மண்டையர்
பொதுசெய் கம்பலை முதுசெம் பெண்டிர்
முன்னவும் பின்னவும் முறைமுறை தரத்தரப்
புதல்வற் பயந்த திதலைஅவ் வயிற்று
வாலிழை மகளிர் நால்வர் கூடிக்
கற்பினின் வழாஅ நற்பல உதவிப்
பெற்றோற் பெட்கும் பிணையை யாகென
நீரொடு சொரிந்த ஈரிதழ் அலரி
பல்லிருங் கதுப்பின் நெல்லொடு தயங்க
வதுவை நன்மணங் கழிந்த பின்றைக்
கல்லென் சும்மையர் ஞெரேரெனப் புகுதந்து
பேரில் கிழத்தி யாகெனத் தமர்தர

ஓரில் கூடிய உடன்புணர் கங்குல்
கொடும்புறம் வளைஇக் கோடிக் கலிங்கத்து
ஒடுங்கினள் கிடந்த ஓர்புறந் தழீஇ
முயங்கல் விருப்பொடு முகம் புதை திறப்ப
அஞ்சினள் உயிர்த்த காலை ஆழநின்
நெஞ்சம் படர்ந்தது எஞ்சாது உரையென
இன்னகை இருக்கைப் பின்யான் வினவலிற்
செஞ்சூட்டு ஒண்குழை வண்காது துயல்வர
அகமலி உவகையள் ஆகி முகன்இகுத்து
ஒய்யென இறைஞ்சி யோளே மாவின்
மடங்கொள் மதைஇய நோக்கின்
ஒடுங்கீர் ஓதி மாஅ யோளே" (அகம்.86)

இப்பாடலின் துறை: வாயின் மறுத்த தோழிக்குத் தலைமகன் சொல்லியது. தலைமகளைக் கூடி இன்புற்றிருந்த தலைமகன் பண்டு நிகழ்ந்தது சொற்று இன்புற்றிருந்ததூஉமாம்.

'உணர்ப்புவயின் வாரா ஊடற்கண் தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது' என்னும் துறையில் அமைந்த அகநானூறு 136ஆம் பாடல் பின்வருமாறு.

"மைப்புறப் புழுக்கின் நெய்க்கனி வெண்சோறு
வரையா வண்மையொடு புரையோர்ப் பேணிப்
புள்ளுப் புணர்ந்து இனிய வாகத் தெள்ளொளி
அங்கண் இருவிசும்பு விளங்கத் திங்கட்
சகடம் மண்டிய துகள்தீர் கூட்டத்துக்
கடிநகர் புனைந்து கடவுட் பேணிப்
படுமண முழவொடு பரூஉப்பணை இமிழ
வதுவை மண்ணிய மகளிர் விதுப்புற்றுப்
பூக்கணும் இமையார் நோக்குபு மறைய
மென்பூ வாகைப் புன்புறக் கவட்டிலை
பழங்கன்று கறித்த பயம்பமல் அறுகைத்
தழங்குகுரல் வானின் தலைப்பெயற் கீன்ற
மண்ணுமணி யன்ன மாயிதழ்ப் பாவைத்
தண்ணறு முகையொடு வெண்ணூல் சூட்டித்
தூவுடைப் பொலிந்து மேவரத் துவன்றி
மழைபட் டன்ன மணல்மலி பந்தர்
இழையணி சிறப்பிற் பெயர்வியர்ப் பாற்றித்
தமர்நமக் கீத்த தலைநாள் இரவின்
உவர்நீங்கு கற்பின்எம் உயிருடம்பு அடுவி
முருங்காக் கலிங்கம் முழுவதும் வளைஇப்
பெரும்புழுக் குற்றநின் பிறைநுதற் பொறிவியர்
உறுவளி யாற்றச் சிறுவரை திறவென

ஆர்வ நெஞ்சமொடு போர்வை வவ்வலின்
உறைகழி வாளின் உருவுபெயர்ந் திமைப்ப
மறைதிறன் அறியா ளாகி ஒய்யென
நாணினள் இறைஞ்சி யோளே பேணிப்
பரூஉப்பகை யாம்பற் குரூஉத்தொடை நீவிச்
சுரும்பிமிர் ஆய்மலர் வேய்ந்த
இரும்பல் கூந்தல் இருள்மறை ஒளித்தே" (அகம். 136)

இவ்விரு பாடல்களிலும் திருமண நடைமுறைச் சடங்குகள் என்று வெகு சிலவே சொல்லப்பட்டுள்ளன. விடிவதற்கு முந்திய கருக்கலில் திருமணம் நடந்தது. மண வீட்டு முற்றத்தில் பந்தலிட்டுப் புதுமணல் பரப்பி அமைத்தனர். காவலையுடைய மணவீட்டைப் புனைந்தனர். கடவுளை வாழ்த்தினர். மணமுழவும் மருதநிலப் பறையும் முழங்கின. ஊர்மக்கள் திரளாகக் கூடினர். நெய்வெண்சோறு வந்தோர்க்கெல்லாம் வளமாகப் பரிமாறப்பட்டது. மணமகளுக்குக் கோடிப்புடவை உடுத்தினர்; தலையில் மலர்களைச் சூட்டினர்; அணிமணிகள் பூட்டினர்; கையில் (காப்புக் கட்டுவது போல) வெண்ணூல் கட்டினர். அது இக்கால மங்கல அணிக்கு நிகரானது எனத் தெரிகிறது. மணமுடித்த மங்கல மகளிர் இச்சடங்கினை மேற்கொண்டனர். முதிய செம்பெண்டிர் எனப்பட்டோர் திருமணச் சடங்கினை முன்நின்று முறைப்படுத்தினர். பிள்ளைகளைப் பெற்றுச் சிறந்த மகளிர் நான்கு பேர், "கற்பில் வழாமல், கொண்ட கணவன் விரும்பும் பிணையை யாக" என்று வாழ்த்தி மணமகள் தலையில் நீரும் நெல்லும் பெய்தனர். அதோடு வதுவைச் சடங்கு நிறைவுறும். "பெரியவீட்டுப் பெண்ணாக வாழ்க!" என்று வந்தோர் மணமகளை வாழ்த்த, மணமகள் நாணத்தால் நெளிய, அன்றிரவே மணமக்கள் தனியறையில் மனையறம் தொடங்கி இனிதே வாழத் தொடங்குவர். இவைதாம் பழந்தமிழ்த் திருமணச் சடங்குகள்.

இதனை, " ஆரியச் சார்பற்ற திருமணமுறை" என்று பி.டி.சீனிவாச ஐயங்கார் கூறியுள்ளார். ஆரியர் வருகைக்குப் பின்னர்த் தமிழ்த் திருமணச் சடங்கில் பல மாற்றங்களைத் திணித்தனர். முதுசெம் பெண்டிருக்குப் பதிலாக முதுபார்ப்பனர் முறைசெய்யும் சடங்காளியாக முன்நிற்பது, நான்மறை வாசகங்களை முணுமுணுப்பது, நெருப்புக் குண்டம் வளர்ப்பது, தீயைச் சாட்சியாக வைத்துப் பலரும் காணுமாறு அதை வலம் வருவது முதலியன சுட்டத்தக்க சடங்குகளாக அமைந்தன. சங்ககாலத்திற்குப் பிந்திய கால இலக்கியமான சிலப்பதிகாரத்தில் கோவலன்-கண்ணகி திருமணச் சடங்கினை இளங்கோவடிகள்,

"மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிடத்
தீவலஞ் செய்வது காண்பார்கண் நோன்பென்னை" (சிலப். 1:51-52)

என்று வருணிப்பதில் தெளிவாகத் தெரிகின்றது. கோவலன்-கண்ணகி போன்ற அரசர்க்கு இணையான மேட்டுக்குடியினர் ஆரிய வழக்கினை மேற்கொண்டனர் என்பதால், அக்கால அரசர்களும் இவ்வாறான ஆரியச் சார்புக்கு ஒத்துப் போயினர் எனக் கருதலாம்.

தமிழர் திருமணத்தில் அந்தணர் தலையீடும், தீ வளர்த்து அதை வலம் வருதலும் கலித்தொகைப் பாடல் ஒன்றில் காண முடிகின்றது.

"காதல்கொள் வதுவைநாள் கலிங்கத்துள் ஒடுங்கிய
மாதர்கொள் மானோக்கின் மடந்தைதன் துணையாக
ஒதுடை அந்தணன் எரிவலஞ் செய்வான்போல்" (கலித்.69)

என்பது சிந்திக்கத்தக்கது. தமிழர் திருமணச்சடங்கில் ஆரியத் தாக்கம் சங்க காலத்திலேயே அருகித் தொடங்கிவிட்டது எனக் கருதலாம். அல்லது கலித்தொகைக் காலம் சிலப்பதிகாரக் காலத்தை ஒட்டிய காலம் என்றும் கருத இடமுண்டு.

முல்லை-வஞ்சித் திணைக்காலத்தின் தொடக்கத்தில், ஆரியர்கள் தமிழ் மக்களோடு கலக்கவில்லை. அப்போது தமிழர் திருமணச் சடங்கு மிக எளிமையாகவே இருந்தது. திருமணச் சடங்கின் குறிக்கோள், தலைவி கற்புடன் ஒழுகும் ஒழுக்கம் ஒன்றையே குறித்து அமைந்தது. ஆதியில் 'கற்பு' என்றாலே அது 'திருமணம்' என்ற பொருளையே தந்தது.

தமிழ் மண்ணில் கற்பு என்ற ஒழுக்கம் பொதுவாக வலியுறுத்தப்பட்டாலும் அரசரின் தேவிக்கே பெரிதும் பேசப்பட்டது. சங்ககால இலக்கியங்களில் அரசரைப் பாராட்டும் புறப் பாடல்களில் இதனைக் காணலாம்.

"ஆறிய கற்பின் அடங்கிய சாயல்" (பதிற்.16)

"ஒலிந்த கூந்தல் அறஞ்சால் கற்பின்" (பதிற்.31)

"காமர் கடவுளும் ஆளும் கற்பின்" (பதிற்.65)

"கற்புஇறை கொண்ட கமழுஞ் சுடர்நுதல்" (பதிற்.70)

"மீனொடு புரையும் கற்பின்
வாணுதல் அரிவையொடு காண்வரப் பொலிந்தே" (பதிற்.89)

"ஆறிய கற்பின் தேறிய நல்லிசை
வண்டார் கூந்தல் ஒண்டொடி கணவ" (பதிற்.90)

"செயிர்தீர் கற்பின் சேயிழை கணவ" (புறம்.3)

"வடமீன் புரையும் கற்பின் மடமொழி" (புறம்.122)

"மறங்கடிந்த அருங்கற்பின்
அறம்புகழ்ந்த வலைசூடிச்
சிறுநுதல் பேரகல் அல்குல்
சிலசொல்லிற் பலகூந்தல்நின்
நிலைக்கொத்தநின் துணைத்துணைவியர்" (புறம்.166)

"நாணலது இல்லாக் கற்பின் வாணுதல்
மெல்லியல் குறுமகள் உள்ளிச்
செல்வலத்தை சிறக்கநின் நாளே" (புறம்.196)

"கடவுள் சான்ற கற்பின் சேயிழை" (புறம்.198)

"அடங்கிய கற்பின் ஆய்நுதல் மடந்தை" (புறம்.249)

"கற்புடை மடந்தை தற்புறம் புல்ல" (புறம்.383)

வடமீன் (அருந்ததி) போன்ற கற்பினாள் என்று அரசி புகழப்படுவதும் 'கற்பின் சேயிழை கணவ' என்று அரசன் போற்றப்படுவதும் சங்க கால வழக்கமாக இருந்ததை அறிய முடிகிறது. தொல்காப்பியர் காலத்தில் கற்பு என்ற சொல் திருமணத்தைக் குறித்தாலும், நாணம், மடன் போன்ற உயர்ந்த ஒழுக்கம் என்ற பொருளிலும் வழங்கியதை மறுக்க முடியாது. 'காட்டலாகப் பொருள' பற்றிக் கூறும் பொருளியல் நூற்பா 53இல் "ஒப்பும் உருவும்" எனத் தொடங்கி அடுக்கிக் கூறப்படும் வரிசையில் கற்பும் நாணும் மடனும் இடம்பெற்றுள்ள உண்மை சுட்டத்தக்கது. மேலும் களவியலில்,

"உயிரினும் சிறந்தன்று நாணே, நாணினும்
செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று" (தொல். களவியல் 22)

என்று கற்பு ஓர் உயர்ந்த ஒழுக்கம் என்ற பொருளில் வந்துள்ளதையும் காண முடிகின்றது.

நிலவுடைமை வந்த பிறகே அரசு வந்தது. அரசு வந்த பிறகே திருமண முறையும் கற்பு என்ற கோட்பாடும் வந்தன. இந்த ஒழுக்கங்கள் எல்லாம் ஒரே காலத்தில் தோன்றியவை. அதாவது, நிலத்தைப் பறிக்கும் வஞ்சிப் போரும் கற்பு ஒழுக்கமான முல்லையும் ஒரே காலத்தில் தோன்றின.

தமிழ் வரலாற்றில் உழவு என்ற அறிவியல் வளர்ச்சியில், பொன்விளையும் பூமி என நிலத்தின் பயன்பாடு அறிந்த நிலவுடைமைச் சமுதாயத்தில் உருவான போரே வஞ்சிப்போர் ஆகும்.

"எஞ்சா மண்நசை வேந்தனை வேந்தன்
அஞ்சுதகத் தலைச்சென்று அடல்குறித் தன்றே" (தொல். புறத்.6).

மண்ணின் மீது கொண்ட ஆசை காரணமாக உருவான போர் அது என்பதால், உழவுத் தொழில் கண்டறிந்த பின்னால், நிலம் சொத்தாகக் கருதப்பட்ட காலத்தில் உருவான போரே வஞ்சி என்பதை அறியலாம். உலகில் விவசாயம் கண்டறிந்து 10 - 12 ஆயிரம் ஆண்டுகள் ஆகின்றன என்பர். இதனால், வஞ்சித்திணைக் காலம் கி.மு. 10,000 முதல் தொடங்குவதாகக் கணித்துக் கூறலாம்.

நிலம் சொத்தாகக் கருதப்பட்ட நிலவுடைமைச் சமூகத்திலேயே அரசு என்ற நிறுவனம் நிலைபெற்றது. அரசின் வாரிசு முறைப்படுத்தும் திருமணம் (கற்பு) என்பதும், அரசனின் மனைவியைப் பிற ஆடவர் குறுகா அருங்கடி வரைப்பில் வைத்துப் பாதுகாத்தல் என்ற வழக்கமும் [இது கிரேக்க நாட்டிலும் பின்பற்றப்பட்டது. 'சீசரின் (அரசனின்) மனைவி சந்தேகத்திற்கு அப்பாற்பட்டவளாக இருக்க வேண்டும்" என்ற சொல்வழக்கு உருவானது இதனைக் காட்டும்] அரசன் பிரிந்த காலங்களில் அரசி

(தலைவி) கற்போடு ஆற்றி 'இருத்தல்' என்ற முல்லை ஒழுக்கமும் உருவாயின. முல்லை என்ற அக ஒழுக்கம் உருவான அதே காலத்தில்தான் வஞ்சி என்ற புற ஒழுக்கமும் திணை வரலாற்றில் உருவானது. இக் கருத்தையே நுண்மைச் சுருக்கமாக,

"வஞ்சி தானே முல்லையது புறனே" (தொல். புறத்.6)

என்றார் தொல்காப்பியர். இதற்கு இளம்பூரணர், வஞ்சிப் போர் நிகழ்வதற்கு முல்லைக்கு உரிய காடுதான் ஏற்ற இடம் எனவும், கார் காலமே ஏற்ற காலம் எனவும் எந்த இலக்கியச் சான்றும் இன்றித் தமக்குத் தோன்றியவாறு உரை கூறினார். இதற்கு நச்சினார்க்கினியர்,

> அரசன் பாசறைக்கட் தலைவியைப் பிரிந்திருத்தலும், அவன் தலைவி அவனைப் பிரிந்து மனைவயின் இருத்தலுமாகிய உரிப்பொருளும் ஒப்பச் சேறலின் வஞ்சி முல்லைக்குப் புறனாயிற்று

என்று கூறினார். உரையாசிரியர் களின் கருத்துகள் ஏற்கக் கூடியனவாக இல்லை.

அரசு உருவாகி அரசியலில் வாரிசு முறையை முறைப்படுத்தும் வகையில் திருமணம் (கற்பு) என்ற சீரிய ஒழுக்கமான முல்லைத் திணை உருவான காலத்திலேயே அதற்கு இணையான புறஒழுக்கமாக, மாற்றார் மண்ணை விரும்பி அதைக் கவரும் பொருட்டு அவரோடு போரிடும் வஞ்சி என்ற வழக்கமும் தோன்றியது என்ற கருத்தையே, "வஞ்சி தானே முல்லையது புறனே" (தொல். புறத்.6) என்ற நூற்பா உணர்த்திற்று என்பது தெளிவு. மாற்றார் நாட்டினைக் கவரும் வஞ்சிப் போர் என்பது உலகில் இன்று வரையிலும் அழியாமல் நிலைத்து நிற்கிறது.

## 3. மருதம்-உழிஞைத் திணைக் காலம்





தமிழர் வரலாற்றில் சொத்துகள் என்பன ஆநிரை, நிலவளம் என்று அடுத்தடுத்து தோன்றிய பின்னர் மூன்றாவது சொத்தாகப் பொன்னும் மணியும் எனக் கனிமவளங்கள் உருவாகிப் பெருகிய ஒரு கட்டத்தில் அக ஒழுக்கமாக ஊடல் உரிப்பொருளான மருதத் திணையும் அதற்கு இணையான புற ஒழுக்கமாக உழிஞைத் திணையும் தோன்றின. இந்த மாற்றம் மெள்ள மெள்ள நிகழ, முல்லை-வஞ்சிக் காலத்திற்குப் பிறகு வெகு காலம் ஆயிற்று.

முல்லை நிலக் காடுகளில் ஆடு மாடு மேய்த்தல் மற்றும் உழவு என்னும் தொழில் செய்துவந்த தமிழர், உழவினை மேம்படுத்தும் பணியாக, ஆற்றங்கரைக் காடுகளை அழித்து வயல்களாகச் 'செய்'தனர். செய்யப் பட்டதால் வயல் 'செய்' எனப்பட்டது.

உழவுத் தொழிலில் ஆண்டின் பாதி நாள்கள் ஓய்வு கிடைத்ததால், ஆடல் பாடல் கலைகள் வளர்ந்தன. 'பண்' வளரக் காரணமான மருத நிலம் 'பணை' (பண்+ஐ) எனப்பட்டது. ஆடல்மகளிராம் விறலியர்க்கு அரசர் பொன் இழைகளை வாரி வழங்கினர். விறலியரை அரசர்க்குக் கூட்டியவர் பாணர்கள். புறநானூற்றுப் பாடலொன்று இதைத் தெளிவுறுத்துகின்றது.

"பாண்முற் றுகநின் நாள்மகிழ் இருக்கை
பாண்முற்று ஒழிந்த பின்றை மகளிர்
தோள்முற் றுகநின் சாந்துபுலர் அகலம்" (புறம்.29)

அக்கால அரசர்கள் விறலியராம் ஆடல் மகளிர்க்குப் பொன்னிழைகளைக் கணக்கின்றி வழங்கியமைக்குச் சங்கப் பாடல்களில் நிறையச் சான்றுகள் உண்டு. அவ்வழக்கம் மாற்றக்கூடாத விதிமுறையாகவே மாறிப்போனது. சிலப்பதிகாரத்தில் ஆடல்மகள் மாதவிக்கு 1008 கழஞ்சு பொன் மாலையை அரசன் பரிசாக அளிக்கும் இடத்தில் இளங்கோவடிகள்,

"விதிமுறைக் கொள்கையின் ஆயிரத் தெண்கழஞ்சு
ஒருமுறை யாகப் பெற்றனள் அதுவே" (சிலப்.3:162-163)

என்று 'விதிமுறைக் கொள்கை' எனக் குறிப்பிடுவது காணலாம். அக்கால அரசர்களுக்கும் ஆடல்மகளிர்க்கும் பாலியல் உறவு இருந்தது. இவ்வாறே வளம் நிறைந்த தலைவரிடத்தும் பரத்தைமை ஒழுக்கம் பரவலானது. பரத்தைமையால் இல்வாழ்க்கையில் ஊடல் உருவானது. ஊடல்தீர்க்கும் வாயில்களுள் ஒருசாராரான கூத்தர்கள், நாடகம்வழி நல்லறம் புகட்டித் தொல்லவை உரைத்தல் எனப் பல்லாற்றானும் ஊடல் தணித்தனர்.

"தொல்லவை உரைத்தலும் நுகர்ச்சி ஏத்தலும்
பல்லாற் றானும் ஊடலின் தணித்தலும்
உறுதி காட்டலும் அறிவுமெய் நிறுத்தலும்
ஏதுவின் உணர்த்தலும் துணிவு காட்டலும்
அணிநிலை உரைத்தலும் கூத்தர் மேன" (தொல். கற்.27).

ஊடலும் அது தீர்த்தலும் 'மருதம்' என்ற அக ஒழுக்கம் ஆனது.

தமிழரின் தேடலில் பொன்னும் மணியும் எனக் கனிம வளங்கள் பெருகின. அவை மனிதகுலத்தின் மூன்றாவது சொத்தாயின. தமிழர் தங்கத்தை அறிந்தது கி.மு. 4000 ஆண்டுக் காலக்கட்டத்தில் ஆகும். பொன்னைத் திரட்டிக் குவித்த அரசன் அவற்றை எதிரிகளிடமிருந்து பாதுகாக்கும் நோக்கத்தில் கோட்டை கட்டி அரண் அமைக்கும் நாகரிகம் தோன்றியது. அதன் எதிர்வினையாக, செல்வம் நிரம்பிய முழுமுதல் அரணம் முற்றலும் கோடலும் என உழிஞைப்போர் உருவானது. மருதம் என்ற அக ஒழுக்கம் தோன்றிய காலத்தில் தான், அதன் புற ஒழுக்கமாக உழிஞை தோன்றியது. இத் திணை வரலாற்றையே சுருக்கமாக,

"உழிஞை தானே மருதத்துப் புறனே" (தொல். புறத்.9)

என்றார் தொல்காப்பியர். இதற்கு உரையாசிரியர்கள் கூறிய உரை தவறு ஆகும். அதனைப் புறந்தள்ளுவதே தக்கதாம்.

## 4. நெய்தல்-தும்பைத் திணைக் காலம்





கி.மு. 4000 - சிந்துசமவெளியில் தமிழர் கோட்டை கொத்தளமெனச் செம்மாந்த நாகரிகம் பரப்பி வாழ்ந்துவந்த காலம் ஆகும். கி.மு. 2000 ஆண்டுக் காலக்கட்டத்தில் ஆரியர்கள், ஈரான் பகுதியிலிருந்து தங்கள் ஆடுமாடுகள், குதிரைகளுக்கு மேய்ச்சல் நிலம் தேடி, கைபர் கணவாய் வழியாகப் 'பஞ்சநாதம்' என்ற பஞ்சாபிற்கு வந்து, படிப்படியாகச் சிந்து சமவெளிக்குக் குடிவந்தார்கள். ஆரியர் வந்த தொடக்கக் காலத்தில் தங்களின் குதிரைகளைத் தமிழர்க்கு வணிக ரீதியாக வழங்கினர். ஆரியர் உறவால் தமிழரின் போர்ப் படையில் குதிரைப்படை என்ற புதிய படையும் இடம்பெற்றது. அடைக்கலமாக வந்த ஆரியர் தங்களுக்குள் அரசு ஒன்றை உருவாக்கித் தமிழின வேந்தரைத் தருக்குடன் எதிர்க்கத் தொடங்கினர். வச்சிராயுதம் என்னும் வலுவான இரும்பினால் செய்யப்பட்ட ஆயுதத்தைக் கையாளுவதில் வல்லவனான இந்திரன் என்னும் வேந்தனைத் தங்களின் கடவுளுக்கு ஒத்தவனாகக் கருதி, தங்கள் சோமபானத்திற்கு அவனை அடிமையாக்கி அவன் உதவியோடு தமிழரை (தஸ்யுக்களை) அழிக்கத் தொடங்கினர். இதற்கு ரிக் வேதம் சான்று. அத்தகைய சூழலில் உருவான போரே தும்பை! இதுகாறும் ஆநிரை, வளமான நிலம், பொன் முதலான சொத்துக் காரணமாக உருவான போர்களைப் போலில்லாமல், சொத்தை மறந்து தமிழினத்தின் வீரம், மானம் ஒன்றே கருத்தாக, யார் வலியவர் என்ற செருக்கில், மைந்து பொருளாக உருவானதே தும்பைப்போர் ஆகும்.

"மைந்து பொருளாக வந்த வேந்தனைச்
சென்று தலையளிக்கும் சிறப்பிற் றென்ப" (தொல். புறத்.15)

என்ற நூற்பாவில், 'மைந்து பொருளாக வந்த வேந்தன்' என்ற தொடர், தமிழினத்தை எதிர்த்து 'வேற்றினத்தவனாக வந்த' (ஆரிய) வேந்தன் என்று பொருள் தொனிப்பதை உணரலாம். பொருளாசை, மண்ணாசை, பொன்னாசை என்ற இயல்பான காரணங்களால் வெட்சி, வஞ்சி, உழிஞை ஆகிய போர்கள் உருவாகியிருக்க, தும்பைப் போர் மட்டும்தான், தருக்குடன் வந்தவர்க்கு நல்ல பாடம் கற்பிக்க எழுந்த தன்மானப் போராகத் தெரிகிறது.

அதிரப் பொருவது தும்பை என்பர். இருமருங்கும் எண்ணிறந்த போர் மறவர் பெருங் கூட்டமாகக் கலந்துகொள்ளும் தும்பைப் போர், பரந்த கடற்கரை போன்ற பெருவெளியில் நடந்தது எனக் கருதலாம். கடற்கரையில் வாழ்ந்த தமிழ் மக்களின் தலைவன் கடற்போர், கடல் வாணிகம் அல்லது மீன் வேட்டை காரணமாகக் கடலுக்குள் சென்று அவன் திரும்பி வரும் வரை, தலைவி இரங்கல் உணர்வுடன் இருப்பாள். "இரங்கலாவது ஆற்றாமை"[159] என்பர் இளம்பூரணர்.

> இனிக் கடலுங் கானலுங் காண்டொறும் இரங்கலும், தலைவன் எதிர்ப்பட்டு நீங்கியவழி இரங்கலும், பொழுதும் புணர்துணைப் புள்ளுங் கண்டு இரங்கலும் போல்வன இரங்கல்[160]

என்று கூறும் நச்சினார்க்கினியர் 'இரங்கல்' என்ற சொல்லுக்குப் பொருள் கூறவில்லை. உரையாசிரியர்களுடைய உரைவழி இரங்கல் என்பது இன்னது என்று விளங்க முடியவில்லை. சங்ககால நெய்தல் திணைப் பாடல்களிலும் நெய்தலின் உரிப்பொருள் தெளிவுற விளக்கப்படவில்லை. குறிஞ்சி, முல்லை, மருதம் ஆகிய திணைகளுக்கு உரிய உரிப்பொருள்களும் விரவியே சங்க கால நெய்தல் திணைப் பாடல்கள் விளங்குகின்றன. இரங்கல் என்றால் தலைவனுடைய பிரிவை ஆற்ற முடியாமல் புலம்புதல் என்று கருத முடிகின்றது.

நெய்தல்திணைக் காலம் கடல்வாணிகம் செழித்திருந்த காலம். வணிகம், மீன்வேட்டை காரணமாகத் தலைவன் தலைவியைப் பெரிதும் பிரிந்திருக்கும் காலம் அது. அக்காலத்தில் தோன்றிய போரே தும்பை! இத்திணை வரலாற்றையே தொல்காப்பியர் சுருக்கமாக,

> "தும்பை தானே நெய்தலது புறனே" (தொல். புறத். 14)

என்று கூறினார். குதிரைப்படையை முதன்முதலாகத் தும்பைப் போரிலேயே காண்பதால், இது ஆரியர் தமிழரோடு கலந்த கி.மு. 2000 ஆண்டுக்குப் பின் உருவான போர்முறை என்று அறியலாம்.

## 5. பாலை-வாகைத் திணைக் காலம்





'தஸ்யுக்கள்' எனப்பட்ட தமிழர்கள் சிந்துவெளியில் ஆரியர்களால் கி.மு. 1500இல் தோற்கடிக்கப்பட்டனர் என்பது ரிக் வேதத்தால் தெரிகிறது. ஆரியரிடம் தோல்வியுற்ற பின்னர், இமயத்தை வட எல்லையாகக் கொண்டிருந்த **தமிழர், சிறுகச்சிறுகத் தெற்கே வேங்கடம் வரை விரட்டப்பட்டனர்.** வலிமையான குதிரைப்படையையும் வச்சிராயுதனான இந்திரனின் இரட்டைக் குதிரைகள் பூட்டிய தேர்ப்படையையும் வைத்து ஆரியர்கள் வலிமை பெற்றிருந்ததால், வடநாட்டில் பரவியிருந்த தமிழர், தம் வாழிடம் இழந்து வறுமையுற்றனர். பொருள் தேடல், தத்தம் தகுதியை மிகுதிப்படுத்துதல், போருக்கான புதிய தேர்ப்படையைத் திரட்டுதல் முதலிய

பல காரணங்களால் ஆடவர்கள் தேயம் கடந்து செல்லும் நிலை நேர்ந்தது. தலைவன் பிரியத் தலைவி பிரிவுத் துயரில் தனித்து வாழ்ந்தாள். வறட்சியாலுற்ற பிரிவு பாலை எனப்பட்டது. தாவில் கொள்கைத் தத்தம் கூற்றைப் பாகுபட மிகுதிப்படுத்தல் - பொருள் வளத்தாலும் வாழ்க்கைத் தரத்தாலும் மக்களும் அரசனும் தத்தம் தகுதியை மிகுதிப்படுத்தலே வாகை எனப்பட்டது.

"தாவில் கொள்கைத் தத்தம் கூற்றைப்
பாகுபட மிகுதிப் படுத்தல் என்ப" (தொல். புறத்.19)

பார்ப்பன வாகை, அரச வாகை, வாணிக வாகை, வேளாண் வாகை, அறிவன் வாகை, தாபத வாகை, பொருநர் (போர்வீரர்) வாகை என அரசர் உள்ளிட்ட மக்கள் பற்றிய வாகை ஏழு ஆகும். வறட்சியும் பிரிவும் எனப் பாலை உருவானபோது, அதன் எதிர்வினையாக, தத்தம் தகுதியை மிகுதிப்படுத்தும் வாகை உருவானது. இதனையே,

"வாகை தானே பாலையது புறனே" (தொல். புறத்.18)

என்றார் ஆசிரியர். வாகைத்திணைக் காலத்திலேயே முன்தேர்க்குரவை, பின்தேர்க்குரவை எனத் தேர்ப்படைகள் தமிழரின் போர் வரலாற்றில் முதன்முதலாக இடம்பெற்றன. தும்பைத் திணைக் காலத்தில் (கி.மு. 2000) தமிழர் படையில் குதிரைப்படை இடம்பெற்றதைத் தொடர்ந்து, ஒரு வளர்ச்சிக் கட்டத்தில் 'குதிரைகள் பூட்டிய தேர்ப்படை' இடம்பெற்ற காலம் வாகைத்திணைக் காலம் எனலாம். எனவே, வாகைத்திணைக் காலம் கி.மு. 1500 என்று இதன் காலத்தை ஒருவாறு கணிக்கலாம்.

## 6. பெருந்திணை-காஞ்சித் திணைக் காலம்



வாகைத் திணைக் காலத்தின் பின்னர்த் தமிழர் வரலாற்றில் வளமும் வலிமையும் பெருகின. வளத்தாலும் வலிமைச் செருக்காலும் உருவான ஒரு மனவெழுச்சியாக, ஒரு பெண்ணின் இணக்கமின்றியே ஒருவன் அவளை அடையத் துடிக்கும் காமவெறி 'பெருந்திணை' என்ற பெயரில் ஓர் ஒழுக்கமாக உருவானது. ஒருத்தியின் காதலைப் பெறாத ஒருவன் ஊரறிய மடலேறி அவளுக்குப் பழி ஏற்படுத்தி வலிந்து அவளை மணக்க முயலும் மடல்திறம் என்ற கயமைத் தந்திரம், தனக்கு இளமையுணர்வு தீர்ந்த மலட்டு நிலையிலும் ஒருத்தியைப் பாலியலாகத் துன்புறுத்துதல், பிறர் மனைவிமீது தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதியில் வேட்கையுறல், தான் ஆசைப்படும் தனி ஒருத்திமீது மிக்க காமத்து வன்புணர்ச்சியை நாடுதல் என்னும் பாலியல் வன்முறை நான்கும் பெருந்திணைக் குறிப்பு என்பர்.

"ஏறிய மடல்திறம் இளமை தீர்திறம்
தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம்
மிக்க காமத்து மிடலொடு தொகைஇச்
செப்பிய நான்கும் பெருந்திணைக் குறிப்பே" (தொல். அகத்.51)

இப் பாலியல் வன்முறைகள் உருவாகிய அதே காலத்தில் அதன் எதிராக - உலகில் உயிர், உடைமை, இன்பம் எல்லாம் நிலையற்றவை - ஒப்பற்ற சிறப்பினையுடைய பலவகையிலும் நிலையாமையே உலகத்தின் இயல்பு நெறியாகும் என்னும் காஞ்சித் தத்துவம் உருவானது.

"பாங்கரும் சிறப்பின் பல்லாற் றானும்
நில்லா உலகம் புல்லிய நெறித்தே" (தொல். புறத்.23)

பெருந்திணை உருவான அதே காலத்தில் நிலையாமையும் வந்தது என்ற இந்த வரலாற்றையே தொல்காப்பியர் இரத்தினச் சுருக்கமாக,

"காஞ்சி தானே பெருந்திணைப் புறனே" (தொல். புறத்.22)

என்றார். வாகைச் செழிப்பில் செருக்குற்றுப் பெருந்திணை ஒழுக்கத்தை மேற்கொண்டனர் தமிழர். இதனால், வாகைத்திணைக் காலத்தை ஒட்டிய கி.மு. 1300 முதல் காஞ்சித்திணைக் காலம் என்று கணிக்கலாம்.

## 7. கைக்கிளை-பாடாண் திணைக் காலம்




பொதுமக்கள் மத்தியில் காஞ்சித் தத்துவம் வலியுறுத்தப்பட்டாலும், அரசர்களின் போக்கு வேறுவிதமாக இருந்தது. காமஞ் சாலா இளைய சிறுமியரை அந்தப்புரங்களில் நிரப்பினர் அரசர். பருவத்திற்கு வராத குழவி மருங்கினும் காமங் கொள்வது கைக்கிளை எனப்பட்டது. காம உணர்வே வராத இளஞ் சிறுமியரித்து, இன்பம் கனியாத துன்பம் எய்தி (சாம பேத தான தண்ட உத்திகளில்) நன்மையான வழி, தீமையான வழி என இருதிறத்தாலும் முயன்று, தன்னைப் பற்றியும் அவளைப் பற்றியும் பெருமையாகத் தருக்கிப் பலவாறு பேசியும், மறுமொழியாக எதிர்ச்சொல் ஏதும் பெறானாகியும், தனக்குத்தானே பேசி இன்பம் அடைவதில் பொருந்தித் தோன்றும் பாலியலே கைக்கிளைக் குறிப்பு என்பர்.

"காமஞ் சாலா இளமையோள் வயின்
ஏமஞ் சாலா இடும்பை எய்தி

நன்மையும் தீமையும் என்றிரு திறத்தால்
தன்னொடும் அவளொடும் தருக்கிய புணர்த்துச்
சொல்லெதிர் பெறாஅன் சொல்லி இன்புறல்
புல்லித் தோன்றும் கைக்கிளைக் குறிப்பே" (தொல். அகத்.50)

இத்தகைய பாலியல் வக்கிரம் பண்டைய மன்னர்களிடத்தில் மிகுந்த புழக்கத்தில் இருந்தது. பிற்கால உலா இலக்கியங்களில் பேதை, பெதும்பைச் சிறுமியர்களும் தம்மீது காதல் கொண்டு பிதற்றுவதுபோன்ற கற்பனையில் திளைத்த அரசர்கள், தம் அவைக்களப் புலவர்களை அவ்வாறே பாடவைத்து மகிழ்ந்தது, பண்டைய அரசர்கள் துய்த்த கைக்கிளை வழக்கத்தின் எச்சம் என்று கருதலாம். இளமகளிர் தம் படுக்கையில் உடனுறைவதால், ஒரு முதியோனின் ஆயுள்காலம் நீளும் என்ற மூடநம்பிக்கை இக்காலத்தில் பெரிய வீடுகளில் இருப்பதைப் போலவே அக்காலத்தும் இருந்தது எனலாம். அது புல்லிய உறவு; சிறு உறவு; கைக்கிளை! கைக்கிளையால் உற்ற இழிவினை மாற்ற, அரசர் ஓர் உத்தியைக் கையாண்டனர். தம் பரம்பரைக் கொடிச் சிறப்பு, போர் வீரர்களின் அறுவகைத்திறன் முதலிய தம் பேராற்றல், கொடை முதலான பிற பெருமைகளைப் புலவர்களைக் கொண்டு பாட வைத்து ஈடுசெய்தனர். அரசரைப் 'பரவலும் புகழ்தலும்' பாடாண் (பாடு+ஆண் = ஆண்டானைப் பாடு) ஆயிற்று. அரசர்களிடத்தில் கைக்கிளை என்ற புல்லிய வழக்காறு உருவான அதே காலத்திலேயே பாடாண் என்ற பீடும் பெருமையுமான பாடல் வழக்காறும் உருவானது. இதையே நுண்மைச் சுருக்கமாகத் தொல்காப்பியர்,

"பாடாண் பகுதி கைக்கிளைப் புறனே" (தொல். புறத்.25)

என்றார். தமிழ்ப் புலவர்கள், இழிவான பெருந்திணை, கைக்கிளை சார்ந்த பாடல்களை நிறையப் பாடவில்லை. பாடாண் திணைப் பாடல்கள் சங்க இலக்கியங்களில் பரவலாக நிறையக் கிடைப்பதால், பாடாண் திணைக் காலம் தொல்காப்பியருக்குச் சற்றே முந்திய அணுக்கக் காலமான கி.மு. 1000 முதலாகத் தொடங்கியது என்று கணித்துக் கூறலாம்.

வெட்சித்திணைக் காலம் என்ற பழைய வேட்டைச் சமூகக் காலமான கி.மு.30,000 முதல், பாடாண்திணைக் காலம் என்ற தொல்காப்பியரின் அணுக்கக் காலமான கி.மு. 1000 வரை, ஏறத்தாழ 30,000 ஆண்டுக் காலத் தமிழரின் திணை வரலாற்றுச் சுருக்கம் இதுவாகும்.

## தமிழர் திணைவரலாற்று அட்டவணை

| புற ஒழுக்கம் | இணையான அக ஒழுக்கம் | தோராயமான காலமும் வரலாற்றுக் குறிப்பும் | நாகரிகக் குறிப்பு | போர்ச்செயல் பற்றிய செய்தி |
|---|---|---|---|---|
| 1. வெட்சி | குறிஞ்சி | கி.மு.30,000 | ஆதி வேட்டைச் முதல் | ஆநிரை கவர்தல் சமூகம் (ஆநிரை சொத்து) |
| 2. வஞ்சி | முல்லை | கி.மு.8,000 முதல் (இமயம் முதலாகத் தமிழர்) | உழவு மற்றும் அரசின் தோற்றம் (நிலம் சொத்து) | ஆநிரை, நிலம் கவர்தல் |
| 3. உழிஞை | மருதம் | கி.மு.4,000 முதல் (சிந்துசமவெளியில் தமிழர்) | கோட்டை நாகரிகம் (பொன் சொத்து) | ஆநிரை, நிலம், பொன் கவர்தல் |
| 4. தும்பை | நெய்தல் | கி.மு.2,000 முதல் (தமிழர்-ஆரியர் மோதல்) | குதிரைப்படைத் தோற்றம் (மைந்து-சொத்து) | மைந்துபொருளாகப் போர் போர் நடந்தது |
| 5. வாகை | பாலை | கி.மு.1,500 முத (ஆரியரால் தமி! பின்னடைவு) | தேர்ப்படையின் தோற்றம் | தத்தம் தகுதியைப் பெருக்குதலே குறி |
| 6. காஞ்சி | பெருந்திணை | கி.மு.1,300 மு (வேங்கடத்தின் தெற்கே தமிழர் | மகளிருடன் பாலியல் வன்முறை | ஆநிரை கவர்தல் மிக அருகியது |
| 7. பாடாண் | கைக்கிளை | கி.மு.1,000 மு (தொல்காப்பிய காலத்திற்கு மு சங்ககாலம் வ | சிறுமியருடன் பாலியல் வக்கிரம் | ஆநிரை கவர்தல் அற்றுப்போனது |

# குறிப்புகள்

1. தமிழண்ணல், தொல்காப்பியர், 2001, ப.69.
2. தமிழண்ணல், தொல்காப்பியர், 2001, ப.81.
3. கார்த்திகேசு சிவத்தம்பி, பண்டைத் தமிழ்ச் சமூகம் - வரலாற்றுப் புரிதலை நோக்கி..., 2010, ப.4.
4. ந.சி.கந்தையா பிள்ளை, ஆரியர்-தமிழர் கலப்பு, 1946, ப.4.
5. ந.சி.கந்தையா பிள்ளை, தமிழர் சரித்திரம், 1947, ப.39.
6. ஞா.தேவநேயப் பாவாணர், தமிழ் இலக்கிய வரலாறு, 2009, ப.17.
7. இளம். (உரை ஆ.), தொல்காப்பியம் எழுத்ததிகாரம், இளம்பூரணம், கழக வெளியீடு, 2004, ப.75.
8. நச்சி. (உரை ஆ.), தொல்காப்பியம், எழுத்ததிகாரம், நச்சினார்க்கினியம், கழக வெளியீடு, 1966, ப.82.
9. இளம். (உரை ஆ.), தொல்காப்பியம் எழுத்ததிகாரம், இளம்பூரணம், கழக வெளியீடு, 2004, ப.258.
10. நச்சி. (உரை ஆ.), தொல்காப்பியம், எழுத்ததிகாரம், நச்சினார்க்கினியம், கழக வெளியீடு, 1966, ப.264.
11. சேனா. (உரை ஆ.), தொல்காப்பியம், சொல்லதிகாரம், சேனாவரையருரை, 2004, ப.3.
12. நச்சி (உரை ஆ.), தொல்காப்பியம், சொல்லதிகாரம், நச்சினார்க்கினியருரை, கழக வெளியீடு, 1962, பக்.3-4.
13. இளம். (உரை ஆ.), மு.அருணாசலம் பிள்ளை (உரைவள ஆசிரியர்), தொல்காப்பியம் அகத்திணையியல் உரைவளம், 1994, ப.10.
14. நச்சி. (உரை ஆ.), மு.அருணாசலம் பிள்ளை (உரைவள ஆசிரியர்), தொல்காப்பியம் அகத்திணையியல் உரைவளம், 1994, பக்.22-23.
15. சோம. (உரை ஆ.), மேலது, ப.30.
16. பேரா. (உரை ஆ.), தொல்காப்பியம் பொருளதிகார மூலமும் பேராசிரியருரையும், பாகம்-இரண்டு, கணேசையர் பதிப்பு, 2007, ப.205.
17. வ.சுப.மாணிக்கம், தமிழ்க் காதல்,2009, ப.175.
18. மேலது, ப.194.

19. மேலது, ப.88.
20. மேலது, பக்.89-90.
21. மேலது, 2009, ப.198.
22. மேலது, பக்.88-89.
23. மு.இராகவையங்கார், தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி, 1928, ப.15
24. சோம. (உரை ஆ.), மு.அருணாசலம் பிள்ளை (உரைவள ஆசிரியர்), தொல்காப்பியம் அகத்திணையியல் உரைவளம், 1994, ப.563.
25. வ.சுப.மாணிக்கம், தமிழ்க் காதல், 2009, ப.177.
26. இளம். (உரை ஆ.), மு.அருணாசலம் பிள்ளை (உரைவள ஆசிரியர்), தொல்காப்பியம் பொருளதிகாரம் அகத்திணையியல் உரைவளம், 1994, பக்.259-260.
27. வ.சுப.மாணிக்கம், தமிழ்க் காதல், 2009, ப.88.
28. தமிழண்ணல், தொல்காப்பியர், 2001, ப.28.
29. சி.இலக்குவனார், தொல்காப்பிய ஆராய்ச்சி, (ஆண்டு இல்லை), பக்.12-14.
30. க.வெள்ளைவாரணன், தமிழிலக்கிய வரலாறு - தொல்காப்பியம், 1962, பக்.87-96.
31. ஞா.தேவநேயன், தமிழ் இலக்கிய வரலாறு, 1979, ப.139.
32. மு.வை.அரவிந்தன், உரையாசிரியர்கள், 1968, பக்.173-228.
33. தமிழண்ணல், உலகத் தமிழிலக்கிய வரலாறு (தொன்மை முதல் கி.பி.500 வரை), 2004, ப.11.
34. நச்சி. (உரை ஆ.), பத்துப்பாட்டு மூலமும் மதுரையாசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியர் உரையும், 1974, ப.123.
35. பொ.வே.சோமசுந்தரனார் (உரை ஆ.), பத்துப்பாட்டு மூலமும் உரையும், தொகுதி-II, கழக வெளியீடு, 2007, ப.100.
36. நச்சி. (உரை ஆ.), பத்துப்பாட்டு மூலமும் மதுரையாசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியர் உரையும், 1974, ப.373.
37. பொ.வே.சோமசுந்தரனார் (உரை ஆ.), பத்துப்பாட்டு மூலமும் உரையும், இரண்டாம் பகுதி, 1968, மதுரைக்., ப.92.
38. நச்சி. (உரை ஆ.), பத்துப்பாட்டு மூலமும் மதுரையாசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியர் உரையும், 1974, ப.504.
39. பொ.வே.சோமசுந்தரனார் (உரை ஆ.), பத்துப்பாட்டு மூலமும் உரையும், இரண்டாம் பகுதி, 1968, குறிஞ்சிப்., ப.59.
40. நச்சி. (உரை ஆ.), பத்துப்பாட்டு மூலமும் மதுரையாசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியர் உரையும், 1974, ப.559.

41. பொ.வே.சோமசுந்தரனார் (உரை ஆ.), பத்துப்பாட்டு மூலமும் உரையும், இரண்டாம் பகுதி, 1968, பட்டினப்., ப.62.

42. நச்சி. (உரை ஆ.), பத்துப்பாட்டு மூலமும் மதுரையாசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியர் உரையும், 1974, ப.646.

43. பொ.வே.சோமசுந்தரனார் (உரை ஆ.), பத்துப்பாட்டு மூலமும் உரையும், இரண்டாம் பகுதி, 1968, மலைபடு., ப.113.

44. உ.வே.சாமிநாதையர் (உரை ஆ.), குறுந்தொகை, 1962, ப.103.

45. மேலது, ப.429.

46. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உரை ஆ.), பதிற்றுப்பத்து மூலமும் விளக்க உரையும், 2010, ப.229.

47. மேலது, ப.574.

48. பொ.வே.சோமசுந்தரனார் (உரை ஆ.), பரிபாடல் மூலமும் உரையும், கழக வெளியீடு, 1964., ப.261.

49. மேலது, ப.262.

50. மேலது, ப.433.

51. ந.மு.வேங்கடசாமி நாட்டார், ஆர்.வேங்கடாசலம் பிள்ளை (உரை ஆ.), அகநானூறு, மணிமிடை பவளம், (வெ.பெரி.பழ.மு. காசிவிசுவநாதன் செட்டியாரால் வெளியிடப்பெற்றது), 1964, ப.95.

52. உ.வே.சாமிநாதையரவர்கள் ஆராய்ச்சிக் குறிப்புடன், புறநானூறு மூலமும் உரையும், 1985, ப.65.

53. உ.வே.சாமிநாதையரவர்கள் ஆராய்ச்சிக் குறிப்புடன், புறநானூறு மூலமும் உரையும், 1985, ப.73.

54. மேலது, ப.295.

55. மேலது, ப.400.

56. மேலது, ப.556.

57. பிங்கலந்தை என்னும் பிங்கல நிகண்டு (மூலமும் உரையும்), கழக வெளியீடு, 1968, ப.447.

58. தொகு.ஆ. பெயரில்லை, கழகத் தமிழ் அகராதி, 1969, ப.537.

59. ந.சி.கந்தையா, செந்தமிழ் அகராதி, 2009, ப.350.

60. நா.கதிரைவேற்பிள்ளை, தமிழ்மொழியகராதி, 1981, ப.769.

61. அ.குமாரசுவாமிப்பிள்ளை, இலக்கியச் சொல்லகராதி, 1878, ப.95.

62. ஆ.சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி, 1983, ப.818.

63. சு.அ.இராமசுவாமிப் புலவர், சிறப்புப் பெயர் அகராதி, 1970, ப.300.

64. TAMIL LEXICON, Vol. III - Part I, University of Madras, 1982, P.1874.

65. முத்து. சண்முகம்பிள்ளை (பதி.ஆ.), பெருஞ்சொல்லகராதி, தொகுதி இரண்டு, 1989, ப.505.
66. மேலது, ப.413.
67. பழனி.அரங்கசாமி (பதி.ஆ.), பெருஞ்சொல்லகராதி, தொகுதி மூன்று, 1992, ப.269.
68. தா.வே.வீராசாமி முதலிய பலர் (பதி.ஆ.), பெருஞ்சொல்லகராதி, தொகுதி ஒன்று, 1988, ப.4.
69. J.P.Fabricius, Tamil and English Dictionary, 1972, P.519.
70. Wikipedia, the free encyclopedia.
71. en.wikipedia.org/wiki/Thinai
72. மு.பழநியப்பன், வரலாற்றுக்கு முன் வையகம், 1986, ப.22.
73. சி.எஸ்.தேவ்நாத், உலகம் பிறந்த கதை, 2009, ப.9.
74. மேலது.
75. மு.பழநியப்பன், வரலாற்றுக்கு முன் வையகம், 1986, ப.11.
76. எஸ்.ஏ.பெருமாள், மனிதகுல வரலாறு, 2010, பக்.14-15.
77. ப.ஐயம்பெருமாள், தமிழக வானவியல் சிந்தனைகள், 2006, ப.49.
78. மு.பழநியப்பன், வரலாற்றுக்கு முன் வையகம், 1986, ப.23.
79. மேலது, ப.25.
80. மேலது, ப.27.
81. மேலது, ப.28.
82. தே.ஆண்டியப்பன், தொல்காப்பியம் - பொருளதிகாரம், 2001, பக்.390-391.
83. சார்லஸ் டார்வின், தமிழ்ச் சுருக்கம்: ராஜ் கௌதமன், இயற்கையின் தேர்வின் வழியாக உயிரினங்களின் தோற்றம், 1985.
84. மு.பழநியப்பன், வரலாற்றுக்கு முன் வையகம், 1986, பக்.21-22.
85. மு.பழநியப்பன், வரலாற்றுக்கு முன் வையகம், 1986, பக்.33-34.
86. தீக்கதிர், தமிழ் நாளிதழ், 3.3.2010, ப.8.
87. மு.பழநியப்பன், வரலாற்றுக்கு முன் வையகம், 1986, பக்.39-40.
88. கா.அப்பாத்துரை, குமரிக் கண்டம் அல்லது கடல்கொண்ட தென்னாடு, 2004, பக்.39-40.
89. மேலது, ப.34.
90. ஐ.சண்முகநாதன், கற்காலம் முதல் கம்ப்யூட்டர் காலம் வரை உலக வரலாறு, 2009, ப.4.
91. மு.பழநியப்பன், வரலாற்றுக்கு முன் வையகம், 1986, ப.92.
92. பிரபாகர் சான்ஸ்கிரி, தமிழில்: க.மாதவ், மனிதக் கதை, 2010, ப.63.

93. பிரபாகர் சா-ன்ஸ்கிரி, தமிழில்: க.மாதவ், மனிதக் கதை, 2010, ப.64.
94. சி.எஸ்.தேவ்நாத், உலகம் பிறந்த கதை!, 2009, ப.71.
95. மு.பழநியப்பன், வரலாற்றுக்கு முன் வையகம், 1986, ப.91.
96. மேலது, ப.94.
97. சி.எஸ்.தேவ்நாத், உலகம் பிறந்த கதை,2009, ப.146.
98. எஸ்.ஏ.பெருமாள், மனிதகுல வரலாறு, 2010, பக்.58-61.
99. கா.அப்பாத்துரை, குமரிக் கண்டம் அல்லது கடல்கொண்ட தென்னாடு, 2004, ப.42.
100. ஞா.தேவநேயப் பாவாணர், தமிழ் வரலாறு, 2009, பக்.78-79.
101. கா.அப்பாத்துரை, குமரிக் கண்டம் அல்லது கடல்கொண்ட தென்னாடு, 2004, ப.22.
102. மேலது, ப.29.
103. மேலது,.www.the apricity.com/showthread.
104. கே.கே.பிள்ளை, தமிழக வரலாறு மக்களும் பண்பாடும், 2008, ப.28.
105. மு.பழநியப்பன், வரலாற்றுக்கு முன் வையகம், 1986, ப,95.
106. மேலது, ப.95.
107. மேலது, ப.39, 51.
108. நா.மகாலிங்கம் (கட்டுரை ஆசிரியர்), 'லெமூரியா - குமரிக்கண்டக் கடல்கோள்கள்', சிற்பி பாலசுப்பிரமணியம், அமுதன் (பதி.ஆ.), வளமார் கொங்கு வரலாறும் பண்பாடும், 2010, பக்.10-11.
109. கொ.அ.அன்தோவா முதலிய மூவர், இந்தியாவின் வரலாறு, 1979, பக்.16-37.
110. டி.டி.கோசாம்பி, தமிழாக்கம்: ஆர்.எஸ்.நாராயணன், பண்டைய இந்தியா, 2008, ப.99.
111. அ.மார்க்ஸ், ஆரியக் கூத்து, 2009, பக்.84-95.
112. மேலது, ப.39.
113. Romila Thaper, A History of India, Vol.I, New York, Penguin, 1982, P.30.
114. ஜோசப் இடமருகு, தமிழில்: த.அமலா, பிராமண மதம்,1996, ப.18.
115. டி.டி.கோசாம்பி, தமிழாக்கம்: ஆர்.எஸ்.நாராயணன், பண்டைய இந்தியா, 2008, ப.136.
116. மேலது, ப.101.
117. வீ.அரசு (செவ்விதாக்கம் செய்தவர்), ரிக் வேதம், தொகுதி-1, 2004, ப.92. (மண்டலம்-1, சூக்தம்-33: 8.).

118. மேலது, ப.25. (மண்டலம்-1, சூக்தம்-8: 7.).
119. மேலது, ப.92. (மண்டலம்-1, சூக்தம்-33: 7.).
120. மேலது, ப.364. (மண்டலம்-1, சூக்தம்-130: 8.).
121. மேலது, ப.19. (மண்டலம்-1, சூக்தம்-5: 4.). ப.92. (மண்டலம்-1, சூக்தம்-33: 4.).
122. வீ.அரசு (செவ்விதாக்கம் செய்தவர்), ரிக் வேதம், தொகுதி-1, 2004, ப.92, (மண்டலம்-1, சூக்தம்-33: 8.).
123. மேலது, ப.566 (மண்டலம்-1, சூக்தம்-20:8.)
124. சனல் இடமருகு, தமிழில்: த.அமலா, வேதங்கள் ஓர் ஆய்வு, 1996, ப.78.
125. மேலது, பக்.90-92.
126. கா.சுப்பிரமணிய பிள்ளை, இலக்கிய வரலாறு, 2009, ப.40.
127. ஜோசப் இடமருகு, தமிழில்: த.அமலா, பிராமண மதம்,1996, ப.21.
128. டி.டி.கோசாம்பி, தமிழாக்கம்: ஆர்.எஸ்.நாராயணன், பண்டைய இந்தியா, 2008, ப.135.
129. வீ.அரசு (செவ்விதாக்கம் செய்தவர்), ரிக் வேதம், தொகுதி-2, 2004, ப.412. (மண்டலம்-7, சூக்தம்-20: 5.).
130. ராகுல சாங்கிருத்தியாயன், ரிக் வேத கால ஆரியர்கள், 2008, ப.98.
131. ஜோசப் இடமருகு, தமிழில்: த.அமலா, பிராமண மதம்,1996, ப.37.
132. வீ.அரசு (செவ்விதாக்கம் செய்தவர்), ரிக் வேதம், தொகுதி-1, 2004, ப.433. (மண்டலம்-1, சூக்தம்-162: 12.).
133. டி.வி. சதாசிவ பண்டாரத்தார், ‘பதிற்றுப்பத்தும் பதிகங்களும்’, ஔவை துரைசாமிப் பிள்ளை (உரை ஆ.), பதிற்றுப்பத்து மூலமும் விளக்க உரையும், 2010, ப.50.
134. இ.எம்.எஸ்.நம்பூதிரிபாத், தமிழில்: பி.ஆர்.பரமேஸ்வரன், இந்திய வரலாறு, 2009, ப.24.
135. பிரெடெரிக் எங்கெல்ஸ், மனிதக் குரங்கிலிருந்து மனிதனாக மாறிய இடைநிலைப் படியில் உழைப்பின் பாத்திரம், 1975, ப.5.
136. எஸ்.ஏ.பெருமாள், மனிதகுல வரலாறு, 2010, ப.63.
137. தாயம்மாள் அறவாணன், தமிழ்ச் சமூகவியல் ஒரு கருத்தாடல், 2002, பக்.4-5.
138. மு.பழநியப்பன், வரலாற்றுக்கு முன் வையகம், 1986, பக்.111-113.
139. எங்கெல்ஸ், குடும்பம் தனிச்சொத்து அரசு ஆகியவற்றின் தோற்றம், 2008, ப.31.
140. வெ.பெருமாள் சாமி, சங்க காலத் தமிழகத்தின் சமூக நிலை, 2007, ப.42.

141. எங்கெல்ஸ், குடும்பம் தனிச்சொத்து அரசு ஆகியவற்றின் தோற்றம்,2008, ப.33.

142. மு.பழநியப்பன், வரலாற்றுக்கு முன் வையகம், 1986, ப.122.

143. எங்கெல்ஸ், குடும்பம் தனிச்சொத்து அரசு ஆகியவற்றின் தோற்றம்,2008, ப.200.

144. ந.சி.கந்தையாபிள்ளை, இந்து சமய வரலாறு, 2003, ப.1.

145. சனல் இடமருகு, தமிழில்: த.அமலா, வேதங்கள் ஓர் ஆய்வு, 2010, ப.81.

146. மேலது, ப.78.

147. மேலது, ப.77.

148. தமிழண்ணல், தொல்காப்பியர், 2001, பக்.68-69.

149. இளம். (உரை ஆ.), தொல்காப்பியம் புறத்திணையியல் உரைவளம், 2001, ப.26.

150. இளம். (உரை ஆ.), க.வெள்ளைவாரணன் (உரைவள ஆசிரியர்), தொல்காப்பியம் புறத்திணையியல் உரைவளம், 2001, ப.5.

151. மேலது, ப.87.

152. நச்சி. (உரை ஆ.), மேலது, ப.88.

153. இளம். (உரை ஆ.), மேலது, ப.26.

154. நச்சி. (உரை ஆ.), மேலது, ப.28.

155. இளம். (உரை ஆ.), மு.அருணாசலம்பிள்ளை (உரைவள ஆசிரியர்), தொல்காப்பியம் பொருளதிகாரம் அகத்திணையியல், 1994, ப.176.

156. நச்சி. (உரை ஆ.), மேலது, ப.178.

157. P.T.Srinivasa Iyengar, History of Tamils, 1929, P.80.

158. மு.பழநியப்பன், வரலாற்றுக்கு முன் வையகம், ப.122; பிரபாகர் சான்ஸ்கிரி, மனிதக் கதை, பக்.113-114.

159. இளம். (உரை ஆ.), மு.அருணாசலம்பிள்ளை (உரைவள ஆசிரியர்), தொல்காப்பியம் பொருளதிகாரம் அகத்திணையியல், 1994, ப.176.

160. நச்சி. (உரை ஆ.), மேலது, ப.178.

# துணைநூல்கள்

தமிழ் நூல்கள்

1. அப்பாத்துரை, கா., குமரிக் கண்டம் அல்லது கடல்கொண்ட தென்னாடு, பூம்புகார் பதிப்பகம், சென்னை-600108, 2004.
2. அரசு, வீ. (செவ்விதாக்கம் செய்தவர்), தமிழ்-ஆங்கிலம், ரிக் வேதம், தொகுதி-1, அலைகள் வெளியீட்டகம், சென்னை-24, 2004.
3. அரசு, வீ. (செவ்விதாக்கம் செய்தவர்), தமிழ்-ஆங்கிலம், ரிக் வேதம், தொகுதி-2, அலைகள் வெளியீட்டகம், சென்னை-24, 2004.
4. அரவிந்தன், மு.வை., உரையாசிரியர்கள், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1968.
5. அன்தோனவா, கொ.அ., போன்காரத்-லேவின், கி.ம., கத்தோவ்ஸ்கி,கி.கி., தமிழில்: பூ.சோமசுந்தரம், இந்தியாவின் வரலாறு, முன்னேற்றப் பதிப்பகம், மாஸ்கோ, 1979.
6. ஆண்டியப்பன், தே., தொல்காப்பியம்-பொருளதிகாரம், பரணி வெளியீடு, மதுரை-14, 2001.
7. இராகவையங்கார், மு., தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி, மதுரைத் தமிழ்ச் சங்கத்துப் பிரசுரம், மதுரை-1, 1928.
8. இலக்குவனார், சி., தொல்காப்பிய ஆராய்ச்சி, அபிராமி பதிப்பகம், சென்னை-13, (ஆண்டு இல்லை).
9. எங்கெல்ஸ், பி., குடும்பம் தனிச்சொத்து அரசு ஆகியவற்றின் தோற்றம், பாரதி புத்தகாலயம், சென்னை-18, 2008.
10. எங்கெல்ஸ், பி., மனிதக் குரங்கிலிருந்து மனிதனாக மாறிய இடைநிலைப் படியில் உழைப்பின் பாத்திரம், முன்னேற்றப் பதிப்பகம், மாஸ்கோ, 1975.
11. ஐயம்பெருமாள், ப., தமிழக வானவியல் சிந்தனைகள், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-600113, 2006.
12. கந்யைாபிள்ளை, ந.சி., ஆரியர்-தமிழர் கலப்பு, முத்தமிழ் நிலையம், சென்னை-1, 1946.
13. கந்யைாபிள்ளை, ந.சி., தமிழர் சரித்திரம், ஒற்றுமை ஆபீஸ், தியாகராயநகர், மதராஸ், இரண்டாம் பதிப்பு, 1947.

14. கந்தையாபிள்ளை, ந.சி., இந்து சமய வரலாறு, விழுதுகள் பதிப்பகம், திருவொற்றியூர், சென்னை-600019, இரண்டாம் பதிப்பு, 2003.

15. கார்த்திகேசு சிவத்தம்பி, பண்டைத் தமிழ்ச் சமூகம் - வரலாற்றுப் புரிதலை நோக்கி..., நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., அம்பத்தூர், சென்னை-98, 2010.

16. கோசாம்பி, டி.டி., தமிழாக்கம்: ஆர்.எஸ்.நாராயணன், பண்டைய இந்தியா, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., அம்பத்தூர், சென்னை-98, மூன்றாம் பதிப்பு, 2008.

17. சண்முகநாதன், ஐ., கற்காலம் முதல் கம்ப்யூட்டர் காலம் வரை உலக வரலாறு, பூம்புகார் பதிப்பகம், சென்னை-108, மூன்றாம் பதிப்பு, 2009.

18. சனல் இடமருகு, தமிழில்: த.அமலா, வேதங்கள் ஓர் ஆய்வு, அலைகள் வெளியீட்டகம், சென்னை-24, இரண்டாம் பதிப்பு, 2010.

19. சார்லஸ் டார்வின், தமிழச் சுருக்கம்: ராஜ் கௌதமன், இயற்கையின் தேர்வின் வழியாக உயிரினங்களின் தோற்றம், விடியல் பதிப்பகம், கோயம்பத்தூர்-641015, 1985.

20. சுப்பிரமணிய பிள்ளை, கா., இலக்கிய வரலாறு, பூம்புகார் பதிப்பகம், சென்னை-600108, 2009.

21. தமிழண்ணல், தொல்காப்பியர், சாகித்திய அக்காதெமி வெளியீடு, புது தில்லி, இரண்டாம் பதிப்பு, 2001.

22. தமிழண்ணல், உலகத் தமிழிலக்கிய வரலாறு, (தொன்மை முதல் கி.பி.500 வரை), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-600113, 2004.

23. தாயம்மாள் அறவாணன், தமிழ்ச் சமூகவியல் ஒரு கருத்தாடல், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-600113, 2002.

24. தேவநேயப் பாவாணர், ஞா., தமிழ் இலக்கிய வரலாறு, பூம்புகார் பதிப்பகம், சென்னை-600108, இரண்டாம் பதிப்பு, 2009.

25. தேவநேயப் பாவாணர், ஞா., தமிழ் வரலாறு, பூம்புகார் பதிப்பகம், சென்னை-600108, 2009.

26. தேவ்நாத், சி.எஸ்., உலகம் பிறந்த கதை, நர்மதா பதிப்பகம், தி.நகர், சென்னை-17, 2009.

27. நம்பூதிரிபாத், இ.எம்.எஸ்., தமிழில்: பி.ஆர்.பரமேஸ்வரன், இந்திய வரலாறு, பாரதி புத்தகாலயம், சென்னை-18, இரண்டாம் பதிப்பு, 2009.

28. பழனியப்பன், மு., வரலாற்றுக்கு முன் வையகம், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை-5, 1986.

29. பாலசுப்பிரமணியம், சிற்பி., அமுதன் (பதி.ஆ.), வளமார் கொங்கு வரலாறும் பண்பாடும், உலகத் தமிழச் செம்மொழி மாநாட்டு வெளியீடு, கோவை, 2010.

30. பிரபாகர் சான்ஸ்கிரி, தமிழில்: சு.மாதவ், மனிதக் கதை, பாரதி புத்தகாலயம், சென்னை-18, இரண்டாம் பதிப்பு, 2010.

31. பிள்ளை, கே.கே., தமிழக வரலாறு மக்களும் பண்பாடும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-600113, 2008.

32. பெருமாள், எஸ்.ஏ., மனிதகுல வரலாறு, கஸ்தூரி பதிப்பகம், கோவை-641012, ஏழாவது பதிப்பு, 2010.

33. பெருமாள்சாமி, வெ., சங்க காலத் தமிழகத்தின் சமூகநிலை, பாரதி புத்தகாலயம், சென்னை-18, 2007.

34. மாணிக்கம், வ.சுப., தமிழ்க் காதல், மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம், 2009.

35. மார்க்ஸ், அ., ஆரியக் கூத்து, எதிர் வெளியீடு, பொள்ளாச்சி, இரண்டாம் பதிப்பு, 2009.

36. ராகுல சாங்கிருத்தியாயன், ரிக் வேத கால ஆரியர்கள், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., அம்பத்தூர், சென்னை-98, இரண்டாம் பதிப்பு, 2008.

37. வெள்ளைவாரணன், க., தமிழிலக்கிய வரலாறு - தொல்காப்பியம், அண்ணாமலைப் பல்கலைக்கழகம், சிதம்பரம்,1962.

38. ஜோசப் இடமருகு, தமிழில்: த.அமலா, பிராமண மதம், அலைகள் வெளியீட்டகம், சென்னை-600024, இரண்டாம் பதிப்பகம், 2010.

<u>உரை நூல்கள்</u>

39. அருணாசலம்பிள்ளை, மு., (உரைவள ஆசிரியர்), தொல்காப்பியம் அகத்திணையியல் உரைவளம், மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை, 1994.

40. இளம்பூரணர் (உரை ஆ.), தொல்காப்பியம், எழுத்ததிகாரம், இளம்பூரணம், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடு, சென்னை, 2004.

41. சாமிநாதையர், உ.வே. (உரை ஆ.), குறுந்தொகை, கபீர் அச்சுக்கூடம், சென்னை, நான்காம் பதிப்பு, 1962.

42. சாமிநாதையர், உ.வே. (பதி. ஆ.), பத்துப்பாட்டு மூலமும் மதுரையாசிரியர் பரத்துவாசி நச்சினார்க்கினியர் உரையும், டாக்டர் உ.வே.சாமிநாதையர் நூல்நிலையம், சென்னை-41, 1974.

43. சாமிநாதையர், உ.வே. (பதி. ஆ.), புறநானூறு மூலமும் உரையும் (பழைய உரை), தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1985.

44. சேனாவரையர் (உரை ஆ.), தொல்காப்பியம், சொல்லதிகாரம், சேனாவரையம், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடு, சென்னை, 2004.

45. சோமசுந்தரனார், பொ.வே., (உரை ஆ.), பத்துப்பாட்டு மூலமும் உரையும், தொகுதி இரண்டு, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடு, சென்னை, 2007.

46. சோமசுந்தரனார், பொ.வே., (உரை ஆ.), பரிபாடல் மூலமும் உரையும், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடு, சென்னை, 1964.

47. துரைசாமிப்பிள்ளை, ஔவை சு., (உரை ஆ.), பதிற்றுப்பத்து மூலமும் விளக்கவுரையும், பூம்புகார் பதிப்பகம், சென்னை-600108, 2010.

48. நச்சினார்க்கினியர் (உரை ஆ.), தொல்காப்பியம், எழுத்ததிகாரம், நச்சினார்க்கினியம், கழக வெளியீடு, சென்னை, 1966.

49. நச்சினார்க்கினியர் (உரை ஆ.), தொல்காப்பியம், சொல்லதிகாரம், நச்சினார்க்கினியம், கழக வெளியீடு, சென்னை, 1962

50. நச்சினார்க்கினியர் (உரை ஆ.), தொல்காப்பியம், பொருளதிகார மூலமும் நச்சினார்க்கினியருரையும், பாகம்-ஒன்று, கணேசையர் பதிப்பு, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-600113, 2007.

51. பேராசிரியர் (உரை ஆ.), தொல்காப்பியம், பொருளதிகார மூலமும் பேராசிரியருரையும், பாகம்-இரண்டு, கணேசையர் பதிப்பு, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-600113, 2007.

52. வெள்ளைவாரணன், க., (உரைவள ஆசிரியர்), தொல்காப்பியம் புறத்திணையியல் உரைவளம், மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை, 2001.

53. வேங்கடசாமி நாட்டார், ந.மு., வேங்கடாசலம்பிள்ளை, ஆர். (உரை ஆ.), அகநானூறு, மணிமிடை பவளம், வெ.பெரி.பழ.மு. காசி விசுவநாதன் செட்டியாரால் வெளியிடப் பெற்றது, 1964.

<u>அகராதி, நிகண்டு, கலைக்களஞ்சியம் முதலியன</u>

54. அரங்கசாமி, பழனி., முதலிய பலர் (பதி.ஆ.), பெருஞ்சொல்லகராதி, தொகுதி-3, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1992.

55. இராமசுவாமிப் புலவர், சு.அ., சிறப்புப் பெயர் அகராதி, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடு, சென்னை, 1970.

56. கதிரைவேற்பிள்ளை, நா., தமிழ்மொழியகராதி, ஏசியன் எடுகேஷனல் சர்வீசஸ், புது தில்லி, 1981.

57. கந்தையா, ந.சி., செந்தமிழ் அகராதி, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-600113, 2009.

58. குமாரசுவாமிப்பிள்ளை, அ. சுன்னாகம்., இலக்கியச் சொல்லகராதி, பயனியர் புக் சர்விசஸ், சென்னை-35, 1978.

59. சண்முகம்பிள்ளை, முத்து., முதலிய பலர் (பதி.ஆ.), பெருஞ்சொல் லகராதி, தொகுதி-2, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1989.

60. சிங்காரவேலு முதலியார், ஆ., அபிதான சிந்தாமணி, ஏசியன் எடுகேஷனல் சர்விசஸ், புது தில்லி, 1983.

61. சுப்பிரமணியன், ச.வே., (பதி.ஆ.), தமிழ் நிகண்டுகள், தொகுதி-1, மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம், 2008.

62. தூரன், பெ., (முதன்மை ஆசிரியர்), கலைக்களஞ்சியம், பத்தாம் தொகுதி, தமிழ் வளர்ச்சிக் கழகம் வெளியீடு, சென்னை, 1968.

63. பிங்கல முனிவர், பிங்கல நிகண்டு, கழக வெளியீடு, சென்னை, 1968.

64. வீராசாமி, தா.வே., முதலிய பலர் (பதி.ஆ.), பெருஞ்சொல்லகராதி, தொகுதி-1, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்,1972.

65. ஆசிரியர் பெயரில்லை, கழகத் தமிழ் அகராதி, கழக வெளியீடு, சென்னை, 1969.

66. தமிழ் லெக்சிகன் (தமிழ்ப் பேரகராதி), தொகுதி-3, சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, 1982.

தமிழ் இதழ்

- ‘தீக்கதிர்’, தமிழ் நாளிதழ், 3.3.2010.

ஆங்கில நூல்கள்

67. Fabricius, J.P., Tamil and English Dictionary, Evengelical Lutheran Mission Publishing House, Tranqubar, 1972.

68. Romila Thaper, A History of India, Vol.-1, Penguin, New York, 1982.

69. Srinivasa Iyyangar, P.T., History of Tamils, Sahitya Academi, New Delhi, 1957.

இணையத் தளம்

- Wikipedia, the free encyclopedia – en.wikipedia.org/wiki/Thinai

# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

சென்னை - 600 113

## அண்மை வெளியீடுகள்

| | |
|---|---|
| அறிஞர்கள் பார்வையில் பேரறிஞர் அண்ணா | 145.00 |
| அறிஞர் அண்ணா - மொபசான் சிறுகதைகள் - ஒப்பாய்வு | 160.00 |
| இராசேந்திர சோழன் வெளியிட்ட எசாலம் செப்பேடுகள் | 55.00 |
| கடலடியில் தமிழர் நாகரிகம் | 55.00 |
| படைப்பு நெறிமுறைகள் | 150.00 |
| Comparative Studies in Literary Cultures | 100.00 |
| Sangam Classics : New Perspectives | 105.00 |
| கடற்பொறியியற் கலைச்சொற்கள் (குறுங்கலைக்களஞ்சியம்) | 150.00 |
| அரங்கியல் நோக்கில் கபிலர் பாடல்களில் காணலாகும் கதைமாந்தர்கள் | 100.00 |
| சங்க இலக்கியத்தில் சமூக ஆய்வுகள் | 55.00 |
| தமிழ் வாழ்க்கை வரலாற்றியலக்கியம் | 170.00 |
| கவிஞர் குலோத்துங்கனின் மானுடயாத்திரை காவிய வானில் புதிய தாரகை | 45.00 |
| தமிழ் நாடக வகையும் வரலாறும் | 110.00 |
| வா.செ.கு.என்ற ஆளுமையாளர் | 50.00 |
| உ.வே.சா.வின் குறுந்தொகை உரைத்திறன் | 45.00 |
| மருதத்தில் மக்கள் வாழ்வியல் | 40.00 |
| நன்னூல் உரைவளம் - தொகுதி - 1 பாயிரம் - 1 | 85.00 |
| நன்னூல் உரைவளம் - தொகுதி - 4 எழுத்தியல் - 2 | 140.00 |
| நன்னூல் உரைவளம் - தொகுதி - 2 பாயிரம் - 2 | 75.00 |
| நன்னூல் உரைவளம் - தொகுதி - 6 உயிரீற்றுப்புணரியல் - 1 | 125.00 |
| நன்னூல் உரைவளம் - தொகுதி - 7 உயிரீற்றுப்புணரியல் - 2 | 160.00 |
| நன்னூல் உரைவளம் - தொகுதி - 8 மெய்யீற்றுப்புணரியல் | 160.00 |
| நன்னூல் உரைவளம் - தொகுதி - 9 உருப்புணரியல் | 95.00 |
| நன்னூல் உரைவளம் - தொகுதி - 12 வினையியல் | 190.00 |
| நன்னூல் உரைவளம் - தொகுதி - 13 பொதுவியல் - 1 | 140.00 |
| நன்னூல் உரைவளம் - தொகுதி - 16 இடைச்சொல்லியல் | 90.00 |
| நன்னூல் உரைவளம் - தொகுதி - 17 உரிச்சொல்லியல் | 55.00 |
| நன்னூல் உரைவளம் - தொகுதி - 18 தொல். நன்னூல் | 120.00 |
| பண்டைத் தமிழ் எழுத்துக்கள் (ம.ப.) | 65.00 |
| வல்லம் புராணம் | 200.00 |
| இதழியல் உலகம் | 120.00 |
| தமிழும் தமிழ்க் கற்பித்தலும் | 60.00 |
| படைப்பிலக்கியம் - விளம்புநிலை மக்கள் ஆய்வுநோக்கு | 100.00 |
| பழந்தமிழும் கிளைமொழிகளும் | 65.00 |
| உலக மொழிகளில் தமிழ்ச்சொற்களும் இலக்கணச்கூறுகளும் | 85.00 |
| அரசகுலச் சான்றோர் வரலாறும் மதுரைக்காஞ்சியும் | 115.00 |
| பெயரியல் | 55.00 |
| தமிழ் இசுலாம் உருவாக்கமும் திருக்குர் ஆன் தமிழ் வாசிப்பும் ஆய்வியல் சிந்தனை | 45.00 |
| தலித் அறம் | 45.00 |
| பொதுவுடைமை இயக்க இதழ்கள் | 115.00 |
| தமிழில் இதழியல் | 270.00 |

.................................................................................................

| | |
|---|---|
| 738 திணை வரலாறு | 70.00 |